

KALKI
7.9.97
ரூ. 4.00

# கல்கி

"நான் தெய்வீகக் குழந்தை!"

— உமா பாரதி பேட்டி

## எல்லோருமே அழகாய் இருக்கலாம்!

# வீரப்பனும் நானும்




## 'நக்கீரன்' கோபால்

எழுதும் பரபரப்பான அனுபவத் தொடர்

அடுத்த இதழில் ஆரம்பம்!

பத்தாயிரம் - பதினைந்தாயிரம் ரூபாய் விலை உள்ள பீடா கேள்விப்பட்டிருக்கிறீர்களா? துபாயில் இந்த விலை. மும்பையில் 2000 - 3000 ரூபாய்க்குக் கிடைக்கும் இந்த 'கொக்கெய்ன் பீடா' வைத்தான் அபு சலீம் சுவைத்துக் கொண்டிருப்பான். அது வாயில் இருக்கும்போது, ஒரு மணி நேரத்துக்கு யாரிடமும், எதுவும் பேச மாட்டான்.

அபு சலீம் வேறு யாருமல்ல.

சமீபத்தில் கேசட் மன்னன் குல்ஷன் குமாரைத் தீர்த்துக் கட்டிய கொலைகாரக் கும்பலின் தலைவன். உத்தரப் பிரதேசம் அசாம்கர் நகரைச் சேர்ந்தவன். அவனுடைய அடியாட்களும் இந்த ஊர்க்காரர்கள்தாம்.

தாவூத் இப்ராகிமின் சகோதரன் அனீஸிடம் உதவியாளனாக இருந்து, 'மாமூல்' வசூலில் கை தேர்ந்தவன் என்று பெயர் எடுத்தவன். ட்ரிம்மாக, சினிமா ஹீரோ மாதிரி டிரஸ் செய்து கொள்ளுவான். மும்பை தொடர் குண்டு வெடிப்புகள் வரை, ஜோகேஷ்வரியில், மத்தியதர அடுக்குமாடிக் கட்டடம் ஒன்றில் வசித்தவன் தான் அபு சலீம்.

அதற்குப் பிறகு துபாய்க்குப் போனவன், அனீஸின் பிரம்மாண்ட பங்களாவில் சுகவாசம் செய்யத் தொடங்கினான். மும்பையில் இருக்கும் போது ஏராளமான பெண் - 'நண்பி'கள் இருந்தார்கள். துபாய்க்குப் போன பிறகு, சினிமா நடிகைகளையே வரவழைத்து ஜாலியாக இருக்க ஆரம்பித்தான்!

# மாஃபியா சாம்ராஜ்யம் எப்படி நடக்கிறது?

தாவூத் இப்ராகிமின் 'சாம்ராஜ்யம்' ரொம்பவும் பிரம்மாண்டமானது. நார்கோடிக்ஸ் எனப்படும் போதைப் பொருள் விற்கும் மாஃபியா தொழில்தான், இவர்களுக்கு முதன்மையானது. D - கம்பெனி என்று குறிப்பிட்டால் அது தாவூத் இப்ராகிமைத்தான் குறிக்கும். மும்பை தவிர பாங்காக், பாகிஸ்தான், துபாய் என்று மூன்று நாடுகளில் இவர்கள் கூடாரம் இருக்கிறது. சுமார் இரண்டு டஜன் புள்ளிகள் இவனுக்கு உதவியாக இருக்கிறார்கள்.

கட்டடங்கள் கட்டுமானப் பணியில் இருக்கிறான் தாவூதின் சகோதரன் இக்பால்.

ஃபைனான்ஸ் நிறுவனத்தைப் பார்த்துக் கொள்ள யாகூப் மெமோன். (பம்பாய் வெடி குண்டு வழக்கில் சிக்கிக் கொண்டிருப் பவன்.)

பிலிம் கம்பெனி, வீடியோ - ஆடியோ தியேட்டர்களை நிர்வகிப்ப வன் தாவூதின் இன்னொரு சகோதரன் நூரா இப்ராகிம்.

வெளிநாட்டு விவகாரங்களைக் 'கவனிக்க', தாவூதின் மிகுந்த நம்பிக்கைக்கு உரிய அனீஸ், டைகர் மெமோன். இதில் உள்ள பலருக்கும் பாகிஸ்தானின் ISI ஆட்கள் தாம் பயிற்சி கொடுக்கிறார்கள். இவர்கள் எல்லாருமே நவீனரகத் துப்பாக்கியைக் கையாளுவதில் தேர்ந்தவர்கள். பாதுகாப்பு, கள்ளக் கடத்தல், கூலிக்கு ஆட்களைக் கொல்லுகிற வேலை எல்லாம், துபாயிலிருந்து தாவூதே பார்த்துக் கொள்ளுகிறான். இவனுக்குக் கூடவே இருந்து உதவ, இவனுடைய இளமைக்கால நண்பர்கள், தாவூதின் சொந்த கிராமமான நாக்பாராவிலிருந்து வந்திருக்கிறார்கள்.

பாகிஸ்தானிலுள்ள மெஹர்பான் பாங்க், வெளிநாடுகளில் ISI செய்யும் வேலைகளுக்குப் பண உதவி செய்கிறது. வியன்னாவிலிருந்து ஆர்.டி.எக்ஸ். வாங்கி வர இந்த வங்கியின் லண்டன் கிளைதான் உதவியது. தாவூதின் சகோதரன் அனீஸ்தான்



• தாவூத் இப்ராகிம்

இந்தப் பேரத்தை முடித்தான். பம்பாயிலிருக்கும் நூற்றுக்கணக்கான அடியாட்களுக்கு இந்த வங்கியிலிருந்துதான் பணம் பட்டுவாடா ஆகியிருக்கிறது. கிட்டத்தட்ட தாவூத் இப்ராகிமின் வங்கி போலத்

தான் இது!

பல நாடுகளில் போதை மருந்துகள் கடத்தலில் ஈடுபட்டிருந்த தாவூத் இப்ராகிமின் வருமானம், அந்த நாடுகளின் கெடுபிடி காரணமாகக் கணிசமாகக் குறைந்து போயிற்று.

இரண்டு வருடங்கள் முன்பு இந்த மாஃபியா கும்பலின் பார்வை, பெரிய பெரிய பில்டிங் காண்ட்ராக்டர்கள் மீது



விழுந்தது. ரியல் எஸ்டேட் வியாபாரத்தில் பணம் நிறைய வந்து கொண்டிருந்த சமயம் அது. அவர்களைப் பயமுறுத்திப் பணம் கறந்து கொண்டிருந்தது இந்தக் கும்பல். இதில் பல பில்டர்கள் கொல்லப்பட்டார்கள். அதனால் மற்றவர்கள் பயந்து கொண்டு, பணத்தை அழுதார்கள்.

ஒரு வருடத்துக்குப் பிறகு ரியல் எஸ்டேட் மார்க்கெட் படுத்ததும், இந்தக் கும்பலின் பார்வை சினிமா தயாரிப்பாளர்கள் மீது விழுந்தது. காரணம், ஹவாலா வழியும் கொஞ்சம் கொஞ்சமாக அடைந்து போயிற்று. திருமணங்களுக்கும், ஷார்ஜா கிரிக்கெட் போட்டிகளுக்கும் அழைத்து, அவர்களுடன் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டது.

மும்பையிலுள்ள தாவூத் இப்ராகிமின் அடியாட்களுக்கு, துபாயிலிருந்தோ, கராச்சியிலிருந்தோ ஒரு ஃபோன் கால் பறக்கும். அவர்கள் படத் தயாரிப்பாளர்களையோ, ரியல் எஸ்டேட்காரர்களையோ அழைத்து, 'பாய் உங்களிடம் பேச விரும்புகிறார்' என்று ஒரே வரியில் சொல்லி விடுகிறார்கள். பயந்து நடுங்கிக் கொண்டு அவர்களும் ஃபோன் கால் போட்டுப் பேசுவர். இன்ன இடத்தில், இன்ன நபரிடம் பணம் கொடுக்க வேண்டும் என்று உத்தரவாகிவிடும்!

தாவூதின் D- கம்பெனிக்குத் திடீரென்று பணப் பற்றாக்குறை வரக் காரணம் இருந்தது. தாவூதின் சகோதரர் அனீஸை பாஹ்ரெய்ன் போலீசு கள்ளக் கடத்தல் குற்றத்துக்காகக் கைது செய்த பிறகு, தாவூத் இப்ராகிம் 15 கோடி ரூபாய் வரை செலவழிக்க வேண்டி வந்தது, அவனை விடுவிக்க. அதனால் துபாயிருந்து பம்பாய்க்குப் பணவரத்து அடியோடு குறைந்து போயிற்று.

கடந்த சில வருடங்களாகவே பெரிய பட்ஜெட் படங்கள் 5 கோடி - 10 கோடி ரூபாயைத் தாண்டியதும், தயாரிப்பாளர்கள் இந்த மாஃபியா கும்பலைத்தான் உடனடித் தேவைக்கு நாடினார்கள்.



• மெமோன்

புரோக்கர்கள், சினிமா நடிகர் - நடிகைகள் மீது மோகம் கொண்ட மாஃபியா தலைவர்களிடம் நைச்சியமாகப் பேசி, வேண்டிய பணத்தைக் கொடுக்கச் செய்தார்கள்.

எந்த நடிகரோ நடிகையோ தேதி கொடுக்காமல் சாக்குப் போக்குச் சொன்னால், தயாரிப்பாளர் துபாய்க்கு ஒரு போன் கால் போட்டால் போதும். தகராறு செய்யும் நடிகரோ, நடிகையோ அலறிப் புடைத்துக் கொண்டு தேதி கொடுத்து விடுவார்கள்!

தனிப்பட்ட சினிமா ஃபைனான்ஷியர்களிடமிருந்து பணம் பெற்று வந்த தயாரிப்பாளர்களும், படம் ஊத்திக் கொண்டது என்று தெரிந்தால், ஒதுங்க ஆரம்பித்தார்கள். ஏனென்றால், பணத்தைத் திரும்பப் பெற, பைனான்ஷியர்களும் இந்த 'டான்'களைத்தான் நாடினார்கள்.

"எல்லாருமே அப்படி ஒன்றும் 'டான்'களின் உதவியை நாடவில்லை!" என்று திரைப்பட - டீவி, புரோகிராம் தயாரிப்பாளர் சங்கச் செயலர் அனில் நாகரத் சொல்கிறார். டயமண்ட் வியாபாரிகள் பரத் ஷாவும், தினேஷ் காந்தியும் பெரும்பாலான படத் தயாரிப்பாளர்களுக்கு உதவுகிறார்கள் என்பது இவரது வாதம்.

சுமார் 15000 செக்யூரிடி ஆட்கள் வைத்திருக்கும் பம்பாய் 'டாப்ஸ் செக்யூரிடி' நிறுவனம்தான், பெரிய பெரிய தொழிலதிபர்கள், சினிமா உலகப் பிரமுகர்களுக்குப் பாதுகாப்பு அளித்து வருகிறது. "எங்களிடம் 600 கஸ்டமர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒருவரும் நாங்கள் சொல்வதைக் கேட்பதே இல்லை. இத்தனை பணம் செலவழிக்கிறார்களே, ஐம்பதாயிரம் ரூபாய் கொடுத்து ஒரு புல்லட்-ப்ரூஃப் ஜாக்கெட் வாங்கி அணிந்து கொள்ள மாட்டார்களோ!" என்கிறார் டாப்ஸ் செக்யூரிடி அதிபர் ராகுல் நந்தா.

பிராப்பர்ட்டி கார்ட்ஸ் நிறுவன அதிபர் விகாஸ் வர்மாவும் இதைத்தான் சொல்லுகிறார். "மும்பையில் 35000 போலீசார் இருக்கிறார்கள். எங்களிடம் 10,000 பேர் வேலை பார்க்கிறார்கள். இரண்டு பேரும் ஒருங்கிணைந்து செயல்பட்டால் நிச்சயம் பலன் கிடைக்கும்!" என்கிறார் விகாஸ்.

— நம்பி

# நான் தெய்வீகக் குழந்தை!

**பெண்களுக்கு இடஒதுக்கீடு பற்றிய விவாதத்தில், அதனை ஆதரித்துப் பேச சென்னை வந்திருந்தார் பாரதீய ஜனதா கட்சி எம்.பி.யான உமா பாரதி. காவி உடை தரித்த சன்யாசினி. இந்தி அளவுக்கு ஆங்கிலம் சரளமாய் வராது என்று கூறினாலும் கல்கிக்கு அவர் பேட்டியளித்த போது அழகான, தெளிவான ஆங்கிலத்தில், பளீரென்று பதில்கள் வந்தன....**



**"பிற்காலத்தில் ஒரு சன்யாசினியாகவும், அரசியல் வாதியாகவும் ஆவோம் என்று நீங்கள் எப்போதாவது நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா?"**

"நான் அரசியல் பின்னணி கொண்ட குடும்பத்திலிருந்து வந்தவள் அல்ல. எனது சொந்த ஊர் மத்திய பிரதேசத்தில் உள்ள ஒரு சிறு ஊர். பெயர் துாண்டா. அங்கே என் அப்பாவும், அம்மாவும் விவசாயம் செய்து பிழைத்தார்கள். இருவருக்குமே கல்வி அறிவு கிடையாது. பிற்படுத்தப்பட்ட இனம். "எனக்கு நாலைந்து வயது இருக்கும்போதே என்னுடைய ஞாபக சக்தி வெகு அபாரமாயிருந்தது. ஊரில் பெரியவர்கள் சொல்லும் ராமாயண, பகவத் கீதை ஸ்லோகங்களையெல்லாம் செவிவழியே கேட்டு, மனப்பாடமாகி விட்டது. நான் அந்த ஸ்லோகங்களையெல்லாம் அட்சரம் பிசகாமல் சொல்வதைப் பார்த்துவிட்டு, அந்த



கிராமமே பிரமித்தது. விஷயம் அயலூர்களுக்குப் பரவி, பலரும் என்னைப் பார்க்க திரளாய் வரத் துவங்கினர். 'தெய்வீகக் குழந்தை'யாய் நான் கருதப்பட்டேன்.

**"உங்களுக்கு ஏதாவது தெய்வீகத் தன்மை ஏற்பட்டிருப்பதாக நீங்கள் நினைத்தீர்களா?"**

"இல்லை. ஆனால் சூரியக் கடவுள் மீது எனக்கு ஒரு பிடிமானம் ஏற்பட்டது. காலையில் எழுந்தவுடன் என் முதல் வேலை, சூரியனைத் தொழுவதுதான். எனக்கு ஏழெட்டு வயதான போது (குவாலியர் மகாராணி) ராஜ்மாதா விஜய்ராஜ சிந்தியா என்னை வந்து பார்த்தார். என்னை அவருக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது. தம்முடைய அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டார். தம் அரண்மனையிலேயே தங்க வைத்தார். ஒரு கார், அதற்கு ஒரு டிரைவர், என் பணிகளுக்கு உதவியாய் ஒரு செகரட்டரி எல்லாம் கொடுத்தார்."

**"அப்புறம் என்ன ஆயிற்று?"**

"என்னை ஆர்.எஸ்.எஸ். தலைவரிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தினார். பத்து வயதாக இருக்கும்போது, தேர்தலில் ஜனசங்கிற்கு ஆதரவாக நான் பிரசாரத்தில் ஈடுபட்டேன்!"

**"ஒரு பத்து வயது சிறுமிக்குத் தேர்தலில் பிரசாரம் செய்யும் அளவுக்கு என்ன அரசியல் ஞானம் இருக்கும்?"**

"அரசியல் என்றால் என்னவென்று எனக்குத் தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால் ஏழைமை என்றால் என்ன என்று எனக்குத் தெரியும். அநீதி, துயரம் எல்லாம் நான் அறிந்தவை. அவற்றைப் போக்கப் பாடுபடும் அமைப்பு 'ஜனசங்க்' என்று பிரசாரம் செய்தேன்."

**"துறவு வாழ்க்கையை மேற்கொண்டது ஏன்?"**

"எனக்குப் பதினாறு வயதானபோது, சந்யாசினி ஆக விரும்பினேன். ஆனால் 1977-ல் சன்யாசினியாவதற்கு வயது போதாது என்று என் குருஜி சொல்லி விட்டார். அதனால் சன்யாசத்தின் முதல் கட்டமாக பிரம்மச்சாரிணி ஆனேன். அதைத் தொடர்ந்து அயல்நாட்டுப் பயணம். மதரீதியிலான சொற்பொழிவுகள் - படு பிஸியான நேரம். ஆனாலும் என் தாயைப் பார்ப்பதற்காக, சில மாதங்களுக்கு ஒரு தடவை இந்தியா வந்து போவேன். சுமார் ஐம்பது நாடுகளில் சமயச் சொற்பொழிவுகள் முடித்துவிட்டு, 80ல் இந்தியா திரும்பினேன்."

**"அரசியலுக்கு வந்தது எப்படி?"**

"வந்த சில மாதங்களிலேயே எனக்கு நெருக்கமான எனது தாயார் மரணமடைந்தார். என் கிராமத்தில், என் தாயின் ஆன்மா தங்கியிருப்பதாக நான் நம்பினேன். அந்த வீட்டிலேயே வசிக்கத் துவங்கினேன். அப்போது கிராம மக்களின் பிரச்னைகளை நான் அருகில் இருந்து பார்த்தேன். அரசியல்வாதிகளின் அலட்சியம், அதிகாரிகளின் பொறுப்பற்ற தன்மை, மக்களின் வறுமை, அறியாமை இவை என்னை வெகுவாக பாதித்தன. சமயப் பணிகளுக்கு தாற்காலிக ஓய்வு கொடுத்துவிட்டு, அந்த மக்களுக்காகப் பணிபுரியத் தொடங்கினேன். அதுவே எனது அரசியல் பிரவேசத்தின் துவக்கம்!"

**"பா.ஜ.க.வில் சேரத் தூண்டியது, உங்களது பழைய ஜனசங்க் தொடர்புதானா?"**

"அதுதான் இல்லை. ஏழைகளின் அருகில்

— உமா பாரதி பேட்டி

இருந்து அவர்கள் பிரச்னைகளை அறிந்தபோது எனக்கு கம்யூனிசத்தின் மீதுதான் பற்று ஏற்பட்டது. அந்தக் காலகட்டத்தில் கார்ல் மார்க்ஸில் ஆரம்பித்து அத்தனை கம்யூனிச சித்தாந்த புத்தகங்களையும் நான் படித்தேன். நக்ஸலைட் இயக்கங் களைப் பற்றி நிறைய தெரிந்து கொண்டேன். அந்த கால கட்டத்தில் காங்கிரஸ் தலை வர்களும், இடதுசாரி களும் தங்கள் கட்சி சார்பில் தேர்தலில் போட்டியிடும் படி சொன்னார்கள். ஆனால் ராஜ்மாதாவின் ஆலோசனைப்படி நான் அந்த வாய்ப்புகளை மறுத்து விட்டேன்."

**"பா.ஜ.க. உங்க ளுக்கு சீட் கொடுத் ததா?"**

"ஆம்! முதல் தடவை பா.ஜ.க. வேட் பாளராகப் போட்டி யிட்டுத் தோல்வி அடைந்தேன்."

**"சந்நியாசினி யானது எப்போது?"**

"1992-ல் பெஜாவர் மடாதிபதியிடமிருந்து சன்யாசம் பெற்றுக் கொண்டேன். முழு நேர அரசியலிலும் ஈடு படத் துவங்கினேன்."

**"ஓர் அரசியல் வாதி என்ற முறையில் சொல்லுங்கள். இந்தியா கடந்த 50 ஆண்டுகளில் எவ் வளவு முன்னேறியுள் ளது?"**

"என்னைப் பொறுத் தவரை, எனது கிராமம் தான் எனக்கு வளர்ச்சியைக் கணக்கிடும் தர்மாமீட்டர். கடந்த ஐம்பது ஆண்டுகளில் ஏழை இன்னும் ஏழையாகி யிருக்கிறான். பணக்காரன் இன்னும் பணக்காரனாகியிருக்கி றான். இவர்களுக்கு இடையிலான இடைவெளி அதிகரித்துக் கொண்டே போகிறது. நம் நாட்டில் முன்னேறியவர்கள் வெறும் பதினைந்து சதவீதம்தான். இந்தப் பதினைந்து சதவீதக் கணக்கு எல்லா பிரிவுகளுக்கும் பொருந்தும். அதாவது தாழ்த்தப்பட்ட மக்களை எடுத்துக் கொண்டால், பதினைந்து சதவீதம் பேர் முன்னேறியுள்ளனர். பிற்படுத்தப்பட்டவர் களில் அதே போல பதினைந்து சதவீதம். இப்படி எல்லா தரப்பிலும் இன்னும் முன் னேறாதவர்கள் 85 சதவீதம் இருக்கிறார்கள்."

**"இந்தியாவைப் பொறுத்தவரை ஒரு கட்சி ஆட்சி என்பது முடிந்து போன அத்தியாயம் என்று நினைக்கிறீர்களா?"**

"காங்கிரஸ் கட்சி ஆட்சி என்பதுதான் முடிந்த அத்தியாயம். இழந்த ஆட்சியை காங் கிரஸால் மீண்டும் பிடிக்க முடியாது. கூட்டணி ஆட்சியும் நமக்கு ஏற்றதல்ல என்பது நிரூபண மாகிக் கொண்டிருக்கிறது. நிலையான, நல்லாட் சியை பா.ஜ.க.வால் மட்டுமே தர முடியும். என் கணிப்புப்படி இன்னும் எட்டு ஆண்டுகளில், தனிப் பெரும் கட்சியாய் பா.ஜ.க. ஆட்சியைப் பிடிக்கும். சமீபத்திய சர்வேபடி, காந்திஜி, நேரு வையடுத்து, இந்திய மக்களின் சாய்ஸ் அடல் பிகாரி வாஜ்பாயிதான்."

**"இன்று அரசியலின் தரம் குறைந்து போன தற்கு என்ன காரணம் என்று கருதுகிறீர்கள்?"**

"ஜாதி அரசியல்தான். அடுத்த காரணம் நெபோடிஸம் என்கிற - நெருக்கமானவர் களுக்குச் சலுகை காட்டுவது."

**"பி.ஜே.பி. நடத்துவது மத அரசியல் தானே! அது மட்டும் சரியா?"**

"பா.ஜ.க. அயோத்தி பிரச்னையை எடுத்துக் கொண்டதால், இப்படி ஒரு கருத்து ஏற்பட்டு விட்டது. முஸ்லிம்களின் நெம்பர் ஒன் எதிரி என்று சிவசேனாவையும், நெம்பர் டூ எதிரி என்று பா.ஜ.க.வையும் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் இருவரும் சேர்ந்து மூன்றாண்டு களாக மகாராஷ்டிராவை ஆளுகிறார்களே! எந்த முஸ்லிமாவது அங்கே பாதுகாப்பு இல்லை என்று மாநிலத்தை விட்டு வெளியேறி யிருக்கிறாரா? இல்லை பா.ஜ.க. ஆளுகிறது என் பதற்காக டெல்லியை விட்டு முஸ்லிம்கள் இடம்பெயர்ந்து விட்டார்களா?"

**"ஒவ்வொரு வருடமும் சென்னையில் விநாயகர் சதுர்த்தி ஊர்வலம் நடப்பது பெரும் சர்ச்சைக்குள்ளாகிறது. இது பற்றி உங்கள் கருத்து என்ன?"**

"விநாயகர் ஊர்வலத்தை எதிர்ப்பவர்கள் முஸ்லிம்கள் இல்லை. ஏன் இப்படிச் சொல்லு கிறேன் என்றால், நாங்கள் கர்நாடகாவில் - ஹூப்ளியில் சுதந்தரதினக் கொடி ஏற்ற முயன்றபோது, அதை முஸ்லிம்கள் எதிர்க்க வில்லை. 'கொடி ஏற்ற வேண்டும். அதை ஏற்று வது முஸ்லிம் என்றாலும் எங்களுக்குச் சம் மதமே!' என்பது எங்கள் நிலைப்பாடு. கொடி

**"யார் வீட்டுக்குப் போனாலும் வெறும் கையோடு போகாதே!"**

**"சரி."**



**"ஏதாவது குடுத்தால் வாங்கிட்டு வர ஒரு துணிப் பையாவது கொண்டுபோ!"**

**- பர்வத வர்த்தினி**

யேற்றுவதை எதிர்த்தவர் வீரப்ப மொய்லிதான். தொடர்ந்து தேவேகௌடா முதல்வரானதும், முஸ்லிம்கள் ஒத்துழைப்புடன் அவர் கொடி ஏற்றினார் என்பதை மறந்து விடக் கூடாது. பா.ஜ.க. முஸ்லிம்களுக்கு எதிரானது என்றால், என்னை ஏன் பல முஸ்லிம் பெண்கள் கருத்தரங்குகளுக்கும், மாநாடுகளுக்கும் பேச அழைக்கிறார்கள்?

"ஆக, முஸ்லிம்களுக்கு, பிரச்னை இந்துக்கள் அல்ல; இந்துக்களுக்குப் பிரச்னை முஸ்லிம்களல்ல. இருதரப்பினருக்குமே வி.பி.சிங், கன்ஷிராம், கருணாநிதி, ஜோதிபாசு போன்ற அரசியல்வாதிகள்தான் பிரச்னை. தமக்குள் எந்தப் பிரச்னை வந்தாலும் இருதரப்பையும் சேர்ந்த உண்மையான மதத்தலைவர்கள் மட்டும் நேரடியாகப் பேச்சு வார்த்தை நடத்தினால் சுலபமாகத் தீர்வு காண முடியும்."

**"இந்த தத்துவம் அயோத்திக்கும் பொருந்து மல்லவா?"**

"எஸ். நிச்சயம் பொருந்தும். அயோத்தி பிரச்னை பற்றி இருமதத் தலைவர்கள் மட்டும் - பி.ஜே.பி. உட்பட அனைத்து கட்சியையும் கிட்டே நெருங்க விடாமல் - பேசி, பிரச்னையை தீர்த்துக் கொள்ளலாம். அயோத்தி மட்டுமில்லை காசி, மதுராவில் கூட நல்ல முடிவு கிடைக்கும். ஓர் அரசியல்வாதி இப்படிப் பேசுவது உங்களுக்கு வியப்பாக இருக்கலாம்."

**"உங்கள் வாழ்க்கையில் மறக்க முடியாத அனுபவம் என்று எதைச் சொல்லலாம்?"**

"மறக்க முடியாத விஷயங்கள் என் வாழ்க்கையில் ஏராளம். 1990ல் (முதல் முறை) அயோத்திக்கு கரசேவை புரிய பக்தர்கள் வரத் திட்டமிட்டிருந்த சமயம். உமாபாரதி, உ.பி. எல்லைக்குள் காலடி வைத்தால், மறுநிமிடமே கைது செய்யுங்கள் என்று உத்தரவிட்டிருந்தார் முதல்வர் முலாயம் சிங். நானும் சவாலை ஏற்றுக் கொண்டு, முலாயமுக்கு ஒரு கடிதம் எழுதினேன். கடிதத்தைப் பார்த்து வெகுண்ட முலாயம், கண்ட இடத்திலேயே என்னைச் சுட உத்தரவிட்டார்.

"ஆனால், நான் சவாலில் தோற்றேன். உ.பி.க்குள் நுழைந்த சிறிது நேரத்திலேயே கைது செய்யப்பட்டேன். அந்தக் கணம் நான் மிகவும் குறுகிப் போனேன். என் தலையை மொட்டையடித்துக் கொண்டு, ஆண் போல உடையணிந்து கொள்ளுமளவுக்கு என் மீதே எனக்கு வெறுப்பு. திட்டமிட்டு, எனக்கு சிறைக்குள் உணவு கொண்டு வந்தவர் மூலம் தப்பித்து, இரவோடு இரவாக கார் ஒன்றை எடுத்துக் கொண்டு, சிறை வைக்கப்பட்டிருந்த சர்க்யூட் ஹவுசிலிருந்து அயோத்திக்குப் புறப்பட்டேன். காரை ஓட்டியது நான்தான். போகிற வழியில் ஒரு கி.மீக்கு ஒன்று என்று அமைக்கப்பட்டிருந்த அத்தனை செக் போஸ்ட்களிலும் சொல்லி வைத்தாற்போல, போலீஸ்காரர்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நாங்களாகவே செக் போஸ்ட் தடுப்பை உயர்த்தி விட்டு, பயணத்தைத் தொடர்ந்து அயோத்தியை அடைந்தோம். அங்கே என்னைக் கண்ட பத்திரிகையாளர்களுக்கு ஷாக். முலாயமைக் கேட்டால், உமா பாரதி சிறையில் இருப்பதாகக் கூறினார். அதன் பின் விஷயம் தெரிந்து ஒரே பரபரப்பு. மறுபடி கைது ஆனேன். இதை என்னால் மறக்கவே முடியாது."

**"அயோத்தியில், பாபர் மசூதி இடிக்கப்பட்ட சமயம் நீங்கள் அங்கேதானே இருந்தீர்கள். அப்போது உங்கள் மனநிலை எப்படி இருந்தது?"**

"ஐநூறு ஆண்டு கால போராட்டம். பலரது உயிர்த் தியாகம் எல்லாம் இதற்குத்தானே? இன்று அந்த மசூதி தரைமட்டமாகி விட்டதா என்று முதலில் என்னால் நம்ப முடியவில்லை. அதே நேரம் போரில் வெற்றி பெற்ற வீரனைப் போல என் மனத்தில் மகிழ்ச்சியும் ஏற்பட்டதை நான் மறைக்க விரும்பவில்லை. சராசரி இந்தியனின் மனத்தில் இது சோகத்தை ஏற்படுத்துமே என்று நினைத்த போது வருத்தமாக இருந்தது. மற்ற அரசியல் கட்சிகள் இதை வைத்து ஆதாயம் தேடுவார்களே; நாடு முழுக்க வன்முறை தலைவிரித்தாடுமே என்று எண்ணியபோது, பயத்தில் முதுகுத்தண்டு சில்லிட்டது. மொத்தத்தில் வார்த்தையில் விவரிக்க முடியாத ஒரு குழப்பமான உணர்வு என் மனத்தில் இருந்தது.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

வண்ணப்படங்கள் : **ஸ்ரீஹரி**

**"நம்ம தலைவரு இன்னும் பழசை யெல்லாம் மறக்கலை..."**

**"எதை வச்சி சொல்ற...?"**



**கழுத்துல போட்டுக்குற தங்க செயினைக் கூட 'சைக்கிள் செயின்' மாடல்ல செஞ்சு போட்டிருக்கிறாருன்னா பார்த்துக் கோயேன்_!"**

**— பட்டுக் கோட்டை அழகன்**

# ‘அதிசய ராகம்’ மலர்ந்தது; ‘இளையநிலா’ பொழிந்தது!



**எம்.**ஜி.ஆர். - சிவாஜிகணேசன் இருவரும் இணைந்து தோன்றினால் அந்த நாளில் ஏற்பட்டிருக்கக்கூடிய பரபரப்பை ஏற்படுத்த முயன்றிருந்தார்கள் லஷ்மண் ஸ்ருதி இசைக் குழுவினர் - யேசுதாஸையும், எஸ். பி. பாலசுப்ரமணியத்தையும் ஒரே மேடையில் பாடவிட்டு. நல்லவேளை ரிசல்ட் 'கூண்டுக்கிளி'யைப் போல இல்லை. நான்கு மணி நேரங்களுக்கு மேல் 'அதிசய ராகம், ஆனந்த ராகம்' மலர்ந்தது; 'இளைய நிலா' பொழிந்தது.

தொடக்கத்தில் கொஞ்சம் "அன்-ஈஸி"யாக தென்பட்ட யேசுதாஸ் பிறகு சூழ்நிலைக்குத் தகுந்த மாதிரி கச்சிதமாகப் பொருந்தி விட்டார். அவர் அருகில் இருந்ததாலா அல்லது கங்கை அமரன் அருகில் இல்லாததாலா என்று தெரியவில்லை, பாலு வெகு கண்ணியமாக நிகழ்ச்சியை மானேஜ் செய்தார்.

மிக அதிகமான பார்வையாளர்களைப் பெற வேண்டும் என எண்ணிய அமைப்பாளர்கள் நேரு விளையாட்டு அரங்கத்தைத் தேர்ந்தெடுத்ததில் தவறு காண முடியாது (8,500 பேர் அமரலாமாம் - அன்று ஹவுஸ்புல்). ஆனால் இதுவரை எந்த மெல்லிசை நிகழ்ச்சியிலும் காணமுடியாத ஒரு காட்சியை இங்கு காண நேர்ந்தது. அரங்கிற்கு எதிரே கீழ்த்தளத்தில் அமர்ந்திருந்தவர்களோடு, வட்டவடிவமான 'காலரி' முழுவதும் கூட மக்கள் வெள்ளம். இதனால் காலரியில் ஒரு திசையில் அமர்ந்திருந்தவர்களுக்கு அதிருப்தி - எப்போதும் பாடகர்களின் பின்புறத்தையே பார்க்க வேண்டி வந்ததால்.

"நான் ஆட்டோக்காரன்" (பாட்ஷா) மற்றும் "ப்ரமதவனம்" (ஹிஸ் ஹைனஸ் அப்துல்லா) வெவ்வேறு அலைவரிசை கொண்ட இரண்டு பாடல்களையும் மூச்சுவிடாமல் பாடி, முறையே பாலுவும் யேசுதாஸும் தங்களை நிரூபித்துக் கொண்டார்கள். அதே சமயம் "க்ளாஸ், மாஸ்" வட்டங்களை மீறியவர்கள் தாங்கள் என்பதை நிரூபிக்கவும் செய்தார்கள். "சங்கீத ஜாதி முல்லை" (காதல் ஓவியம்) பாடலை கர்நாடக இசையில் ஈடுபாடு உள்ளவர்களை பாலு அப்படியே தன்புறம் ஈர்த்துப் பிடிக்க, "எனக்கும் ராகமெல்லாம் நல்லா வரும் பாரு; இருந்தும் டப்பாங்குத்து கச்சேரி கேளு" (சிந்து பைரவி - தண்ணி தொட்டி தேடி வந்து) பாடி யேசுதாஸ் கைத்தட்டல்களை அள்ளிக் கொண்டார்.

நிகழ்ச்சியின் ஹைலைட், பலவீனமான உடல் நிலையுடன் பி.பி. ஸ்ரீநிவாஸ் மேடையில் தோன்றி பாடகர்களைப் பாராட்டியதுதான். "காலங்களில் அவள் வசந்தம்", "நிலவே என்னிடம் நெருங்காதே" பாடல்களை தங்கள் மெல்லிசைக் கச்சேரிகளில், தொடக்கத்தில் பாடி முன்னுக்கு வந்ததாக இரு பாடகர்களும் உருக்கத்துடன் கூறியது நிறைவாக இருந்தது.

- ஜி.எஸ்.எஸ்.



# தி லாஸ்ட் வேர்ல்ட் - ஜுராசிக் பார்க்

கோஸ்டா ரிகா கடற்பகுதியில் அமைந்த ஒரு தீவில் பல்வேறு டினோசர்கள் வளர்கின்றன - அதாவது ஹம்மண்ட் என்ற விஞ்ஞானியால் வளர்க்கப்படுகின்றன. இவற்றின் குணநலன்களை ஆராய்வதற்காக அங்கே செல்கிறது ஒரு விஞ்ஞானிகள் குழு. அங்குள்ள டினோசர்களை வகைக் கொன்றாகப் பிடித்து வந்து ஒரு தனி 'ஜூ' அமைக்கும் எண்ணத்துடன் அங்கே முற்று கையிடுகிறது இன்னொரு குழு. இருதரப் பினரின் திட்டங்களும் குறிதவற, விபரீதங்கள்.

ஒரு பிரம்மாண்டமான டினோசர் ஆடி அசைந்து செல்கிறது. டாக்டர் பெண்மணி அதன் அருகே சென்று அதன் முகத்தைத் தடவுகிறார். "அசல் பசுவைப் போல" என்று கொஞ்சுகிறார்! ஆனால் எல்லா டினோசர் களும் அந்த அப்பாவி மயாசரஸ் வகையைச் சேர்ந்ததல்லவே! (டினோசர்களில் அகிம்சை, வன்முறை என்று பலவகை!)

பிரிட்டிஷ் குடும்பம் ஒன்றை ஏற்றி வந்த கப்பல், தீவுப் பக்கம் ஒதுங்குகிறது. கப்பலி லிருந்து இறங்கிய சிறுமி தனியாக தீவின் உட்பகுதிக்குச் செல்கிறாள். வினோதமான சத்தத்துடன், சற்றே பெரிய ஓணான் போல, அவள் முன் தோன்றுகிறது கோம்பி (ஒரு வகை டினோசர்). "அட, விசித்திரமான பறவை" என்றபடி தன் கையிலிருக்கும் சாண்ட்விச்சை அவள் கொடுக்க, ஒரே வாயில் லபக். அடுத்த நொடி அங்கே இங்கே என்று எண்ணிலடங்காத கோம்பிகள் - அவளைச் சுற்றி, நெருங்கி, தாக்கி...!

அந்த டாக்டர் பெண்மணி என்னவோ குட்டி டினோசரஸை நல்லெண்ணத்துடன்தான் தன் ட்ரெயிலருக்குள் தூக்கிச் சென்று, அதன் கால் எலும்புமுறிவுக்கு சிகிச்சை அளிக்கிறார். விவரம் புரியாத அதன் ராட்சதப் பெற்றோர்கள் வண்டியின் இருபுறமும் சூழ்ந்து, தாக்கி கதிகலங்க வைக்கின்றன. இந்தக் களேபரத்தில் அவளுக்கு உதவ முற்படும் கூட்டாளியை அலாக்காகத் தூக்கி அந்த இரு டினோசர்களும் பந்தாடிவிட்டு, பிறகு ஆளுக்குப் பாதி என்று சமூக நீதியோடு பிய்த்துத் தின்கின்றன.

புல்வெளியில் வரிசையாக இரு குழுவைச் சேர்ந்தவர்களும் நடக்க, திட்ட மிட்டு, சோல்ஜர்கள் கணக்காக வந்து சேரும் 'வெலோசிகாப்டர்கள்' புல்பரப்பிலிருந்து அவர்களை ஹதம் செய்கின்றன.

இசையமைப்பில் ('ஸ்டார்வார்ஸ்' புகழ்) ஜான் வில்லியம்ஸ் தன் பங்குக்கு பயமேற் படுத்துகிறார். கம்ப்யூட்டர் கைவண்ணம் நிறைந்துள்ள இதில் அதன் சாயலே தெரியாத அளவுக்குப் படமாக்கியுள்ள இயக்குனரையும், தொகுப்பாளரையும் பாராட்டாவிட்டால் பாவம்.

மைக்கேல் க்ரெட்டன் எழுதிய இதன் மூல நூலைப் படித்தவர்கள் டினோசரை நியூயார்க்குக்குக் கொண்டுவர, அது தன்னை விடுவித்துக் கொண்டு நகரையே நடுங்க வைக்கும் க்ளைமாக்ஸ் காட்சிகளைத் திரையில் கண்டு ஆச்சரியப்பட்டிருப் பார்கள். என்றாலும் விஷுவல் அதிர்ச்சிக் காக இவற்றை ஸ்பீல்பெர்க் அறிமுகப்படுத் தியது புத்திசாலித்தனம்தான். அதே சமயம் தன் கன்னப் பரப்பையும் வயிற்றுத் தோலை யும் தனியாகப் பிய்த்தெடுத்த டினோசர் அவற்றை ருசித்துச் சாப்பிடுவதை ஒருவன் ரணகாயங்களோடு பார்ப்பதாகவெல்லாம் நூலில் வருவதைத் திரையில் எதிர்பார்த்தால் ஏமாற வேண்டியதுதான்.

எப்படியோ 'விஞ்ஞானபூர்வமாக' ரீல் சுற்றி திகிலேற்படுத்துவதில் மீண்டும் வெற்றி கண்டிருக்கிறார் ஸ்பீல்பெர்க்.

— ஜி




# எல்லோருமே

**சா**முத்ரிகா லட்சணப்படி அங்க அவயங்கள் அமைந்திருப்பதுதான் அழகு என்பதில்லை. அடிக்கடி அழகு நிலையங்களுக்குச் சென்றுதான் அழகுபடுத்திக் கொள்ள முடியும் என்பதும் இல்லை. ஆரோக்கியமாகவும் சுத்தமாகவும் உடம்பைப் பராமரித்து வந்தாலே போதும்; எல்லோருமே அழகுதான்.

இப்படி எல்லோருமே அழகாக - பளிச் சென்று இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும்? அனைவரும் கடைப் பிடிக்கக்கூடிய சில எளிமையான வழிமுறைகளைக் கூறுகிறார் சென்னையில் 'காம்ப்ளக்ஷன் ப்ளஸ்' என்னும் அழகு நிலையத்தை நடத்தி வரும் திருமதி பிரேமா நரசிம்மன்.

**முதலில், பெண்களுக்கு...**

- காலையில் எழுந்ததும் சோப் போட்டு

# அழகாய் இருக்கலாம்!

முகத்தைக் கழுவி, சுத்தமான துண்டால் முகத்தைத் துடையுங்கள். நீங்கள் உபயோகிக்கும் சோப்பை அடிக்கடி மாற்றக் கூடாது. எப்போதும் ஒரே சோப்பை உபயோகிப்பதுதான் நல்லது.

● தலை முடியை நன்றாகச் சீவி, உங்கள் வசதிப்படி, ஜடையோ கொண்டையோ போட்டுக் கொள்ளுங்கள். இதுதான் முடிக்கு பாதுகாப்பானது.

● குளிப்பதற்கு முன், சுத்தமான தேனை எடுத்து (புருவம் நீங்கலாக) முகத்தில் தேய்த்துப் பதினைந்து நிமிடம் ஊற வையுங்கள். பிறகு குளியுங்கள். தொடர்ந்து இப்படிச் செய்து வந்தால் கறுப்பானவர்களின் முகம் கூட பளிச்சென்று கவர்ச்சிகரமாகி விடும். வெயில் பட்டுக் கறுக்கும் என்கிற பயமும் இல்லாமல் போய்விடும்!

● காலையில் எழுந்து பல் தேய்த்ததுமே, முதலில் ஒரு தம்ளர் தண்ணீர் குடியுங்கள். பிறகே டீ, காபி போன்றவற்றைக் குடியுங்கள். அடிக்கடி டீ, காபி குடிக்காமல் இருப்பதுதான் நல்லது. மோர், ஜூஸ் போன்றவற்றைக் குடிக்கலாம். (இது ஆண்களுக்கும் பொருந்தும். உடம்பு இளைக்கவும் உதவும்)

● முகத்தில் பரு இருக்கிறதா? பயம் வேண்டாம்; கிள்ளவும் வேண்டாம். சிறிது ஓட்ஸ் (கடைகளில் கிடைக்கும்) எடுத்துத் தயிரில் குழைத்து முகத்தில் தடவுங்கள். பத்து நிமிடங்கள் கழித்து முகத்தைக் கழுவுங்கள். தொடர்ந்து செய்ய முகப்பரு மறையும். அல்லது ஒரு தக்காளிப் பழத்தின் ஜூஸுடன் அரை ஸ்பூன் (ஸ்பூன் என்பது டேபிள் ஸ்பூன்) எலுமிச்சம் பழ ரசத்தையும் கலந்து முகத்தில் தடவிப் பத்து நிமிடங்கள் ஊறவைத்துக் கழுவுங்கள்; முகப்பரு காணாமல் போய் விடும்.

● முகத்தில் கரும் புள்ளிகள் இருக்கிறதா? கவலை வேண்டாம். முட்டையின் வெள்ளைக் கருவுடன் அரை ஸ்பூன் தேன், அரை ஸ்பூன் எலுமிச்சம் பழ ரசம் ஆகியவற்றையும் கலந்து முகத்தில் தடவிப் பத்து நிமிடங்கள் கழித்துக் கழுவுங்கள்.

● உடம்பு இளைக்க வேண்டும் என்பதற்காக அளவுக்கு அதிகமாகப் பட்டினி கிடக்காதீர்கள். அதனால் உங்கள் உடல் நலம் கெட்டுத் தலைமுடி உதிர ஆரம்பித்து விடும்.

● தேங்காய் கெட்டு விட்டதா? தூக்கி எறிய வேண்டாம். அதோடு இரண்டு சிறிய வெங்காயத்தையும் சேர்த்து அரைத்துத் தலைமுடியில் நன்றாகத் தேயுங்கள். சுமார் ஒரு மணி நேரம் கழித்துக் குளியுங்கள். தொடர்ந்து செய்தால் தலைமுடி உதிர்வது நிற்கும்.



• பிரேமா நரசிம்மன்

● கறிவேப்பிலையோடு மோர் விட்டு அரைத்துத் தலைமுடியில் தேய்த்துச் சுமார் 15 நிமிடம் ஊறிய பிறகு குளியுங்கள். வாரம் ஒருமுறை இப்படிச் செய்வது தலைமுடிக்கு நல்லது.

● பொடுகு இருக்கிறதா? சிறிது தேங்காய் எண்ணெய்யுடன் அரை எலுமிச்சம் பழ ரசத்தைக் கலந்து சூடு பண்ணுங்கள். சடபுடா என்று சத்தம் வரும். உடனே எடுத்து ஆற வைத்துத் தலையில் நன்றாகத் தேயுங்கள். ஒரு மணி நேரம் கழித்துக் குளியுங்கள். ஷாம்பூவோ சீயக்காயோ போட்டு அலசுங்கள். கடைசியில் அரை தம்ளர் வினிகருடன் அரை தம்ளர் தண்ணீரையும் கலந்து முடியை அலசுங்கள். வாரம் ஒருமுறை செய்ய பொடுகு போயே போய்விடும்.

● பேன் தொல்லையா? சிறிதளவு துளசிச் சாறுடன், மிகச் சிறிதளவு கற்பூரத்தையும் கலந்து தேய்த்துக் குளியுங்கள். பேன்கள் டாடா சொல்லி விடும்.

● மருதாணியுடன் சிறிதளவு காப்பித்தூள், ஒரு எலும்மிச்சம் பழத்தின் ரசம்., ஒரு முட்டை ஆகியவற்றையும் கலந்து தலையில் நன்றாகத் தேய்த்து, ஒரு மணி நேரம் கழித்துக் குளியுங்கள். முடி பளபளப்பாக மாறிவிடும்.

நரை விழுதலும் தள்ளிப் போகும்.

● மூன்று மாதங்களுக்கு ஒருமுறையாவது தலை முடியின் நுனியைச் சிறிதளவு வெட்டி விடுங்கள். முடி நன்றாக வளரும்.

● முழங்கை, முழங்கால் முட்டுகள் கறுப்பாக உள்ளனவா. அந்த இடங்களில் சிறிதளவு படிகாரம் தேய்த்துக் குளியுங்கள். மறைந்து போகும்.

● உருளைக் கிழங்கு ஜூஸ் அல்லது வெள்ளரிக்காய் ஜூஸ் தேய்த்து வர கண்களின் கீழுள்ள கருவளையங்கள் மறைந்து போகும்.

● இரவு படுக்கப் போகு முன் புருவங்களில் விளக்கெண்ணெய் தடவிப் படுங்கள். அடர்த்தியான புருவம் கிடைக்கும்.

● தினமும் காய்கறிகள் நறுக்குவதாலும் பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவுவதாலும் கைகள் சொரசொரப்பாக இருக்கின்றவா? கவலையே பட வேண்டாம். ஒரு ஸ்பூன் கிளிசரின், அரை ஸ்பூன் எலுமிச்சைச் சாறு, சிறிதளவு பன்னீர் ஆகியவற்றை ஒன்றாகக் கலந்து கைகளில் நான்கைந்து முறை தேய்த்துக் கொள்ளுங்கள். அப்புறமென்ன! உங்கள் உள்ளங்கையும் விரல்களும் பட்டுப் போல் மிருதுவாகி விடும்.

● பெண்களோடு ஆண்களும் தினசரி உணவில் வெங்காயப் பச்சடி சேர்த்துக் கொள்வதும், ஒரு வாழைப்பழம் சேர்த்துக் கொள்வதும் ஆரோக்கியத்துக்கு மிகவும் நல்லது.

● தண்ணீரை நன்றாகச் சூடு பண்ணுங்கள். அதில் சிறிதளவு உப்பைக் கலந்து அகலமானதொரு பாத்திரத்தில் ஊற்றி உங்கள் இரண்டு பாதங்களையும் அதில் வைத்து ஒத்தடம் கொடுங்கள். பிறகு நன்றாகக் கழுவுங்கள். இதனால் பாதங்கள் சுத்தமாகும்; வெடிப்புகள் வராமல் தடுக்கும். நன்றாகத் தூக்கம் வரும். (உங்கள் கணவன்மார்களுக்கும் இதைச் செய்யுங்கள். அலுத்துக் களைத்து வரும் அவர்களுக்கு இந்த ஒத்தடம் ரொம்பவும் சுகமாக இருக்கும்.)

● ரொம்பவும் முக்கியமான விஷயம். கணவரும் ஆபீஸ் போய் விட்டார். குழந்தைகளும் பள்ளிகளுக்குச் சென்று விட்டார்கள். சும்மா தானே இருக்கிறோம் என்று பகலில் ஒரு போதும் தூங்காதீர்கள். இது எந்த வகையிலும் ஆரோக்கியமானதல்ல!

**ஆண்களுக்கு...**

● ஒரு முட்டையின் வெள்ளைக் கருவை நன்றாக அடித்து முகத்தில் தேய்த்துப் பதினைந்து நிமிடம் ஊறிய பிறகு குளியுங்கள். இதனால் நெற்றி, முகம் போன்ற இடங்களில் தோன்றும் கோடுகள் மறையும்.

● நெற்றியில் தோன்றும் கோடுகளுக்கு முக்கியமான காரணம் டென்ஷன்தான் என்பதால், ரிலாக்ஸ்டாக இருக்கப் பழகுங்கள்.

● பப்பாளிப் பழத்துடன் சிறிது புதினாவையும் அரைத்துக் கலந்து முகத்தில் பூசிச் சுமார் 15 நிமிடங்கள் ஊற வைத்துக் குளியுங்கள். முகத்திலுள்ள கரும்புள்ளிகள் மறையும்.

● இளவயதிலேயே நரை வந்து விட்டதா? கவலையில்லை. நல்ல ஸ்ட்ராங்கான டிகாக்ஷன் எடுத்து அதில் ஒரு ஸ்பூன் உப்புக் கலந்து தலையில் தேய்த்துச் சுமார் 45 நிமிடம் ஊற வையுங்கள். பிறகு குளியுங்கள். வாரம் ஒருமுறை செய்ய நரைமுடி கறுப்பாகி விடும்.

● ஆண்களும் சரி, பெண்களும் சரி, நிறைய பச்சைக் காய்கறிகள் சாப்பிடுவது மிகவும் அவசியம். கிரீம், பவுடர் என்று முகத்துக்குப் போடுவதால் அதிலுள்ள இரசாயனப் பொருள்களால் முகத்துக்குக் கெடுதல்தான் வரும் என்பதால், அவற்றைத் தவிர்ப்பதே நல்லது.

தொகுப்பு : **சார்லஸ்**

அட்டை வண்ணப்படம் : **உத்ரா**

## இளமைப் போட்டி — 4

**அரசன் செங்கோல் வழுவாமல் ஆட்சி செய்கிறான். வீட்டிலுள்ள மனைவி மக்களும் என் மனம் கோணாதபடி நடக்கிறார்கள்... இவற்றின் காரணமாக எனக்கு நரை விழவில்லை!**

**— இப்படிக் கூறிய தமிழ்ப் புலவரின் பெயர் என்ன?**

# தி.மு.க.வினருக்கு வெண்சாமரம் வீசவா நாங்கள் இருக்கிறோம்?

## — சீறுகிறார் செல்லக்குமார்

"அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் மீது நீங்கள் ஊழல் குற்றச் சாட்டு கூறினீர்கள். அவர் அமைச்சராக இருப்பதால் அரசு சார்பில் உங்கள் மீது வழக்கு தொடரப்பட்டு இருக்கிறது. இந்த நிலையில் கோர்ட்டில் வழக்கைச் சந்திப்பதை விட்டு 'பொய் வழக்கு போடாதே' என்றெல்லாம் த.மா.கா. தொண்டர்களும் பிரமுகர்களும் சாலைமறியல், உண்ணாவிரதம் ஆகியவற்றில் ஈடுபடுவது ஏன்?" என்று த.மா.கா. எம்.எல்.ஏவான செல்லக்குமாரிடம் கேட்டோம்.

"நான் ஏதாவது கூறினால் அதன் படி உறுதியாக நிற்பேன். 'நான் அது போல் பேசவில்லையே!' என்றெல்லாம் ஜகா வாங்கும் பழக்கம் என்னிடம் கிடையாது. வீரபாண்டி ஆறுமுகம் மீது நான் கூறிய குற்றச்சாட்டில் உறுதியாக நிற்கிறேன். கோர்ட்டில் எனது கூற்று உண்மை என்று நிரூபிக்கப்படும். ஆனால் த.மா.கா. தொண்டர்கள் 'பொய் வழக்குப் போடாதே' என்ற சொல்வது இந்த வழக்கு குறித்தல்ல. கோர்ட்டு சம்மனைப் பெற்று சேலம் கோர்ட்டுக்கு நான் சென்றபோது, கொலை வெறித்தனமாக தி.மு.க.வினர் எங்களைத் தாக்கினார்கள். அங்கு தி.மு.க.வினர் எதற்காக வந்தார்கள்? அவர்களுக்கும் கோர்ட்டில் ஆஜராக சம்மன் கொடுக்கப்பட்டதா என்ன! உருட்டுக் கட்டைகளால் வெறித்தனமாகத் தாக்கினார்கள். எங்கள் தோழர்கள் கேடயமாக இருந்து என்னைக் காப்பாற்றினார்கள். பதினைந்து த.மா.கா. தொண்டர்களுக்கு பலத்த அடி. கார்களுக்குச் சேதம். இந்த வன்முறையை இதுவரையில் கருணாநிதி அவர்கள் கண்டிக்கவில்லை. இந்த நிலை எதை உணர்த்துகிறது? வன்முறைக்கு முதல்வரே தூபம் போடுகிறார் என்பதைத்தானே! இது மட்டுமல்லாமல் அடிவாங்கிய எங்கள் மேல், 'தி.மு.க.வினரை நாங்கள் தாக்கியதாக' வழக்குப் போட ஏற்பாடுகள் நடக்கின்றன. இந்த விஷயத்தைத்தான் 'பொய் வழக்குப் போடாதே' என்று த.மா.கா. தொண்டர்கள் சொல்கிறார்கள்."

"இது சம்பந்தமாக நீங்கள் நடத்தும் போராட்டங்கள் உங்கள் தலைமைக்கு மிகுந்த சங்கடத்தைக் கொடுக்கிறது என்றும் தலைமையின் சம்மதம் இல்லாமல் நீங்கள் இதுபோன்ற காரியங்களில் இறங்குகிறீர்கள் என்றும் சொல்லப்படுகிறதே!"

"முதலில் ஒரு திருத்தம். இது சம்பந்தமாக நடந்த போராட்டம் எதிலும் நான் கலந்து கொண்டதில்லை. அடுத்ததாக, த.மா.கா. என்பது நெருப்பில் பிறந்த இயக்கம். 'ஊழலையும், வன்முறையையும், த.மா.கா.வின் கடைசித் தொண்டன் கூடத் தட்டிக் கேட்பான்!' என்று கொள்கைப் பிரகடனத்தில் சொல்லி இருக்கிறோம். எங்கள் தலைவர் மூப்பனார் அவர்கள், பல இடங்களில் பேசும்போது, 'தவறைச் சுட்டிக்காட்டத் தயங்காதீர்கள்!' என்றுதான் கூறியிருக்கிறார். பல இடங்களில் அவர் முன்னிலையிலேயே, தி.மு.க. அரசின் குறைபாடுகளை நான் விமர்சித்திருக்கிறேன். எனவே சேலத்தில் எங்கள் மீது நடந்த வன்முறை மற்றும் பொய் வழக்கு முயற்சிகளுக்காகக் கோபம் அடைவது என்பது த.மா.கா. தொண்டனுக்கு இயற்கையாகவே எழுந்த ஒன்று. அந்த கோபத்தின் விளைவாக



சாலை மறியல்; உண்ணாவிரதம் என்றெல்லாம் நடத்தப்பட்டன. வன்முறைக்கு எதிராகப் போராடும் எங்கள் கட்சியின் கோட்பாட்டை ஒட்டிய போராட்டம்தான் இதெல்லாம். ஆகவே தலைமைக்குச் சங்கடமும் இக்கட்டும் உண்டாக்க எந்த முகாந்திரமும் இல்லை."

"கொஞ்சம் மனம் திறந்து சொல்லுங்கள்; ஜெயலலிதா ஆட்சியை விட கலைஞர் ஆட்சி பல மடங்கு பரவாயில்லை என்று மக்கள் சொல்கிறார்கள். ஆனால் நீங்களும், உங்கள் கட்சியில் சிலரும், தி.மு.க. – த.மா.கா. தோழமையை உடைக்கும்விதமாகப் பேசுகிறீர்கள். நீங்கள் சமீபத்தில் பேசியபோது கொள்ளையர்களை வெளியேற்ற வேண்டும் என்றெல்லாம் பேசியிருக்கிறீர்கள்...!"

"கலைஞர் ஐந்து வருடம் முழுக்க ஆள வேண்டும் என்றுதான் நாங்களும் விரும்புகிறோம். அதற்குப் பின் காமராஜ் ஆட்சி வரப் பாடுபடுவோம் என்று சொல்ல எங்களுக்கு உரிமை உண்டு. 'விமர்சனங்களை ஒரு எல்லைக்குட்பட்டுச் சொல்ல வேண்டும்' என்று கலைஞர் சொல்கிறார். ஊழலுக்கும் வன்முறைக்கும் எல்லைக் கோடு போட முடியுமா? ஒரு ரூபாய் கையாடல் செய்தாலும் ஊழல்தான், ஒரு கோடி செய்தாலும் ஊழல்தான். மூன்று வருடங்களுக்கு முன் ஆகஸ்ட் ஒன்பதாம் தேதியன்று விஜய சேஷ மஹாலில் மூப்பனார் தலைமையில், ஜெயலலிதாவின் கொள்ளைக்கார ஆட்சி ஒழிய வேண்டும் என்று குரல் கொடுத்தோம். இந்த வருடம், அதே ஆகஸ்ட் – 9 வெள்ளையனே வெளியேறு போராட்ட நாள் அது – கூட்டத்தில் நான் பேசும்போது, பழைய விஷயத்தை ஞாபகப்படுத்திவிட்டு, அதுபோன்ற கொள்ளையர்கள் தி.மு.க. ஆட்சியிலும் ஒழிக்கப்பட வேண்டும் என்றுதான் பேசினேன். நான் கலைஞர் அவர்களை கொள்ளைக்காரன் என்று சொல்லவில்லை. ஆனால் அவரது அமைச்சரவையில் இருக்கிறார்கள். காலம், நேரம் வரும்போது அவர்கள் அடையாளம் காட்டப்படுவார்கள்."

"அப்படியானால் தி.மு.க. ஆட்சியைப் பற்றிய உங்கள் கருத்துத்தான் என்ன?"

"அரசுப் பணியாளர்கள் மாதா மாதம் முதல் தேதி சம்பளம் வாங்க வேண்டும் என்பதற்காகத்தான் அரசு செயல்படுகிறது என்று சொல்ல முடியுமா? ஜெ. ஆட்சியைப் போல இப்போது நேரடியாக ஊழல் நடப்பதில்லை. சட்டத்தின் ஓட்டைகளைப் பயன்படுத்தி மறைமுகமாக நடக்கிறது. பொதுப் பணித்துறையில் nominated tenderஐ ஒழித்து விட்டோம் என்று சொல்கிறார்கள். அது சரி; இன்றைக்கு அடி முதல் தலை வரை பத்து சதவீத கமிஷன் பகிர்ந்து கொடுக்கப்படுகிறதே! மறுக்க முடியுமா? 'கோவில் கொடியவர்களின் கூடாரமாகக் கூடாது' என்று பராசக்தியில் வசனம் எழுதினால் போதுமா? இன்று அறநிலையத் துறையில் நடக்கும் ஊழல், கூடிய சீக்கிரம் வெடிக்கும் என்பது தவிர புதிதாகச் சொல்லும்படியான சாதனை ஏதாவது உண்டா? 'அண்ணா மறுமலர்ச்சித் திட்டம், நமக்கு நாமே' திட்டங்களெல்லாம் ஏற்கெனவே பல்வேறு திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்ட பணத்தில் நடத்தப்படுகிற திட்டங்கள்தான்; பெயர்கள்தான் புதிது. அது சரி; சட்டம் – ஒழுங்கை எடுத்துக் கொள்வோம். இந்த ஒன்றரை வருட கலைஞர் ஆட்சியில் துப்பாக்கிச் சூடு, குண்டு வெடிப்புகள், லாக்-அப் மரணங்கள் ஆகியவை, இதற்கு முந்தைய ஐந்தாண்டுகளில் நடந்ததை விட மிக அதிகம்.. அதற்காக அன்று நடந்த ஆட்சியை நான் பாராட்டுவதாக எடுத்துக் கொள்ள வேண்டாம். மக்களின் அடிப்படைப் பிரச்னைகளான குடிதண்ணீர், ரேஷன் போன்ற விஷயங்களில் கூட இந்த அரசு தடுமாறுகிறது. தோழமைக் கட்சியாக இருப்பதால்தான் கொஞ்சம் உஷாராக விமர்சிக்கிறோம்; குறைகளை எடுத்துச் சொல்கிறோம். நாங்கள் என்ன இவர்களுக்கு வெண்சாமரம் வீசவா இருக்கிறோம். முழுதாகக் களத்தில் இறங்கி விமர்சிக்கத் துவங்கினால் தாங்க மாட்டார்கள்."

"தி.நகர் தொகுதியின் எம்.எல்.ஏ.வாக நீங்கள் இருந்தும், தி.மு.க.வினரின் குறுக்கீடு காரணமாக தொகுதிப் பணிகளை நிறைவேற்றுவதில் தடங்கல்கள் ஏற்படுகின்றன. அந்தக் கோபத்தில்தான் கலைஞர் அரசு மீது நீங்கள் குற்றம்சாட்டுவதாகவும் சொல்லப்படுகிறதே!"

"மக்களுக்கு நான் நல்லது செய்யும் பணியில் இடைஞ்சலாக வரும் எவரையும் எப்படிச் சமாளிக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் எனது தொகுதியில் நடைபாதைக் கடைக்காரர்களை மிரட்டிக் கொண்டு அவர்களிடம் அடாவடியாக வசூல் செய்கிறார்கள் தி.மு.க.வினர். இந்தப் பணம் தி.நகர் தொகுதியில் சட்டவிரோத காரியங்களுக்கும், வன்முறைக்கும் பயன்படுத்தப்படுகிறது. இதை நான் ஆதாரத்தோடு, சட்டசபையில் முதல்வரிடம் தெரிவித்தேன். ஆனால் இதுவரை எந்த நடவடிக்கையும் இல்லை. இதன் மூலம் என்ன தெரிகிறது? கட்சித் தலைமையின் சம்மதத்தின் பேரில்தான் காரியங்கள் நடக்கின்றன!"

சந்திப்பு : **ப்ரியன்**

இந்தியா

பாகிஸ்தான்



1997 செப்டெம்பர் 7
ஈசுவர ஆவணி 22
மலர் : 56
இதழ் : 6

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## துப்பாக்கிச் சத்தம்; பிரதமரின் மௌனம்!

'இந்தோ - பாகிஸ்தான் எல்லையில் இருதரப்பு ராணுவ வீரர்களுக்கிடையே பலத்த துப்பாக்கிச் சூடு நடந்திருக்கிறது!

'எங்களுக்குப் பெரிய இழப்பு எதுவுமில்லை; எதிராளிக்குத்தான் பலத்த உயிர்ச்சேதம்' என்று இரு நாட்டுப் பிரதிநிதிகளும் கூறிக் கொள்கிறார்கள்.

தகராறை ஆரம்பித்து வைத்த பாகிஸ்தான், இந்தியாவைப் பற்றி ஐ.நா. சபையில் புகார் செய்துள்ளது!

பத்திரிகையாளர்களை எல்லைப் பகுதிக்கு அழைத்துச் சென்ற ராணுவ அதிகாரி ஒருவர், எதிர்பாராத பாக் தாக்குதலிலிருந்து மயிரிழையில் உயிர் தப்பியிருக்கிறார்! தொடர்ந்து அரை மணி நேரம் நமது ராணுவம் துப்பாக்கிச் சூடு நடத்தியிருக்கிறது!

நான்கு நாட்களாக, எல்லா தினசரிகளிலும் தலைப்புச் செய்தியாக இருந்து வரும் இந்த முக்கியமான பிரச்னை குறித்து இன்னமும் பிரதமர் குஜ்ரால் மட்டும் திருவாய் மலர்ந்து அருளவில்லை என்பதுடன், எந்தவிதமான நடவடிக்கைகளையும் எடுக்கவுமில்லை.

இரு நாடுகளுக்கிடையேயுள்ள 'ஹாட் லைன்' இணைப்பைப் பயன்படுத்தியிருக்கலாம் குஜ்ரால். பாகிஸ்தான் அதிபர் நவாஸ் ஷரீபுடன் தொடர்பு கொண்டு நமது நிலை உணர்த்தி,




அமைதி வேண்டியிருக்கலாம். ஆனால், அயலுறவுத் துறை வித்தகராகக் கருதப்படும் குஜ்ரால் அசைந்து கொடுக்கவில்லை.

பெருந்தன்மையுடனும் பொறுமையுடனும் நடந்து கொள்வதுதான் குஜ்ரால் கொள்கை. எனினும், நாட்டின் பாதுகாப்புக்கு அபாயம் ஏற்பட்டுள்ள நேரத்தில், பெருந்தன்மையுடன் தீர்க்கதரிசனமும் இணைய வேண்டும்; உறுதிக்குப் பொறுமை வழிவிட வேண்டும்.

அஜாக்கிரதையாகவோ அசிரத்தையாகவோ இருந்தால், கைகலப்புகள் முற்றி, கண்ணிமைக்கும் நேரத்தில் யுத்தமாக மாறிவிடும்.

இதைப் போன்ற நேரங்களில் பொதுமக்கள் மனத்தில் ஏற்படக்கூடிய சந்தேகத்தையும் பயத்தையும் போக்கும் பொறுப்பும் தலைவர்களுக்கு இருக்கிறது.

ஆனால் பிரதமர், பாக் ஹாட் லைனைப் புறக்கணித்ததைப் போலவே பத்திரிகைகள், வானொலி, டி.வி. மூலம் மக்களிடம் பேசுவதையும் தவிர்த்திருக்கிறார்.

புதிரான இந்தப் போக்கு தொடருமானால், அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை நாடு தாங்கக்கூடிய நிலையில் இல்லை. அதன் மூலம் லாபம் அடையப் போகிறவர்கள் யுத்த தளவாடங்களை உற்பத்தி அல்லது விற்பனை செய்யும் அயல்நாட்டு நிறுவனங்கள் தான்!

ராணுவ, பாதுகாப்புச் செலவுகளையெல்லாம் குறைத்து, ஆக்கபூர்வமான பணிகளுக்குப் பணத்தை எப்படித் திருப்பி விடலாம் என்று நாம் ஆராய வேண்டிய வேளை இது. பிரதமர் மட்டும் உடனடியாக நடவடிக்கை எடுக்காவிட்டால், செலவு கட்டுப்படுவதற்கு மாறாக, நம்மை மீளா கடனிலும் துயரிலும் தள்ளிவிடும்!

அந்த நிலை உருவாகாமல், ஆபத்து ஆரம்பத்திலேயே தவிர்க்கப்படும் என்று நம்புவோம்.




## பேசினால் ஊழல் ஒழிந்துவிடுமா?

எல்லையில் இப்படி அல்லோலகல்லோலப்படும் வேளையில், தலைநகரில் நான்கு நாள் சிறப்புப் பாராளுமன்றக் கூட்டத் தொடர் நடைபெறுகிறது.

அந்தத் தொடரின் துவக்க நாளன்று கூட, யாரும் எல்லைத் தகராறு பிரச்னையை எழுப்பவில்லை!

மாறாக, சபாநாயகர் சங்மா, துவக்க உரை ஆற்றி 'சரித்திரம்' படைத்திருக்கிறார். எந்த அவைத் தலைவருமே இதுவரை துவக்கவுரை ஆற்றியதில்லை. சங்மாவுடையதே முதல் உரை என்று சொல்லப்படுகிறது.

ஆனால், புதிதாக எதுவும் இந்த உரை மூலம் சொல்லப்படவில்லை! ஊழலை எதிர்த்து 'சத்தியாகிரஹம்' செய்யச் சொன்ன பிரதமரின் பேச்சை எதிரொலிப்பது போல்தான் சங்மாவின் பேச்சும் அமைந்திருக்கிறது!

'ஊழலை ஒழிக்க, நாடு தழுவிய இன்னொரு சுதந்தரப் போர் நடக்க வேண்டும்!' - இது சங்மாவின் அறைகூவல். இரு அவையினரும் இதற்குக் கவலையுடன் ஒத்துப் பாடியிருக்கிறார்கள். சிறப்புத் தொடரின் நான்கு நாட்களிலும் இதையே பேசிப் பேசி மாய்வார்கள்!

சுதந்தரப் பொன்விழா ஆண்டுச் சிந்தனையாக வார்த்தைகளை வாரி இறைத்துவிட்டால் போதுமா...?

பிரதமர் உள்பட எல்லா தலைவர்களையும் ஊழல் விசாரணைக்கு உட்படுத்த அனுமதிக்கும் லோக்பால் மசோதாவைப் பொன்விழா ஆண்டுப் பரிசாக பாரத மக்களுக்குப் பிரதமர் ஏன் வழங்கக் கூடாது...?

அரசியல் தலைவர்கள், பேசுவதோடு நில்லாமல், நல்வழிகாட்டிகளாக என்று மாறுகிறார்களோ அன்றுதான் நாட்டுக்கு விடிவு காலம்.

# 4

# நான் வில்லன் அல்லே!

ராட்சச வேஷத்தில பெரிய ஆளா போய் மேடையில் நிக்கணும்னு என்ன பண்ணேன் தெரியுமா? கூட நடிக்கிற பசங்க மடிச்சி வச்சிருந்த வேட்டி சட்டைங்களையெல்லாம் அவங்களுக்குத் தெரியாம எடுத்து வந்து என் ஜிப்பாவுக்குள்ளார திணிச்சிக்கிட்டேன். ஒரு கயிறு போட்டுக் கட்டி, சிறுவாளுக்குள்ளேயும் அது போலவே பண்ணி பெரிய உருவமா - ஏதோ நம்பி யார் திடீர்னு வீங்கிப் போயிட்டா எப்படி இருக்குமோ அப்படிப் போய் நின்னதும் அவ்வளவுதான். ஒரே கைதட்டல். 'ஆஹா'ன்னு பாராட்டு. வாத்தியார் இந்த அப்ளாஸைக் கேட்டுட்டு வந்து, 'என்னடா பண்ணான் இவன்'ன்னு கேட்டுட்டுப் போனதா சொன்னாங்க. விஷயம் தெரிஞ்சப்போ 'ஏன்டா என் டிரஸ்ஸை எடுத்தே'ன்னு பெரிய பசங்க தலையில குட்டினாங்க. சின்னப் பசங்க திட்டினாங்க.

அந்த வேஷம் போட்டப்போ நான் இன்னொண்ணும் செஞ்சேன். நான் ஊட்டியில இருந்தப்போ அங்கே தோடர்கள் டான்ஸ் ஆடறத பாத்திருக்கேன். அதே போல மேடையில கிருஷ்ணனைத் தோள்ல தூக்கி வச்சிக்கிட்டு 'ஹைஹ... ஹைஹய்யா... ஹெஹள... ஹெஹால்வா'ன்னு ஆட ஆரம்பிச்சேன்.

மறுநாள் மறுபடியும் வாத்தியார் கிட்ட போய் நின்னேன்.

"அண்ணே... அந்த முஷ்டிகன் வேஷம்... சாந்தப்பன் அண்ணன் பண்ற வேஷத்தை நான் பண்றேன் அண்ணே..."

"அடேய்... அதை ஏற்கெனவே சாந்தப்பன் பண்ணிக்கிட்டிருக்கானேடா... ஏற்கெனவே சகடாசூரன் வேஷத்தை அவன் கிட்ட இருந்து பிடுங்கிட்டே..."

நான் ஒரே பல்லவியைப் பாடினேன். "அண்ணே... நான் நல்லாப் பண்றேண்ணே..."

வாத்தியார் சிரிச்சிட்டார். "சரி... சரி... இன்னிக்கு அவனே போடட்டும். நாளைக்கு நீ போட்டுக்கோ."

நான் போட்டேன். அந்த வேஷமும் கிருஷ்ணன் மேல இருக்கிற கோபத்தைக் காமிக்கிற மாதிரியான வேஷம்தான். நான் நடிச்சப்போ என் டர்பனைத் தூக்கி கீழே ஒரு அடி அடிச்சு என் கோபத்தை வெளிப்படுத்தினேன். ஜனங்க கைதட்ட ஆரம்பிச்சாங்க.

வாத்தியார் வந்து பாத்திருக்காரு.

"யாருக்குடா கிளாப்ஸ்?"

"அண்ணே... இந்த நம்பியாரு என்னென்னமோ பண்றான் அண்ணே! கூட இருந்த பசங்க சொல்லியிருக்காங்க."

நான் என்ன பண்ணேன்னா, காலையிலேயே போய் தலையை மொட்டை அடிச்சிக்கிட்டேன், ஒரு சின்ன உச்சிக்குடுமி மட்டும் வச்சிட்டு. டர்பனைத் தூக்கி கீழே அடிச்சதும் உச்சிக் குடுமியைப் பாத்துட்டு கைதட்டினாங்க. குஷி. போதாததுக்கு நான் அந்த உச்சிக் குடுமியை தட்டி முடிச்சுப் போட்டேன். அதுக்கு மறுபடியும் கைதட்டல். எங்கூட இருந்த எத்திராஜ் அண்ணன் கூட சேர்ந்து நாங்களே காமெடி செட் பண்ணி, அந்த சீன் பூராவையுமே ரொம்ப கலகலப்பா ஆக்கிட்டோம். இதில வாத்தியாருக்கு ரொம்ப சந்தோஷம்.

# எம். என். நம்பியார்

ஏன்னா அந்த சீன் பொதுவா போர் அடிக்கிற சீன்னு ஒரு பேர் இருந்தது. அதுக்கு வழியில்ல. அடுத்த சீன் கம்ஸன் அந்தப்புரம். அதுக்கு சீன் செட்டப் பண்ண நேரம் ஆவும். அதுக்கு முன்னாடி அந்த நேரத்தை அட்ஜஸ்ட் பண்ண ரோடு சீன்தான் இது. பொதுவா இது போல வரும்போது மத்த கம்பெனிங்கள்ல பபூன் வந்து ஒரு பாட்டுப் பாடுவான். ஆனா நானும் வரதராஜ் அண்ணனும் செஞ்ச காமெடி ஜனங்களுக்குப் பிடிச்சிப் போயிடவே அது முக்கியமான சீனா ஆயிடுச்சி.

அங்கே இருந்து பொன்னமராவதிக்குப் போனோம். பொதுவா நல்லா கலெக்‌ஷன் ஆகிற ஊர் அது. நாங்க அங்க இருந்த போது தான் காங்கிரஸ் கட்சியின் ஐம்பதாவது வருஷம் முடிஞ்சிது. பொன்விழா. அதுக்காக புதுசா ரிகார்டு வந்திருந்தது. அதில நம்ம மதிப்பிற்குரிய மேயர் சத்தியமூர்த்தியின் ஒரு சொற்பொழிவும், சுந்தராம்பாளோட 'வாழ்க மணிக்கொடி வாழ்க'ன்னு ஒரு பாட்டும் ரொம்பப் பிரமாதமா இருந்தது. அதுக்காக அன்னிக்கு நாங்க ஒரு எக்ஸ்கர்ஷன் போல ஒரு இடத்துக்குப் போயி அந்த ரிகார்டுகளையெல்லாம் போட்டு கொண்டாடினோம். தேசப்பற்று இருந்த கம்பெனி இல்லியா எங்க கம்பெனி, அதான் இது மாதிரி கொண்டாட்டம் எல்லாம்.



காரைக்குடிக்குப் போனோம். அங்க இருந்து சிலோனுக்குப் போறதுக்கு ஏற்பாடெல்லாம் பண்ணாங்க. ஆனா செலவு விஷயத்தில் ஏதோ சரிப்பட்டு வரல்ல... அதனால நின்னு போச்சு.

**பா**லக்காட்டில கம்பெனி இருந்த சமயம். அப்ப கோயம்புத்தூர்ல 'அமர் ஜோதி'ன்னு ஒரு சினிமா ஓடிட்டிருந்தது. ரொம்ப நல்ல படம். சாந்தா ஆப்தே ஹீரோயின். யாரோ ஒருத்தர் ஹீரோ. ஞாபகமில்ல. துர்காபாய் கோட்டேவுக்கு 'வேம்ப்' மாதிரி ஒரு ரோல். சந்திரமோகன்தான் வில்லன்.

என் நடிப்புல சந்திரமோகனுடைய ஸ்டைல் கொஞ்சம் இருக்கும். இருக்குன்னு நான் நினைக்கிறேன். எப்படியும் அமர் ஜோதியை ஒரு தரம் கோயம்புத்தூருக்குப் போய் பாத்துடணும்னு ஆசை. அப்ப எங்க மாமா கிட்ட இருந்து ஒரு லெட்டர் வந்தது. 'டேய் நான் கோவையில ராமநாதபுரத்தில இருக்கேன். வந்து பாத்துட்டுப் போ!

பாலக்காடு கேம்ப் முடிஞ்சு காலிகட் போக இருந்தோம். அப்ப எங்க கம்பெனியில இருந்த கோயம்புத்தூர்காரங்கள்ல சில பேர், ஒரு நாள் அவங்க சொந்த ஊருக்குப் போனாங்க. நானும் அவங்க கூட போலாம்னு ஆசை. எனக்கு மாமாவைப் பார்க்கணும். அதுக்கும் மேல அமர்ஜோதி பாத்தாகணும்.

அவங்களுக்கெல்லாம் ஈஸியா பர்மிஷன் கெடச்சிடுச்சி. எனக்கு கெடைக்கல்ல. ஏன்னா நான் கோயம்புத்தூர்க்காரன் இல்லியே.

'மாமாவைப் பாக்கப் போவணும்'னு கேட்டேன். 'ஏண்டா மாமாவைப் பாக்கணுமா, அமர்ஜோதி பாக்கணுமா?'' ஆக, என் அமர்ஜோதி ஆசை கம்பெனிக்குத் தெரிஞ்சி போச்சுன்னு தெரிஞ்சுது.

கடைசியா அப்படி இப்படி கெஞ்சிக் கூத்தாடி பர்மிஷன் வாங்கியாச்சு. ரெண்டு ரூபாயைத் தூக்கிப் போட்டாங்க. அப்புறம் கொஞ்ச நாழி தலையைச் சொறிஞ்சி நின்னதுல இன்னொரு ரூபாய் கொடுத்தாங்க. மொத்தம் மூணு ரூபாய்ல நான் கோயம்புத்தூர் போவணும். மாமாவைப் பாக்கணும். அமர்ஜோதி பாக்கணும். ரெண்டு மூணு நாள் செலவையும் அதி

லேயே பாத்துக்கணும். முடியுமான்னு கேட்பீங்க. அப்ப முடிஞ்சுது.

நான் ஏற்கெனவே கன்னையான்னு எங்க கம்பெனி நடிகர்கிட்ட ஒரு அக்ரிமென்ட் போட்டிருந்தேன். எனக்கு சீனியர் அவர். அவரோட அப்பா, அம்மா, அக்கால்லாம் எனக்கு நல்ல பழக்கம். அடிக்கடி அவரைப் பாக்க கம்பெனிக்கு வருவாங்க. அப்ப, "நீ எப்பன்னா கோயம்புத்தூர் வந்தா எங்க வீட்டிலேயே தங்கலாம்'னு சொல்லியிருந்தாங்க. சரின்னு நான் கன்னையாகிட்ட சொல்லியிருந்தேன். இப்ப என்ன ஆச்சுன்னா அந்த கன்னையா காலை எட்டு மணி ட்ரெயின்ல கிளம்பிப் போயாச்சு. நானும் கூட இன்னும் ரெண்டு பசங்க. சாயங்காலமா கிளம்பிப் போனோம். எங்க தங்கறதுன்னு தெரியல்ல. சரி போய் மாமாவைப் பாத்துட்டு முடிவு பண்ணலாம்னு கிளம்பினேன். கூட வந்தவனுக்கு முருகதாஸ்"ன்னு பேரு.

**கோ**யம்புத்தூர் ஸ்டேஷன் அப்ப ரொம்ப சின்னதா, ஒரு பாத்ரூம் போல இருந்தது.

இறங்கி திருச்சி ரோட்ல நடந்தோம். "ஏண்டா இங்க இளநீர் கிடைக்குமா?"

"நீ... போற வழியில நெறய கிடைக்கும்டா." ரொம்பத் தெரிஞ்சவன் போல முருகதாஸ் சொன்னான்.

வாலாங்குளம் வரைக்கும் போனோம். வழியில இளநீராவது ஒண்ணாவது! எதையும் காணோம். பைப்ல தண்ணி குடிச்சு வயித்த நிரப்பிக்கிட்டேன்.

ராமநாதபுரத்தில் மாமா அட்ரஸைக் கண்டு பிடிக்க முடியல்ல.

"ஏண்டா, கன்னையா வீட்டு அட்ரஸ் தெரியுமாடா?"

"ஓ... தெரியுமே... சீனிவாசபுரத்தில வேப்ப மரத்துக்குப் பக்கத்து வீடுடா..."

ஒரு குதிரை வண்டி பிடிச்சோம். ஆறு அணா கூலி. ஜெயில் ரோடு வரைக்கும் போயாச்சு. அதுக்கு மேல லைட் 'கட்'டாயிடுத்து. ஒரே இருட்டு. 'தம்பிங்களா... துட்டை குடுத்து என்னை அனுப்பிட்டு நீங்க அப்படியே கால் நடையா போய்க்குங்க'ன்னு குதிரைக்காரன் அட்வைஸ் பண்ண, அவனை செட்டில் பண்ணி அனுப்பி வச்சோம்.

நான் முருகதாஸைக் கேட்டேன். "ஏண்டா... கன்னையா வீடு உண்மையாவே உனக்குத் தெரியுமா?"

"அப்பவே சொன்னேனடா... வேப்பமரம் பக்கத்து வீடுன்னு."

"ஏண்டா சீனிவாசபுரத்தில் ஒரே ஒரு வேப்பமரம்தான் இருக்குதா. அதுக்குப் பக்கத்தில் ஒரே வீடுதானா?"

"இதோ பார். இதெல்லாம் எங்கிட்ட வச்சிக்காதே.

# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை



# அமரர் கல்கி பிறந்த நாள் விழா

**இ**ளம் கலைஞர்களை ஊக்குவிக்கும் விதமாக நமது அறக்கட்டளை கல்கி விருது நிறுவியுள்ளதை அறிவீர்கள். இவ்வாண்டிற்கான விருதைப் பெறுபவர் கர்நாடக இசைக் கலைஞர்:

## ராஜ்குமார் பாரதி

9.9.97 அன்று, மாலை ஆறு மணிக்கு, சென்னையில் (லஸ்) மயிலை ஸ்ரீநிவாஸ சாஸ்திரி அரங்கில் நடைபெறும் அமரர் கல்கி பிறந்த நாள் விழாவில் விருது வழங்கப் படும்.

தலைமை : திரு. சி. சுப்ரமண்யம்
விருது வழங்குபவர் : திரு. டி. சதாசிவம்

விழாவைத் தொடர்ந்து இசை நிகழ்ச்சி நடைபெறும்.

ராஜ்குமார் பாரதி - பாட்டு
முல்லைவாசல் ஜி. சந்திரமௌலி - வயலின்
ஜே. ஸ்கந்தபிரசாத் - மிருதங்கம்
ஏ.எஸ். கிருஷ்ணன் - முகர்சிங்

கல்கி அன்பர்களையும், ரசிகர்களையும் வாசகர்களையும் அன்புடன் அழைக்கிறோம்!

— நிர்வாக அறங்காவலர்

யாரோ சொன்னதை வச்சி நான் சொல்றேன்."

"அட சண்டாளா... இதுக்காடா இவ்வளவு தூரம் நடந்தோம். ஆறு அணா வேற தண்டம்."

இப்படிப் பேசிக்கிட்டே நடந்த போதுதான் வயித்தில கர்ர்னு ஒரு உணர்வு. காலைல இருந்து ஒண்ணுமே சாப்பிடலைங்கறது அப்பதான் ஞாபகம் வந்தது."

ஒரு காப்பி கடையாண்ட போனோம். அப்பதான் கடை மூடற நேரம். மீந்து போயிருந்த பக்கோடா தூளை கடைக்காரன் வெளியே கொட்டப் போறான். அந்தத் தூளையாவது குட்றாப்பான்னு வாங்கிச் சாப்பிட்டேன்.

"இனிமே ஒண்ணும் முடியாதுடா. வேற வழியில்ல. என் வீட்டிலேயே தங்கிக்க" - முருகதாஸ் சொன்னான். எனக்கும் வேற வழி தெரியல.

சவுரிபாளையத்தில அவனோட வீடு. போய்ச் சேர்ந்தோம். வெளியில எனக்கு தனியா ஒரு கயித்து கட்டில் போட்டுக் கொடுத்தான். கூடவே ஒரு கண்டிஷன்.

"டேய்... பார்ரா... நான் இங்கே ரெஸ்ட் எடுக்க வந்திருக்கேன். நீ காலைல எழுந்து பல்லை விளக்கு, குளின்னு தொல்லை பண்ணக்கூடாது. (என்னமோ தினமும் கம்பெனியில இதெல்லாம் அவன் பண்ணிக் கிழிச்ச மாதிரி) நீ காலைல எழுந்திருக்கிறவன். எழுந்திரு. வயல் பக்கம் போ. கிணறு இருக்கும். இறங்கி ஸ்விட்ச் போட்டுட்டு மேல வந்துடு. பைப்ல தண்ணி கொட்டும். குளி. குளிச்சிட்டு திரும்பி வா. அப்போ நான் எழுந்திருந்தா பாரு. இல்லேன்னா என்னை எழுப்பாதே."

அப்படியே போய் குளிச்சிட்டு வந்து பாத்தா அவன் இன்னும் துங்கிக்கிட்டுத்தான் இருக்கிறான். 'என் தலையெழுத்து உங்கிட்ட வந்து மாட்டினேன் பாரு'ன்னு உள்ளுக்குள்ள நினைச்சிக்கிட்டேன்.

மாமாவைப் பார்க்க ஒரு ஐடியா தோணிச்சி. எப்படியும் சாயங்காலம் அமர்ஜோதி பாக்கப் போறோம். அந்தத் தியேட்டரு பேரை எழுதி அங்கே வந்துடுங்க மாமான்னு ஒரு கடுதாசி எழுதி காலைல போஸ்ட் பண்ணிட்டா, சாயங்காலம் போய்ச் சேர்ந்திருமேன்னு நினைச்சி அப்படியே போஸ்ட் பண்ணி பெரிய புத்திசாலித்தனமா காரியம் செஞ்சதா நினைச்சேன். சந்தோஷப்பட்டேன். ஆனா சாயந்திரமாதான் ஒரு உண்மை தெரிஞ்சுது. அன்னிக்கு ஞாயிற்றுக் கிழமை. போஸ்ட் ஆபீஸ் லீவு.

முருகதாஸ் தன்னோட ஊர் லோக்கல் ஜமாவோட சீட்டாட உட்கார்ந்திட்டான்.

அவன் எனக்குப் பண்ண ஒரே நல்ல காரியம் ஒரு சைக்கிள் எடுத்துக் குடுத்ததுதான்.

"எங்க வேணும்னாலும் போயிட்டுவா. என்னைத் தொந்தரவு பண்ணாத."

எனக்கு சைக்கிள்ல ஒரு கஷ்டம். தத்தக்கா புத்தக்கான்னு ஓட்டுவேன். ஆனா ஏற இறங்க வராது. காலை ஊனிக்க ஒரு கல்லோ, மேடான ஒரு இடமோ வேணும்.

சைக்கிள்ல போய் ஒரு மாட்டுவண்டியில மோதி பள்ளத்தில இறக்கி ஏத்தி ஒரு வழியா போனேன்.

கிளம்பறதுக்கு முன்னாலேயே முருகதாஸை கேட்டேன். "ஏண்டா எப்பிடிடா திரும்பி வர்றது?"

"கவலையே படாதே. ஏதாவது மாட்டு வண்டி வரும். உனக்குப் பிடிச்ச பாட்டு இருக்கவே இருக்கே. ஜாவோ... ஜாவோ அதைப் பாடிட்டே பின்னால வந்துடு!"

(அப்ப ஜாவோ... ஜாவோன்னு ஒரு பாட்டு ரொம்ப பிரபலம். அதை நான் அடிக்கடி பாடிக்கிட்டே இருப்பேன்.)

கடைசியில மாமா வீட்டையும் கண்டு பிடிக்க முடியல்ல. கன்னையா அட்ரஸும் தெரியல்ல.

'சரி... முக்கியமான வேலையைப் பார்ப்பம்'னு தியேட்டர்ல போய் அமர் ஜோதி படம் பார்க்க உக்காந்தேன்.

இன்டர்வல்ல திரும்பிப் பார்க்கிறேன். பின் ஸீட்ல கன்னையா!

என் சந்தோஷத்துக்கு அளவே இல்லை. அப்புறம் அவங்க வீட்டுக்குப் போய் இரண்டு நாள் தங்கி மருதமலையெல்லாம் பாத்துட்டு திரும்பவும் கம்பெனிக்குப் போய்ச் சேர்ந்தேன்.

(தொடரும்)

படம் : யோகா

**"என்ன மேன் இது! கட்டிப் புரண்டு சண்டை போட்டுக்கூட அந்தக் கேடியைத் தப்பிக்க விட்டுட்டியே!"**



**"தப்பிச்சுப் போனாலும் பரவாயில்லையே! என் கைக் கடிகாரத்தையுமில்லே அடிச்சிட்டுப் போயிட்டான்!"**

**- வடவள்ளி ராமசுப்ரமணியன்**

# ‘தேவதா உச்சாடனம்’ பூஜா உபதேசம்

எண்ணிய காரியத்தை வென்று தீரவும், ஈடில்லா கோடி செல்வமீட்டவும், எதையும் செய்து காட்டும் இணையிலா சக்தி பெறவும் - மனித சக்திமயமான பூரண பூஜை - மன ஒடுக்கம் உண்டென்றால் அது ‘தேவதா உச்சாடனம்’ ஒன்றுதான். இந்த விஞ்ஞான உலகிலும் - வென்று தீரமுடியா காரியங்கள் - விஷம புன்னகை புரிகின்றன. ஆனால் அன்றைய ஆன்றோர் ஆக்கி வைத்த பூஜையான தேவதா உச்சாடன பூஜையால் ஆகாத காரியம் கிடையாது. இந்த பூரண ஸ்ரீதேவி சக்தி பெற்ற பூஜையை அறிந்தோர் இல்லையோ என்ற அளவிற்கு அரிதாகி விட்டனர். ஆகவே தான் இவ்வித அற்புதமான - ஆக்கப்பூர்வமான பூஜை அழிந்து மறைந்து விடக் கூடாது என்பதற்காக - அதனை கற்றிட உரிய ஜாதக அமைப்பும் - தீய பழக்க வழக்கமற்ற தெய்வ அனுமதி பெற்றிருக்கும் - உபதேசிக்கும் உள்ளத்தோடு இந்த விளம்பரத்தை - வெளியிடுகின்றோம். அமைப்பு இருந்தால் ஆண், பெண் இருபாலரும் செய்து சிறப்பு பெறத்தக்க பூஜையிது. இதன் வழியாக ஒரு குபேர வாழ்வை பெறுகின்ற விதி அமைப்பு உடையவருக்குத்தான் இப்பூஜையை உபதேசம் பெற்றிடும் வாய்ப்பு ஏற்படும். இந்த விளம்பரம் கண்ணில்படும் - கொடுக்கப்பட்ட காலத்திற்குள் மனு செய்யும் நிலை ஏற்படும். கற்றிடும் வாய்ப்பு பெற்று தெய்வ அனுமதி பெற்று விட்டா ரென்றால் அவர் ஒரு கோடீஸ்வரராவது உறுதி. ஜாதக நகலுடன் 7.10.1997 தேதிக்குள் - தெளிவான விலாசம் எழுதி மனுச் செய்து கொள்ளுங்கள். உரிய அமைப்பு இருப்பின் பூஜா உபதேசத்திற்கானவை மேற்கொள்ளுகின்றோம். அத்தேதி தவறி மனு செய்வோருக்கு தெய்வ அனுமதி இல்லை என்று அர்த்தம். தினசரி ஏதேனும் பூஜை செய்யும் பழக்கமும் இருத்தல் வேண்டும். மதுபானம், புகைபிடித்தல், புகையிலை போடுதல், பொடி போடுதல் பழக்கம் இருக்கக் கூடாது. இதுவரை கற்றிடும் வாய்ப்பு பெற்று கற்றவர்கள், அரிய பெரிய காரியங்களை வென்று வியந்திருக்கின்றனர்.



*பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்*
*ஸ்ரீமத் ஜெயவீரதேவதா, யோகி*
*ராஜயோக பயிற்சியாளர்,*
*பிளாட் எண்: 204, அண்ணாநகர்,*
*மதுரை – 625 020.*
*தொலைபேசி: 533412, 534634*

மும்பை மசாலா
மும்பை மசாலா

ஆடியோ மன்னன் குல்ஷன் குமார் கொலை செய்யப்பட்டபோது, "அவர் எங்கள் உதவியை நாடவில்லை; நாங்கள் என்ன செய்வது?" பாட்டை பாடிக் கொண்டிருந்தனர் போலீசார். இப்போது தேசாய் கொலை நடந்ததும் பிளேட்டை மாற்றிவிட்டனர். "அண்டர் வர்ல்டின் ஹிட்லிஸ்டில் உள்ள அடுத்த இருவர் எங்களை அணுகவேயில்லை; ஆனாலும், அவர்களறியாமலே அந்த இருவருக்கும் நாங்கள் பாதுகாப்புத் தந்து கொண்டிருக் கிறோமாக்கும்!" என்கின்றனர். அந்த "இருவர்" யார் என்பது நமக்குத் தெரியாது! அவர்கள் பாதுகாக்கப்படுவதோ அவர்களுக்கே தெரியாது! ஐயையோ... ஒண்ணுமே புரியல்லே கீழ் உலகத்திலே... (அண்டர் வர்ல்டில்தான்...)

### 'ராஜ்' ஆ? 'ராஜ்ஜியம்' ஆ?

தேசாய், தம் உயிரையே கொடுத்து, மும்பைக்கு 27வது போலீஸ் கமிஷனரைத் தேடித் தந்திருக்கிறார்! ஆம்! அவரது கொலை, மும்பையின் சட்டம் ஒழுங்கு ஆட்டம் கண்டு விட்டதோ என்ற அச்சத்தைக் கிளப்பி விட்டது. சூட்டோடு சூடாக, பழைய கமிஷனர் மல்ஹோத்ரா மாற்றப்பட்டு, புதியவர் ரோனால்ட் மென் டோன்கா நியமிக்கப்பட் டுள்ளார்! இரண்டு வருடத்துக்கு முன்பே கோபினாத் முண்டே 'ரோனி'யைத்தான் ஆதரித்தார்; ஆனால் தாக்கரேவுக்கு அதில் இஷ்டமில்லை; இருவருக்கும் 'காம்ப்ரமைஸ் காண்டிடேட்'டாகத்தான் மல்ஹோத்ரா தேர்ந்தெடுக்கப்பட்டார். இப்போது காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்த கதையாக, தேசாய் கொலை செய்யப்பட்ட சாக்கில் மல்ஹோத்ராவின் பதவி இறக்கம் நிகழ்ந் திருக்கிறது. ரோனி ஏற்கெனவே, இனி கொலை வழக்கில், ராஜ் தாக் கரேவை விசாரித்து, சேனைத் தலைவரின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டவர். ஆனால், இன்றைய நிலையில், 'ராஜ் தாக்கரேவா?' 'ராஜ்ஜியமா'? என்ற கேள்வி எழும்போது, எதற்கு முக்கியத்துவம் கொடுப்பது என்பது பால் தாக்கரேவுக்குத் தெரியாதா என்ன?

### பாஸாகிவிட்டார் பாஸ்வான்





"கொங்கன் ரயில்கள் குர்லாவிலிருந்து நான் கிளம்பும்" என பாஸ்வான் அறிவிக்க, "கூடாது! தாதரிலிருந்து கிளம்பினால் தான் ஆயிற்று" என தாக்கரே பிடிவாதம் பிடிக்க, "டெர்மினலை மாற்றாமல் பாஸ்வான் மும்பையில் கால் வைத்தால், காலை உடைப்பேன்" என்ற ரீதியில் சிவசேனைக் காரர் தடை விதிக்க, "தடையை உடைத்தே தீருவேன்" எனப் பாஸ்வான் சூளுரைக்க... கடைசியில் உனக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம் கதையாக, ரயில்கள் CST (பழைய வி.டி.) யிலிருந்து புறப்பட்டு தாதரில்

## சினிமாவையும் ஆட்டி வைக்கும் தாவூத்!

(வழியில்) நிற்குமென பாஸ்வான் முடிவு சொல்ல, பூகம்பமாக ஆரம்பித்தது, புஸ்வாணமாக முடிந்தது! ஒருவழியாக மும்பைக்குள் பாஸ்வானுக்கு 'என்ட்ரி பாஸ்' வழங்கிவிட்டார் தாக்கரே!

### குலாமி தாவூத்?

தாவூத் குழுவிற்கு, பாலிவுட்டிலிருந்து ''extortion money'' மட்டும் போதவில்லை போலிருக்கிறது; அவரைக் கேட்டுத்தான் இனி படத்தின் பெயரையே நிர்ணயிக்க வேண்டுமாம். பாருங்களேன் - நானா பாடேகர் நடித்து, பார்த்தே கோஷ் இயக்கி யிருக்கும் "முஸ்தஃபா" படத்தின் பெயரை உடனடியாக "குலாமி முஸ்தஃபா" என மாற்ற வேண்டும் என்று ஆணை பிறப் பிக்கப்பட்டிருக்கிறது. அதுவும் சென்னையில் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தபோது! முஸ்தஃபா என்பது நபிகள் நாயகத்தின் பெயராம். அதனால் இப்போது 'டப்பிங்'கின் போது, 'முஸ்தஃபா' என்று நானா பாடேகர் விளிக்கப்படும் இடங்களிலெல்லாம், "நான் உண்மையில் முஸ்தஃபாவின் அடிமை" என அவர் பதிலிறுப்பதாக மாற்றப்பட வேண்டுமாம்! ஏதோ... "நான் உண்மையில் தாவூத்தின் அடிமை" என்று வசனம் பேசச் சொல்லாதவரை சரிதான்.

### நிற்காத வானம்; போகாத மானம்

மும்பை ரயில்கள் கொஞ்ச நாட்களாகக் காற்று வாங்கிக் கொண்டு நின்று கொண்டிருக்கின்றன; முதலில் மனிதர்கள் அவற்றை ஓடவிடாமல் போராட்டம், மோர்ச்சா என்று கலாட்டா செய்தனர். அப்புறம் மழையோ மழை! இரண்டு நாட்களில், இரண்டு மாதங்களுக்கான மழை கொட்டோ கொட்டென்று கொட்டித் தீர்த்தது; தண்டவாளங்கள் வெள்ளத்தில் மூழ்கின; போலீசார் 'வானை' வைத்துக் கொண்டு ஆபீசிலேயே கைதாகியிருந்தவர் களை வீட்டிற்கு ரிலீஸ் செய்தார்கள்; நூற்றுக்கணக்கில் ஆபீஸ் செல்லும் பெண்கள் இரவெல்லாம் பிளாட்ஃபாரங் களில் கழித்தாலும், எந்த அசம்பாவிதமும் நிகழவில்லை என்பது, பெண்களைப் பொறுத்தவரையில் மும்பை மிகவும் பாதுகாப்பான இடம் என்று கொஞ்சம் 'காலரை' உயர்த்திக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

GURUDEV

# சுராணா



## ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

(முந்தைய பெயர் S.U.S. ஃபைனான்ஷியர்ஸ் (இந்தியா) லிமிடெட்)

**Group of Surana**

1971 முதல்

## இரும்பு போன்ற உறுதி, தங்கம் போன்ற நாணயம் கொண்ட குழுமத்தின் ஒரு அங்கம்.

## சுராணா அளிக்கும் முதலீடு திட்டங்கள்

# ஆண்டுக்கு வட்டி விகிதம் 15%

**CARE**
மதிப்பீட்டாளர்களால்
"போதுமான பாதுகாப்பு"
சான்றிதழ் பெற்றது.
(B B B +)

சுராணா நிறுவனங்கள் 1971 முதல் இயங்கி வருபவை. 25 ஆண்டு அனுபவம் பெற்றவை.

சுராணா நிறுவனங்கள் இரும்பு உற்பத்தி, இரும்பு வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளன. இக்குழுமம் தென்னகத்தில் இரும்பு வியாபாரத்தில் முதலிடம் வகிக்கிறது.

குழுமத்தின் மொத்த விற்பனை அளவு 1996-97-ல் ரூ.175 கோடி.

சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட் (SFCIL), ஹயர் பர்ச்சேஸ், லீசிங், பில் டிஸ்கௌண்டிங், ஃபாரின் எக்ஸ்சேஞ், பப்ளிக் டிபாசிட் போன்ற பல வகைப்பட்ட நிதி நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளது.

### SCHEME 1 - FIXED DEPOSITS

| Period (Months) | Rate of Interest per annum |
|---|---|
| 12<br>24<br>36<br>48<br>60 | 15.00% (Monthly)<br>15.19% (Quarterly)*<br>15.48% (Half-yearly)* |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Minimum Amount of Deposit for Monthly Interest is Rs.10,000/-
* Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 2 - GURUDEV CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Minimum Amount (Rs.) | Maturity Value (Rs.) | Maturity Value for Rs. 1,000/- | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|---|
| 12 | 3,000 | 3,482 | 1,161 | 16.06 |
| 24 | 3,000 | 4,042 | 1,347 | 17.36 |
| 36 | 3,000 | 4,692 | 1,564 | 18.80 |
| 48 | 3,000 | 5,446 | 1,815 | 20.38 |
| 60 | 3,000 | 6,321 | 2,107 | 22.14 |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Addition in Multiples of Rs.1,000/-
3. Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 3 - SURYODAY CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Principal (Rs.) | Maturity Value (Rs.) | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|
| 12 | 862 | 1,000 | 16.01 |
| 24 | 742 | 1,000 | 17.38 |
| 36 | 639 | 1,000 | 18.83 |
| 48 | 551 | 1,000 | 20.37 |
| 60 | 474 | 1,000 | 22.19 |

Interest at 15% Compounded at Monthly rests.

**சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்**

குரூப் ஆப் சுராணா

நெ. 16, ஒயிட்ஸ் சாலை, இரண்டாவது மாடி, சென்னை - 600 014.

போன் : 8522595 / 8526581 / 8522753 / 8522684 / 8525396 / 8525694 / 8525596

ஃபாக்ஸ் : (044) - 8520587.

**கிளைகள் : திருச்சி:** 'TAB காம்ப்ளெக்ஸ்', முதல் தளம், 32-B, வில்லியம்ஸ் ரோடு, கன்டோன்மென்ட், திருச்சி-620 001. போன்: 46821; **கொள்ளிடம்:** 7/157, மெயின் ரோடு, கொள்ளிடம்-609 102. போன்: 77454; **சங்கரன்பந்தல்:** 3/10-A, மெயின் ரோடு, சங்கரன்பந்தல்-609 308. போன்: 85423, 85536; **பெங்களூர்:** 302, 3-வது தளம், ஸ்வீஸ் காம்ப்ளெக்ஸ், 33, ரேஸ்கோர்ஸ் ரோடு, பெங்களூர்-560 001. போன்: 2281143; **எர்ணாகுளம்:** 2-வது தளம், பெப்பர்மின்ட் சதன், நெ-39/4232 எம்.ஜி. ரோடு, ரவிபுரம், எர்ணாகுளம், கொச்சின்-682 016. போன்: 374617; **கோயம்புத்தூர்:** முதல் தளம், ரெட்ரோஸ் டவர்ஸ், 424-A, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர், போன்: 471990 ஆகிய இடங்களில் உள்ளன.

29.9.96 தேதியிட்ட மக்கள் குரல், Trinity Mirror நாளிதழ்களில் வெளியான சட்டப்பூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி

ADWAVE/SFC/5420

# 22

பிராட் கதவை மடேலென்று சாத்திக் கொண்டு வெளியேறியபின் கொஞ்ச நேரத்துக்குப் பேஜ் அப்படியே உட்கார்ந்திருந்தாள். அவனைக் கழுத்தை நெரித்துக் கொலை செய்துவிட வேண்டும் போல் ஆத்திரம் வந்தது. இவ்வளவு விரைவாக, இவ்வளவு சீக்கிரமாக, இவ்வளவு தலைகீழாகத் தன் வாழ்க்கை மாறுமென்று அவள் கனவிலும் கருதவில்லை. இருதயத்தைச் சுமை அழுத்த எழுந்து சென்று ஷவரில் குளித்தாள். பிலிப்பின் சவ அடக்கச் சடங்குக்குச் செல்வதற்கு ஏற்றபடி கறுப்பு லினன் சூட்டை அணிந்து கொண்டாள்.

சரியாய் இரண்டே காலுக்கெல்லாம் தாரென்ஸன் வந்து விட்டான் அவளை அழைத்துப் போவதற்கு. கருநீல சூட்டும் வெள்ளை ஷர்ட்டும் கறுப்பு டையுமாகக் கண்ணுக்குப் பளிச்சென்று இருந்தான்.



11:29

செயின்ட் ஜான் எபிஸ்கோபல் சர்ச்சில் சவ அடக்கம் நடைபெறுவதாக இருந்தது. அங்கே அப்படியொரு கூட்டத்தைப் பேஜ் எதிர்பார்க்கவேயில்லை. நூற்றுக்கணக்கான பள்ளி மாணவர்களும் மாணவிகளும் வந்திருந்தார்கள். அனைவரும் இறந்து போன பிலிப்பின் தோழர்கள். அருமை நண்பனை இழந்ததால் வெடித்துப் போன உள்ளத்தின் துக்கம் அவர்கள் முகத்தில் வெளிப்படையாகத் தெரிந்தது. ஒரு மாணவன் இரங்கற்பா அச்சடித்து எல்லோருக்கும் வழங்கினான். பிலிப்பும் அவனுடைய நீச்சல் பயிற்சித் தோழர்களும் நின்றிருந்த அருமையான குரூப் போட்டோ ஒன்று அதில் அச்சிடப்



பட்டிருந்தது.

கார் விபத்தில் சிக்கி, ஆனால் தெய்வாதீனமாக உயிர் தப்பிய ஜேமி வந்திருப்பதைக் கண்டான் பேஜ். ஜேமியின் அப்பா ஆப்பிள் கேட்டும் அவன் அம்மாவும் அவனுக்கு இருபுறமும் அமர்ந்திருந்தார்கள். ஜேன் மிகவும் மனம் நொந்திருந்தான். அவன் பெற்றோர்கள் அவனை ஆதுரத்துடன் அணைத்துக் கொண்டிருந்தார்கள்.

பிலிப்புக்கும் அவனுடைய தோழர்களுக்கும் பிரியமான இசை வாசிக்கப்பட்டது. குறைந்தபட்சம் நானூறு மாணவர்கள் சர்ச்சுக்கு வந்திருந்தார்கள். ஆலிஸன் மட்டும் ஆஸ்பத்திரியில் மரணப் படுக்கையில் கிடக்காமலிருந்தால் அவளும் இங்கே இருந்திருப்பாள் என்று பேஜ் நினைத்துக் கொண்டாள். துக்கம் தொண்டையை அடைத்தது.

பிலிப்பின் அம்மாவும் அப்பாவும் தங்கள் வேதனையை வெளிக்காட்டாமல் கண்ணியமாக வந்து முன்வரிசையில் நின்றார்கள். ஆனால் அவர்களின் பின்னாலேயே வந்த வயோதிகர்களைக் கண்டதும் எல்லாருக்கும் கண்கலங்கி விட்டது. பிலிப்பின் தாத்தாவும் பாட்டியும்தான் அவர்கள்.

பாதிரியார் பிலிப்பைப் பெரிதும் பாராட்டிப் பேசினார். எப்படியெல்லாம் அனைவருக்கும் பிரியமானவனாக அவன் இருந்தான் என்பதையும், எத்தனை சிறந்த எதிர்காலம் அவனுக்குக் காத்திருந்தது என்பதையும் அவர் விவரித்துக் கொண்டிருந்தபோது –

ஆலிஸனின் நினைவுதான பேஜின் மனத்தில் திரும்பத் திரும்ப எழுந்தது. அவளும் எல்லாருக்கும் பிரியமானவள். அவளுக்கும் சிறப்பான எதிர்காலம் காத்திருக்கிறது.

'ஆலிஸன் இறந்து போனாலும் இவர்கள இப்படித்தானே பாராட்டிப் பேசுவார்கள்?' பாடுபட்டு அந்த நினைப்பை விரட்டியடித்தான் பேஜ்.

வந்திருந்தவர்கள் தனித்தனியாகவும் கும்பலாகவும் எழுந்து போய் மலர் வளையம் வைத்து விட்டுத் திரும்பினார்கள். தாள முடியாத துயரத்துடன் இருக்கும் அவர்களை நோக்கிப் பார்வையைச் சுழற்றிய பேஜ் திடுக்கிட்டாள்.

வந்திருந்த கூட்டத்தில் செனெட்டரின் மனைவி லாரா ஹட்சின்ஸும் இருந்தாள்.

எல்லாரையும் போலவே அவளும் கைக்குட்டையால் வாயைப் பொத்திக் கொண்டு விம்மலை அடக்கிக் கொள்வதாகத் தோன்றியது. தனியாக வந்திருந்தாள். யாருடனும் பேசவில்லை. மற்றவர்களும் அவளிடம் பேசவில்லை.

வெளியே வந்தபோது நிருபர்களின் கூட்டத்தைக் கண்டான் பேஜ். முதலில் அவர்கள் லாராவைச் சூழ்ந்து கொள்ள முயன்றார்கள். ஆனால் அவள்

தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

மூலம் : டேனியல் ஸ்டீல்

அவர்களுடன் எதுவும் பேசாமல் வேகமாகத் தனது லிமஸின் காரில் ஏறிச் சென்று விட்டாள். அடுத்து, அழுது கொண்டிருக்கும் இளைஞர்களைப் படம் எடுத்தார்கள் நிருபர்கள். பிறகு பிலிப்பின் பெற்றோர்களை நெருங்கினார்கள். ஆனால் பிலிப்பின் அப்பாவான சாப்மன் கடுங்கோபத்துடன் சத்தம் போட்டார். 'உங்களுக்கு இருதயம் கிடையாதா?' என்று கத்தினார். அதற்குள் அவருடைய நண்பர்கள் அவரை மெல்ல வேறுபுறம் அழைத்துச் சென்று விட்டார்கள்.

சர்ச்சில் சடங்குகள் முடிந்தபின், பிலிப்பின் பள்ளிக்கூடத்திலும் பிலிப்பின் வீட்டிலும் சில நிகழ்ச்சிகள் இருந்தன. ஆனால் அங்கெல்லாம் போக பேஜுக்கு மனம் வரவில்லை. சர்ச்சில் கண்ட காட்சிகளே போதும் போதுமென்றாகி விட்டது.

தாரென்ஸன் அவள் பக்கத்தில் வந்து நின்றான். வருத்தத்தில் அவன் கண்களும் சிவந்திருந்தன.

"வா, உன்னை வீட்டில் கொண்டு போய் விடுகிறேன்," என்று அவன் அழைக்க, பேஜ் அவனுடன் போய்க் காரில் ஏறிக் கொண்டாள். ஆனால் உடனே புறப்படாமல் இருவரும் மௌனமாகச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தனர்.

"செனெட்டரின் மனைவி வாரா வந்திருந்தாளே, கவனித்தீர்களா? ரொம்ப மனோதிடம். பிலிப்பின் அப்பா, அம்மா எரிச்சல்படுவார்களே என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் வந்திருக்கிறாளே?" என்றாள் பேஜ்.

"பத்திரிகைக்காரர்களுக்கு வாரா மீது நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டிருக்குமே, அதற்காகவே வந்திருப்பாள். எவ்வளவு இரக்க இருதயம் உள்ளவள், இறந்து போன பையனைப் பற்றி அவள் எத்தனை வருத்தப்படுகிறாள் என்றெல்லாம் நாளை எழுதுவார்களே? ரொம்ப சாமர்த்தியமான திட்டம்," என்றான் தாரென்ஸன் இகழ்ச்சிச் சிரிப்புடன்.

"நீங்கள் ரொம்ப மோசம்," என்றாள் பேஜ். "நிஜமாகவே மனப்பூர்வமான வருத்தத்துடன் வந்திருக்கக் கூடாதா, என்ன?"

"எனக்கு அப்படித் தோன்றவில்லை. அரசியல்வாதிகளைப் பற்றி எனக்குத் தெரியும். நிச்சயமாய்ச் சொல்கிறேன். சவ அடக்கத்துக்குப் போய்விட்டு வா என்று செனெட்டர்தான் அவளுக்கு யோசனை சொல்லியிருப்பார். எப்படியானால் என்ன? நாலு பேரிடம் நல்ல பெயர் கிடைக்கிற மாதிரி இன்று பண்ணிக் கொண்டு விட்டாள்."

ஏராளமான கார்கள் சென்று கொண்டிருந்ததால் இவர்கள் கார் மெல்ல மெல்ல ஊர்ந்து தான் செல்ல வேண்டியிருந்தது. பேஜுக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது. அவளுடைய கார் ஆஸ்பத்திரியில் இருக்கிறது. அதை எடுத்துக் கொள்ள வேண்டும். அத்துடன், ஆலிஸனைப் பற்றி நடுநடுவே போன் செய்து விசாரித்துக் கொண்டிருந்தபோதிலும், காலை முதல் நேரில் போய்ப் பார்க்கவில்லை.

"தயவு பண்ணி என்னை ஆஸ்பத்திரியில் இறக்கி விடுகிறீர்களா? ஆலியைப் பார்க்க வேண்டும்," என்றாள்.

"எனக்கும் க்ளோவைப் பார்க்க வேண்டும். இந்த மட்டில் இரண்டு குழந்தைகளும் உயிரோடு இருக்கிறார்களே, அதற்கே நாம் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்," என்றான் அவன்.

'ஆலிஸன் ஜடமாக இருப்பதைக் காட்டிலும் இறந்து போவதே மேல்' என்று பிராட் சொன்னதற்கும் இதற்கும் எத்தனை வித்தியாசம்!' என்று பேஜ் எண்ணிக் கொண்டாள்.

"ஆலி எந்த நிலைமையில் இருந்தாலும் பரவாயில்லை, உயிருடன் வந்தால் போதும் என்பதில் நான் குறியாக இருக்கிறேன். ஆனால் பிராட் அப்படி நினைக்கவில்லை. வாழ்நாள் பூரா ஊனமாக, மனவளர்ச்சி குன்றியவளாக அவள் இருப்பதைக் காட்டிலும் இறந்து போவதே மேல் என்று நினைக்கிறார்," என்றாள்.

"சில பேர் ரொம்ப ரொம்ப யதார்த்தக் கண்ணோட்டத்துடன் இருப்பார்கள்," என்று ஆறுதலாகக் கூறிய தாரென்ஸன் அவள் கண்களை நேருக்கு நேராகப் பார்த்தான். "பிராடுடன் இதற்காகச் சண்டை போடுகிறாயா, என்ன?"

"ஆமாம். இன்று காலை கூட ரொம்ப நேரத்துக்குச் சண்டை," என்று ஒரு சோகப் புன்னகையுடன் ஒப்புக் கொண்டாள் அவள்.

"குடும்பத்தில் இதெல்லாம் சகஜம்."

"அப்படியில்லை. எங்கள் விஷயத்தில் வேறு சில சிக்கல்களும் ஏற்பட்டிருக்கிறது."

அவன் கேட்க வேண்டாமென்றுதான் நினைத்தான். ஆனால் கேட்காமலிருக்க முடியவில்லை. "ரொம்ப சீரியஸான சிக்கலா?" என்றான்.

"ஆமாம். பதினாறு வருஷமாகிறது எனக்குக் கல்யாணமாகி. என் இல்லறம் பிரமாதமானது என்று நம்பியிருந்தேன் – மூன்று நாள் முன்பு வரை. அந்த நம்பிக்கை தப்பு – ரொம்பப் பெரிய தப்பு."

ஆஸ்பத்திரியை நெருங்கிக் கொண்டிருந்தது அவர்கள் கார்.

அவள் என்ன சொல்கிறாள் என்பதை அவன் ஊகித்துக் கொண்டான். "நெருக்கடி ஏற்படும் சமயங்களில் சில பேர் இதுபோலத் தப்பான வழிகளில் நிம்மதி தேடுவார்கள். சகஜம்தான்," என்றான்.

"இது இப்போது திடீரென்று ஏற்பட்டதல்ல. ரொம்ப நாளாகவே ஒரு பெண்ணிடம் அவருக்குத் திருட்டுத்தனமாக உறவு இருந்து

வந்திருக்கிறது. இப்போது கையும் களவுமாக அகப்பட்டு விட்டார். அவ்வளவுதான்."

எப்படி இவ்வளவு மனம் விட்டுத் தாரென்ஸிடம் பேசுகிறோம் என்று அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. அம்மாவிடமோ அக்காவிடமோ, ஏன் நெருங்கிய தோழியான ஜேனிடம் கூட, சொல்லியிருக்க மாட்டாள். அவள் எதையும் ஒளிக்காமல் பழகியது கணவன் பிராட் ஒருவனிடம்தான். அவனும் இப்போது இல்லையென்றாகி விட்டது.

ஆஸ்பத்திரியை அடைந்தார்கள். ஆலிஸின் நிலைமையில் எந்த முன்னேற்றமும் இல்லையென்று தெரிந்தது. காரை எடுத்துக் கொண்டு ஜேனின் வீட்டுக்குப் போனாள், ஆண்டியை அழைத்துக் கொள்வதற்காக.

ஆண்டி பேஸ்பால் விளையாடிவிட்டு அப்போதுதான் திரும்பியிருந்தான். விளையாட்டு உடையில் இருந்தான்.

"ஹலோ மிஸ்டர் ஆண்ட்ரூ! எப்படி இருக்கீங்க?" என்று உற்சாகமாக இருப்பது போலப் பாசாங்கு செய்தாள் பேஜ்.

ஆனால் ஆண்டியின் முகத்தில் உற்சாகம் தெரியவில்லை. "திரும்பி ஆஸ்பத்திரிக்குப் போய் விடுவாயா அம்மா? இன்று ராத்திரியும் நான் இங்கேதான் இருக்கணுமா?"

"இல்லை. வீட்டுக்குப் போகலாம் வா," என்றவள் சில நிமிடம் ஜேனிடம் பேசிக் கொண்டிருந்த பின் மகனுடன் வீடு திரும்பினாள். குழந்தையின் ஏக்கத்தைப் பார்த்தபின், இன்று இரவு ஆஸ்பத்திரியில் தங்க வேண்டாமென்று அவள் தீர்மானித்திருந்தாள்.

ஆண்டிக்காகச் சமையல் செய்தாள். தங்கள் இருவருக்காகவும் மேஜையில் தட்டுக்களை வைத்துக் கொண்டிருந்தபோது –

பிராட் வந்தான்.

"அப்பா!" சாப்பிட உட்கார்ந்திருந்த ஆண்டி குடுக்கென்று எழுந்து ஓடிப் போய் அவனைக் கட்டிக் கொண்டான். தாயின் அன்புக்காகவும் தந்தையின் அரவணைப்புக்காகவும் குழந்தை எவ்வளவு ஏங்கியிருக்கிறான் என்பது கண்கூடாகத் தெரியவே பேஜுக்கு ஆத்திரம் பொங்கியது.

"வீட்டுக்கு வழி தெரிந்தது போலிருக்கிறது!" என்றாள் எரிச்சலுடன்.

பிராடுக்குக் கோபம் வந்தது. அவன் ஆண்டிக்காகவே தன் சொந்தப் பிரச்னைகளை ஒதுக்கி விட்டு வந்திருந்தான். வீட்டுக்குப் போகிறேன் என்று சொன்னதில் ஸ்டிபானியுடன் சண்டை வேறே.

"சரி, சரி. ஆரம்பித்து விடாதே," என்று முணுமுணுத்தவாறு ஆண்டியின் அருகில் உட்கார்ந்து கொண்டான். "எனக்கும் சாப்பிட ஏதாவது இருக்கிறதா?"

"இல்லாமலென்ன?"

அவனுக்குத் தட்டில் உணவு வகைகளை வைத்தாள். ஆண்டி தன் பாட்டுக்கு ஸ்கூலைப் பற்றியும் தோழர்களைப் பற்றியும் பேஸ் பாலைப் பற்றியும் சளசளவென்று பேசிக் கொண்டிருந்தான். "நாளைக்கு நாம் ஆலியைப் பார்க்க ஆஸ்பத்திரிக்குப் போகலாமா, அப்பா?" என்று அவன் கேட்டபோது கணவனின் முகத்தைக் கவனித்தாள் பேஜ். அவன் ஆண்டி பேசியது எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல், கடுகடுவென்று முகத்தை வைத்துக் கொண்டு பேப்பரைப் புரட்டிக் கொண்டிருப்பது தெரிந்தது.

"பேப்பர் எங்கே போகிறது? அப்புறம் படித்துக் கொள்ளக் கூடாதா?" என்றாள் கோபமாக.

"ஏன்? நான் பேப்பர் படிப்பதில் உனக்கு என்ன நஷ்டம்?" என்றான் அவனும் சூடாக.

அம்மாவையும் அப்பாவையும் மாறி மாறிப் பரிதாபமாகப் பார்த்தான் ஆண்டி. அதன் பின் எதுவும் பேசாமல் சாப்பிட்டு விட்டுத் தன் அறைக்குப் போய் விட்டான்.

சமையலறை வேலைகளை முடித்துக் கொண்டு அவனைப் பார்ப்பதற்காகப் பேஜ் சென்றபோது, தன் நாய்க்குட்டி வில்லியை மார்போடு கட்டிக் கொண்டு, அழுதபடியே அதனிடம் அவன் புலம்பிக் கொண்டிருந்தான்.

பேஜ் அவனருகில் போய் உட்கார்ந்ததும், "என்னம்மா, நீயும் அப்பாவும் எப்பப் பார்த்தாலும் சண்டை போட்டுக் கொண்டு இருக்கீங்க?" என்றான்.

(தொடரும்)

"அந்தப் பத்திரிகை செய்திகளை ரொம்ப முந்தித் தருதா! ஆசிரியர் யார்?"



"பிரபல ஜோதிடர் பாலமோகன்!"
– வெ. ராஜாராமன்



# இதுதான் ரியல்

**எ**வரும் நம்பவில்லை. ஒரு காலத்திலும் பாலகிருஷ்ணன் நஞ்சை நிலத்தை விற்க மாட்டார். ஏதோ வதந்தி. அவராவது நிலத்தை விற்பதாவது? எல்லாம் பொய்!

இப்படித்தான் முதலில் எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

ஆனால், கடந்த பத்து நாட்களாக அவர் நடவடிக்கைகளைப் பார்க்கும் போது நம்பாமலும் இருக்க முடிய வில்லை.

'ரியல் எஸ்டேட்' என்று சொன் னாலே போதும். மனிதன் எரிந்து விழுவார். நெல் விளைகிற நிலத்தைக் கல் போட்டு மூடுகிறார்கள் பாவிகள்! இவர்கள் உருப்படுவார்களா? மாடு வளர்க்க ஓட்டுக் கொட்டிலும், தாங்கள் வசிக்கக் கூரை வீடு மாய் இன்னும் வசிக்கிறார்

# அ.சி. மணியன்

# எஸ்டேட்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ.1,500/- மூன்றாம் பரிசுக் கதை – 2

களே, அவர்கள் முட்டாள்களா?

விளைநிலம் முக்கியம். அதற்குக் கால்நடை அவசியம். மூன்றாவதுதான் நாம் – என்று பரம் பரை பரம்பரையாக வாழ்ந்தார்களே, அவர்கள் என்ன பைத்தியக்காரர்களா?

மனம் துணிந்து விளைநிலத்தைத் தூர்த்து வீடு கட்டுகிறார்களே, நியாயமா?

இன்னும் நிறைய பேசுவார், பாலா. அவரா விளைநிலத்தை விற்கப் போகிறார்? ஒருக்காலும் இருக்காது. சிலர் விற்று விட்டார் என்றே பேசிக் கொண்டார்கள். அது உண்மையாக இருக்கலாம் என்று இப்போது தெரிய வருகிறது.

சோழா ரியல் எஸ்டேட் உரிமையாளர் இவரை அடிக்கடி வந்து சந்திக்கிறார். இவரும் அவருடைய காரில் போகிறார். எங்கு போகிறார்கள், என்ன செய்கிறார்கள் என்பது மட்டும் புரியவில்லை.

பத்து நாட்களாக இந்தக் கதை தொடர்கிறது.

பி.எஸ்ஸி., கெமிஸ்ட்ரி படித்து விட்டுச் சென்னையில் 'டெலிபோன் எக்ஸ்சேஞ்ச்'ல் வேலைக்குச் சேர்ந்தார், இருபது ஆண்டுகளுக்கு முன். இப்போது அது தொடர்ந்திருந்தால், நிறைய சம்பளம் கிடைத்திருக்கும். இன்னும் ஐந்தாண்டுகளுக்குப் பிறகு 'வாலண்டரி ரிட்டயர்மெண்ட்' வாங்கினால் கூட நிறைய பணமும் கிடைக்கும். நிரந்தர பென்ஷனும் கிடைக்கும்.

அதை உதறிவிட்டுக் கிராமத்துக்கு வந்தவராயிற்றே!

தலைமுறை, தலைமுறையாக விவசாயக் குடும்பம். நாம் விவசாயம் செய்வதே சிறப்பு. மக்களுக்கு உணவு தரும் பணி எவ்வளவு புனிதமானது. நாம் அதை விட்டு விடலாமா? என்று பிடிவாதமாக கிராமத்திற்கு வந்தவர்.

காவிரிப் பிரச்னை, கூலிப் பிரச்னை, உரத்தட்டுப்பாடு எதுவானாலும் அலுத்துக் கொள்ள மாட்டார். குறுவை அறுவடை சமயம், மழைக் காலமானதால் பாதிப்பு ஏற்படும். இரண்டாம் போகம் தாளடி, தை, மாசியில் தண்ணீர்த் தட்டுப்பாட்டால் நஷ்டத்தை உண்டாக்கும். பாலா இதுவரை எதற்கும் அஞ்சியதே இல்லை.

விவசாயம் வியாபாரம் இல்லை. தெய்வத் தொழில். வள்ளுவரே சொல்லியிருக்கிறாரே, என்பார்.

ஒரு பொருளை வாங்கித் தனக்குரிய லாபத்தைச் சேர்த்து விற்பனை செய்ய வியாபாரிக்கு உரிமை உண்டு. அரசாங்கமும் ஒத்துழைக்கும். ஆனால் அந்த உரிமை விவசாயிக்கு இல்லை.

அரசாங்கம் நிர்ணயிக்கும் விலை கொடுத்து உரம் வாங்கி, அவர்கள் நிர்ணயிக்கும் 'கூலி' கொடுத்து விவசாயம் செய்து, அவர்கள் நிர்ணயிக்கும் விலைக்குத்தான் விளைபொருட்களை விற்பனை செய்ய முடியும்!

இதில் எங்கிருந்து லாபம் பெற முடியும்? அதனால்தான் நாளுக்கு நாள் நாட்டம் குறைந்து, விவசாயிகள் நெல் விளையும் நஞ்சையை விற்று விட்டு, வேறு தொழிலுக்குப்

போகிறார்கள்.

இவையெல்லாம் பாலாவுக்குத் தெரியாதா, என்ன? அவருக்குத் தெரியும். ஆனால் விவசாயம் செய்வதை மட்டும் அவர் விட்டு விடவில்லை. கஷ்டமோ, நஷ்டமோ கவலைப் பட மாட்டார். பலர் தம்மைப் பைத்தியக் காரன் என்று நினைப்பதை அவர் அறிவார். அதைப் பொருட்படுத்த மாட்டார்.

அப்பேர்ப்பட்டவர் தன் நஞ்சை நிலத்தை விற்கிறார். சென்னைக்குப் போகப் போகிறார். ஒரு தொழிற்சாலை நிறுவத் திட்டமாம்.

மகன்கள் வேலைக்குப் போய் விட்டார்கள். பெண்கள் திருமணம் முடிந்து அவரவர் கணவர் வீட்டில் இருக்கிறார்கள். நிலம் விற்ற பணத்தைப் 'பேங்க்'கில் போட்டாலே நிறைய வட்டி வரும். அல்லல் இல்லாமல் போகும். அதைத்தான் பாலா செய்யப் போகிறார். இப் படியும் பல பேர் பேசிக் கொண்டார்கள்.

எதைத்தான் பேசிக் கொள்ள மாட்டார் கள், மக்கள்? நாக்கிற்கு என்ன 'பிரேக்'கா இருக்கிறது?

**கா**ரில் போகும்போதே, கேட்டார் ரியல் எஸ்டேட் உரிமையாளர்.

"என்ன பாலா, பிடிவாதம் பிடிக்கிறீர்களே! நீங்களும்தான் இருபது வருஷத்திற்கும் மேல் விவசாயம் செய்றீங்க. என்ன லாபத்தைக் கண்டீங்க? இதை வித்து, 'பேங்க்'ல போட்டா வட்டியே போதும். அந்த அளவிற்கு விவசாயத் தில் கிடைக்காதே! நீங்க சொன்ன விலையி லேயே பிடிவாதமா இருக்கீங்களே! கொஞ்சம் குறைச்சுச் சொல்லுங்க. இன்னைக்கே பணத்தை 'பேங்க்'ல டெபாசிட் செய்திட லாம்."

"அய்யா ஒரு ரூபாய் கூட குறைக்க மாட்டேன். உயிர் போகும் போல இருந்தாலும் நிலத்தை விற்க மாட்டேன். ஊர்ல ஒருத்தர் நம்பலே! நானே இறங்கி வந்திருக்கேன். நீங்க விலையையும் இறக்கிக் கேட்கிறது, நியாயமா?"

"இது வியாபாரம்ங்க. நீங்க சொன்ன விலையில கொஞ்சம் குறைச்சுக் கொடுத்தாத் தானே, வாங்குற 'பார்ட்டி'க்கும் திருப்தியா இருக்கும்."

"இதோ பாருங்க. நீங்க என்ன பேசினாலும் என் முடிவை நான் மாத்திக்க மாட்டேன். வீணா அவசியமில்லாம பேசாதீங்க. போன வருஷம் வந்தீங்களா? இப்போ வந்திருக்கீங் களே, ஏன்? திருவாரூர் மாவட்டம் ஆயிடுச்சு. கலெக்டர் ஆபீஸ் கட்ட இடம் ஒதுக்கியாச்சு. முதல்வர் நேரில் வந்து பார்த்துச் சம்மதம் சொல்லிட்டாரு. அந்த இடத்த ஒட்டிப் பக்கத்துல என் நிலம் இருக்கு. வருங்காலம் முன்னேற்றம்தான். அப்போ இன்னும் மதிப்பு கூடும். அதற்குத்தானே என் நிலத்தை வாங்கத் துடிக்கிறீங்க! பின்னாலே உங்களுக்குப் பெரிய லாபம் வரப்போகுது!"

இனி அவரிடம் பேசிப் பயனில்லை என்ப தைக் கண்டுகொண்டார், ரியல் எஸ்டேட் உரிமையாளர். மௌனமானார்.

கார், நிலம் வாங்கும் பார்ட்டியின் வீட்டுக் குப் போனது. அங்கு அவர்கள் தயாராய் இருந் தார்கள்.

மறுபடியும் பாலகிருஷ்ணனை லேசாக அசைத்துப் பார்த்தார்கள். அவர் அசைந்து கொடுத்தால்தானே? அவர் பிடியைச் சிறிதும் தளர்த்தவில்லை.

பேரம் முடிந்தது. ஒப்பந்தப் பத்திரம் கையெழுத்தானது. சில ஆயிரங்கள் பாக்கி வைத்து, மொத்தப் பணமும் கைமாறியது. ரியல் எஸ்டேட் காரிலேயே சென்று, மூன்று வங்கிகளில் டெபாசிட் செய்துவிட்டு ஊர் திரும்பினார், பாலா.

**வீ**ட்டில் மூத்த மகன் சென்னையிலிருந்து எழுதிய கடிதம் காத்திருந்தது.

எப்படி அதற்குள் சென்னை வரை செய்தி தெரிந்தது. யார் மூலம் தெரிந்திருக்கும்? உலை வாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடி யாது என்பது சரியாய்த்தான் இருக்கிறது!

என்ன சிந்தித்தும் யாரால் மகனுக்குச் செய்தி தெரிந்தது என்பதைப் பாலாவால் புரிந்து கொள்ள முடியவில்லை.

சென்னை அண்ணா நகரில் அழகான பங்களா இருக்கிறதாம். அதை வாங்கிக் கொண்டு, அங்கேயே வந்து விடும்படி எழுதி யிருந்தான்.

பாலா தானாகவே சிரித்துக் கொண்டார். ஐம்பது வயதிற்கு மேல் தனக்குச் சென்னை வாசம் தேவைப்படுகிறதா? சிந்தித்தார்.

நிலம் விற்ற பணத்திற்கு வேறு திட்டம் சொல்கிறான், மகன். என் உடம்பே அந்த நிலத்தில் இருந்து விளைந்த நெல்லால்தானே! ஏன் அப்பா விற்றீர்கள்? விவசாயம் உயிர் மூச்சு என்பீர்களே – என்று இப்படி எழுதி இருந்தாலும் பாலாவுக்கு ஆறுதலாக இருந்திருக்கும்?

தனக்குத்தானே பின்னால், என்கிற கணக் கில் சென்னையில் வீடு வாங்கச் சொல்கிறான், பிள்ளை. ஐம்பது வயது அப்பனுக்கு அனைத் தும் முடிந்து விட்டது என்று நினைக் கிறானோ! அதுதான் சென்னையில் முடக்கத் திட்டம் போடுகிறானோ!

தொண்டுக் கிழவனாகவா போய் விட் டேன், நான்? சாவை இப்போதே 'வா, வா' என்றா அழைத்துக் கொண்டிருக்கிறேன்?

கம்பூன்றி நடக்கவில்லை, நான்! இன்னும்

தென்பு, தைரியம் இருக்கிறது, எனக்கு. இன்னும் உழைப்பேன். உழைப்பது என் கடமை, கொள்கை. அதை மாற்ற இவர்கள் யார்? என்ன செய்வது என்கிற திட்டம் எனக்குத் தெரியும்.

இன்னும் என்னென்னவோ சிந்தனைகள்! பாலகிருஷ்ணன் உறுதியாக இருந்தார்.

ஆறு மாதங்களாக அப்பாவைப் பார்க்காத பெரிய மகள் கோவையிலிருந்து அவசரமாக வந்தாள்.

பாசமும் ஆசையும் போட்டியிட, பாலாவும் அவர் மனைவியும் மகளை வரவேற்றார்கள்.

மறுநாள்தான் மகள் வந்த காரணம் பாலாவுக்குப் புரிந்தது.

மோல்டிங் செய்யும் எம்.வி. பவுண்டரீஸ் உரிமையாளர் அவள் கணவர். திருவெறும்பூரிலிருந்து கம்பெனிக்கு நிறைய 'ஆர்டர்' கிடைத்திருக்கிறதாம். ரொட்டேஷனுக்கு இரண்டு லட்ச ரூபாய் தேவைப்படுகிறதாம். இரண்டு மூன்று மாதங்களில் திரும்பத் தந்து விடுவாளாம்.

தகப்பன் நிலம் விற்ற செய்தியும், பணம் இருக்கிற விவரமும் தனக்குத் தெரிந்திருந்தாலும் அதைப் பற்றி ஒன்றும் கேட்கவில்லை. பாலாவும் அதைப் பற்றி அவளிடம் சொல்லவில்லை.

இவர், அவள் கேட்ட பணத்திற்குக் கைவிரித்த போதுதான், "நிலம் விற்ற பணம் என்னாச்சு?" என்று கேட்டாள்.

"ஓகோ... அதைக் கேட்குறியாம்மா? அது எப்படி உனக்குத் தெரியும்?"

"என்னப்பா, அப்படிச் சொல்லிட்டீங்க? இங்கே என்ன நடந்தாலும், அடுத்த நாளே கோயம்புத்தூர்ல எனக்குத் தெரிஞ்சிடும். என் பிரண்ட்ஸ் எவ்வளவு பேர் இருக்காங்க. தெரியப்படுத்தாமல் விடுவாங்களா?"

"இந்த சேதியையும் அப்படித்தான் தெரிஞ்சுக்கிட்டியாம்மா?"

"ஆமாம்ப்பா."

"என்னம்மா பண்றது? இருபது வருஷமா விவசாயத்தில ஏகப்பட்ட நஷ்டம். அதான் வித்திட்டேன். கடன் அடைக்கவே போதலையேம்மா! உன் அம்மாவும் நானும் மேற்கொண்டு எப்படிக் குடும்பம் நடத்தப் போறோமோ தெரியலியே! சாப்பாடு போட்ட நிலத்தை வித்தாச்சு...!"

"என்னப்பா, இப்படிச் சொல்றீங்க? எப்படிப்பா கடன் வந்திச்சு? அவ்வளவு பணத்தையுமா கடன் கொடுத்தீங்க?"

"ஏம்மா, நிலத்தை வித்துப் பணத்தை வாங்கினதை மட்டும்தான் உனக்குத் தெரியப் படுத்தினாங்களா? மற்றதை தெரியப்படுத்தலியா?

## அருள்வாக்கு



அன்னதானம் பரோபகாரத்தில் ஓர் அம்சமே. பரோபகாரம், சமூக சேவை, சோஷல் ஸர்வீஸ் என்று இந்த நாட்களில் ஆர்ப்பாட்டமாகப் பிரகடனம் பண்ணுவதை, முற்காலத்தில் எந்தப் பகட்டுமில்லாமல் சுபாவமாகவே மக்கள் செய்து வந்தனர். இதற்கு 'பூர்த்த தர்மம்' என்று ஒரு பெயர். ஜனங்களுக்காகக் கிணறு, குளம் வெட்டுவது, அன்னதானம், அவர்களின் ஆத்ம க்ஷேமத்துக்காகக் கோயில் கட்டுவது, அதன் அங்கமாக நந்தவனம் அமைப்பது எல்லாம் 'பூர்த்த தர்ம'த்தில் சேர்ந்தவை. இதில் கிணறு, குளம் வெட்டுவது முதலில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால்தான் பேச்சு வழக்கில் கூட, 'அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்? வெட்டிக் கொண்டு இருக்கிறானா?' என்கிறோம். 'வெட்டுவது' அவ்வளவு பெரிய தர்மம். தாகமெடுத்த பசுக்களும் மற்ற பிராணிகளும் நீர் அருந்துவதற்காகக் கிராமத்துக்கு வெளியே மேய்ச்சல் பூமியில் ஒரு குளம் வெட்டினால் எவ்வளவோ புண்ணியம். ஒரு கிராமத்தில் அல்லது பேட்டையில் இருக்கிற சகலரும்- பணக்காரர் ஏழை என்ற வித்தியாசமில்லாமல் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற வித்தியாசமில்லாமல்- ஒன்று சேர்ந்து மண்வெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு இப்படிப்பட்ட சரீரப் பிரயாசையுள்ள பரோபகார சேவைகளில் ஈடுபட வேண்டும். இதனால் சமூக ஒற்றுமையும் அதிகமாகும். புத்தி சுத்தமாகக் கல்வி, மனசு சுத்தமாக தியானம், வாக்கு சுத்தமாக சுலோகம் இப்படியெல்லாம் இருக்கின்றன அல்லவோ? சரீரம் சுத்தமாவதற்கு அதனால் சேவை செய்ய வேண்டும். உழைக்க உழைக்க சித்தசுத்தியும் வரும். உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்றில்லாமல் எல்லாருடனும் சேர்ந்து மண்ணை வெட்டும்போது அகங்காரத்தையும் வெட்டி எடுத்ததாகும். குளத்தில் தண்ணீர் ஊறுவதைவிட நம் இருதயத்தில் ஊறுகிற அன்பே முக்கியம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

ஓகோ... பிரண்ட்ஸ்ன்னா இப்படித்தான் இருப்பாங்களோ?''

உண்மையாகப் பாலாவுக்குக் கடன் சுமை, அதற்காகத்தான் நிலத்தை விற்றிருக்கிறார் என்று நம்பியவள் போல, மகள் தகப்பனிடம் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை.

அன்றே கோயம்புத்தூர் போய் விட்டாள்.

'எம்.எல்.ஏ. ஆகி ஒரு வருஷமாச்சே... சட்டசபையில் ஏதாவது பேசியிருக்கீங்களா?''



''நேற்றுக்கூட அரை மணி நேரம் பேசினேன்... பக்கத்து சீட் எம்.எல்.ஏ.வுடன்!''

— உ. ராஜாஜி

சென்னையில் இருக்கும் மகன் அண்ணா நகரில் வீடு வாங்குவதில் குறி வைத்துக் 'கடிதத் தூது' அனுப்பியிருக்கிறான்.

மூத்த மகளோ, எந்த விசாரணையும் இல்லாமல், நிலத்தை விற்ற தகப்பன், தாயின் நிலைமை என்ன என்ற சிந்தனையே இல்லாமல், இரண்டு லட்சத்திற்கு அடிபோடுகிறாள்.

இன்னும் மற்ற பிள்ளைகள் இருக்கிறார்கள். அவர்கள் அணுகுமுறை எப்படி இருக்கிறதோ?

அதைப் பற்றி எல்லாம் கவலைப்படவில்லை பாலா.

தனக்கென்று வகுத்துக் கொண்ட, குறிக்கோளில் திடமாக இருந்தார்.

இந்த நேரம் பார்த்து, இலவச யோசனை சொல்ல நிறைய நண்பர்கள் புதிதாக முளைத்தார்கள். இவர் என்ன யோசனையில் இருக்கிறார்? என்ன செய்யப் போகிறார்? இவரிடம் எவ்வளவு பணம் இருக்கிறது? – என்று எதுவும் தெரியாமல், புதிய புதிய யோசனைகளைச் சொன்னார்கள்.

ஒருவர் லாரி வாங்கலாம் என்றார். இன்னொருவர் 'பஸ் பர்மிட்'டுக்கு அப்ளை செய்யலாம் என்றார். சென்னைக்குப் போய்ச் சினிமா கம்பெனிகளுடன் தொடர்பு கொண்டால், அதிக வட்டிக்கு அவசரத் தேவைக்குப் பணம் கொடுத்து வாங்கினாலே சம்பாதித்து விடலாம்! இது வேறு ஒருவர் யோசனை.

எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டார், பாலா. ஆனால் அவர் என்ன செய்யப் போகிறார் என்பதுதான் யாருக்கும் புரியவில்லை.

இடையில் இரண்டு முறை சென்னைக்குப் போய் வந்தார்.

பக்கத்து வேலங்குடிப் பண்ணை முதலாளி கிருஷ்ணமூர்த்தி முதலியாரைச் சந்தித்தாகச் சொல்லிக் கொண்டார்கள். மூத்த மகன் வீட்டுக்குப் போய் வந்ததாகச் சொன்னார்கள்.

எதையும் காதில் போட்டுக் கொண்டவராகத் தெரியவில்லை, பாலா. அவர் எங்கோ போவதும் வருவதுமாகத் தம் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

இவ்வளவுக்கும் அவர் மனைவி ஒரு வார்த்தை அவரிடம் கேட்கவில்லை. சென்னையில் 'பேண்ட்'டும், 'சர்ட்டு'மாக, ஸ்கூட்டரில் போய் வரும் ஆபீசராக இருக்க வேண்டியவர், நான்கு முழ வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு, வெய்யிலிலும், மழையிலும் வயல் வெளிக்குப் போய் வருபவரைப் பார்த்துக் கொண்டிருந்தவள், இப்போதும் அமைதியாக இருந்தாள். 'இராமன் இருக்கும் இடமே அயோத்தி!' என்ற 'டைப்' அவர் மனைவி. இந்தக் காலத்துப் பெண்கள் என்றால் முடியுமா? தன் இஷ்டப்படி நடக்காத கணவரை ஆட்டி வைத்துக் கூத்துப் பார்த்திருப்பார்கள்.

இந்த விஷயத்தில் பாலா கொடுத்து வைத்தவர்தான்!

நகரத்திற்கு வரும் முக்கிய சாலைகளை ஒட்டியிருந்த நஞ்சை வயல்களெல்லாம் ரியல் எஸ்டேட்காரர்களின் கடும் உழைப்பால் மனைகளாக மாறிக் கொண்டு வந்தன. ஆங்காங்கே கட்டடங்களும், பங்களாக்களும் எழும்பிய வண்ணம் இருந்தன.

நெல் சாகுபடியில் நீண்ட நாட்களாக, நட்டத்தையே பார்த்த பல விவசாயிகள், நிலத்தை விற்று, அதன் மதிப்பைப் போல் பல மடங்குகள் அதிகமாய்ப் பணம் பெற்றார்கள்.

நிலத்தை விற்பதிலோ, விவசாயத்தை விடுவதிலோ கொஞ்சமும் யாரும் தயக்கங்காட்டியதாகத் தெரியவில்லை. அவரவர் பிடித்த வேறு தொழில்களைத் தேடுவதில் முனைந்தார்கள்.

திருவாரூர் மேற்கு எல்லையில், தஞ்சை போகும் சாலையை ஒட்டியிருந்த நிலங்களுக்குத்தான் ஏகக் கிராக்கி. அங்கே தானே மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் வரப் போகிறது! இங்கேதானே பாலா விற்ற நிலமும் இருக்கிறது.

பாலாவின் நிலத்திலும் கட்டட வேலைகள் துவங்கி நடந்து கொண்டிருந்தன.

அன்றைக்குப் பாலகிருஷ்ணன் வீட்டிற்கு முன்னால் ஒரு புது டிராக்டர் வந்து நின்றது.

மிகுந்த மகிழ்ச்சியோடு வீட்டிற்குள் இருந்து ஓடி வந்த பாலா, ஒரு குழந்தையைக் கொஞ்சுவது போல, டிராக்டரை அங்கம் அங்கமாகத் தொட்டுப் பார்த்தார். மகிழ்ச்சியில அவர் முகம் பிரகாசமாகின.

முதல் நாளே தன் கடிதத்திற்குப் பதில் எழுதாத தந்தையை நேரில் சந்திக்கும் ஆவலோடு, சென்னையிலிருந்து வந்த மூத்த மகன் அவர் அருகில் வந்து நின்று வியப்போடு டிராக்டரைப் பார்த்தான்.

பாலா டிராக்டர் டிரைவரையும், அவர் கூட வந்த இன்னொருவரையும் அழைத்துப் போய் முன் ஹாலில் உட்கார வைத்தார்.

தன்னையே உற்றுப் பார்த்த மகனிடம், "என்ன அப்படிப் பார்க்கிறே? நமக்குத் தாம்ப்பா புது டிராக்டர். வாங்கியாச்சு! நீ உள்ளே போய் அம்மாகிட்டே இவங்களுக்குக் 'காப்பி' வாங்கிட்டு வா" என்று ஏவினார்.

மகன் காப்பி கொண்டு வந்தான். வந்தவர்களிடம் வேலை முடிந்தது. அவர்கள் கிளம்பிப் போனார்கள்.

மகன் தந்தை எதிரில் நின்றான்.

"நெடுஞ்சாலை ஓரமா இருக்கிற நிலங்களைத்தான் 'ரியல் எஸ்டேட்'காரனுங்க வளைச்சிப் போடுறானுக. உன் பக்க கிராமத்தை இவங்க திரும்பிக் கூடப் பார்க்கலே! இவங்க நவீன நாகரீகம் அங்கே வர இன்னும் இருபது, முப்பது வருஷம் ஆகலாம். அதற்குள்ளே என்னென்ன மாறுதலோ!

"நம்ம வேலங்குடி முதலியார் சென்னைக்குப் போய் சினிமா கம்பெனி நடத்துறாரு. அவர் கிராமம் விலைக்கு வந்தது. நானே நேரில் போய் அப்படியே அடைச்ச மாதிரி அந்த நிலத்தை வாங்கிட்டேன். எல்லாம் உன் பேர்ல, அம்மா பேர்ல, தம்பிகள் பேர்லதான் பத்திரம் பண்ணியிருக்கேன். பணத்தை வீணாக்கலே.

"நம்மகிட்ட இருந்த நஞ்சையைப் போல பத்து மடங்கு வாங்கியிருக்கிறேன். தீவிரமா விவசாயம் செய்யப் போறேன். அதான் ஒரு டிராக்டரும் வாங்கிட்டேன். எல்லாம் உங்களுக்காகத் தான்! என்னப்பா நான் சொல்றது சரிதானே!"

பாலா சொன்னார். மகன் வாயைத் திறக்கவில்லை.

"இதோ, பார். சுவரில் காந்தி படம் மாட்டி இருக்கு. அவர் சுதந்தரம் வாங்க தன் வாழ்க்கையை அர்ப்பணிச்சார். நம்மால் முடியுமா? அவர் படத்தை வச்சுக்கும்பிடறோம். அதுக்கு ஓர் அர்த்தம் வேணாமா?

"எல்லாரும் விவசாயத்தில் நட்டம், லாபமில்லே'ன்னு ஒதுங்கிட்டா... விவசாயத்தை யார் பார்க்கிறது? தேசப் பிரச்னை தானே, உணவுப் பிரச்னை! அதற்கு என்னால் ஆனதைச் செய்யணும்! அதுதான் இந்தத் திட்டம், புது கிராமம், தீவிர விவசாயம். இது தாம்பா ரியல் எஸ்டேட்!"

என்னென்னவோ நினைத்து வந்த, பாலாவின் மகன் தன் ஏமாற்றத்தை மறைக்க மிகுந்த சிரமப்பட்டான்.

பாலாவின் முகத்திலோ, 1947 ஆகஸ்ட் 15-ம் நாளில் இருந்த இந்திய மக்களின் ஒட்டு மொத்தமான மகிழ்ச்சி குடி கொண்டிருந்தது!



"என்ன காவலனே, என்னைப் பார்க்க வருபவர்களிடம் 'சம்திங்' வாங்குகிறாயாமே?"

"அய்யய்யோ, இல்லவே இல்லை அரசே!"

"இனிமே அதில் கால்பங்கை மந்திரியிடமும் கால்பங்கை தளபதியிடமும் கால்பங்கை என்னிடமும் செலுத்தி விடு."

– ஆர். வசந்த குமார்

# நடக்குமென்பார், நடக்கும்!













**மேஷம் :**

இந்த புத்தி இருக்குதுங்களே, அது இந்த வாரம் மொத மூணு நாள் உங்களுக்கு ரொம்ப ஷார்ப்பா வேலை செய்யும். திட்டமெல்லாம் சூப்பரா போடுவீங்க. அதைவிட சூப்பரா காரியங்கள் ஒர்க்-அவுட் ஆகும்! குறிப்பா இந்த ராசில இருக்கற எழுத்தாளர், கவிஞர், சினிமாக்காரங்களுக்கு இப்ப ஓஹோ! ஆனா பார்ட்னர் யாராச்சும் இருந்தா, அவங்களால தடை வர சான்ஸ் இருக்குது, கவனம்! அப்பால, சம்சாரம் உடம்பு சரியில்லாம போவலாம். நல்லா கவனிச்சிக்கங்க. மத்தபடி சுமுகமாத்தான் இருக்கும்.

**ரிஷபம் :**

ஹனிமூன் போறீங்களா? நார்த்சைடு போயிட்டுவாங்க. ரொம்ப குதூகலமா ஃபீல் பண்ணுவீங்க. (காஷ்மீர் வேணாம் சார். வெங்காய வெடி வெடிக்கறாங்க.) ஹனிமூனுன்னு இல்லை. எங்க போறதா இருந்தாலும் என்ன செய்யறதா இருந்தாலும் வெள்ளிக் கிழமைக்கு அப்புறம் செய்ங்க. வாரத் தொடக்கம் கொஞ்சம் சரியா இல்லை. வியாபாரிங்களுக்கு இந்த வாரம் ஜாலியா இருக்கும். ஜாலின்னா என்ன... வசூல் விவகாரங்கள் சுமுகமா இருக்கும். துட்டு சேர்ந்தாலே குஷால்தானே? போதாக் குறைக்கு மேலதிகாரிகள், மேல்மட்ட நபர்கள் (மனைவி உள்பட) பாராட்டு கொஞ்சம் ஜாஸ்தியாவே வரும். அதை உபயோகமான முறைல மாத்திக்கங்க. உதாரணமா, 'உங்களை மாதிரி உண்டா சார்'னு உங்க செக்ஷன் ஆபீஸர் புகழ்ந்தா உடனே 'சார் அந்த அரியர்ஸ் இன்னும் வரலையே'ன்னு ரூட்டை மாத்திப் போடுங்க. ஒர்க்-அவுட் ஆயிடும்.

**மிதுனம் :**

கொஞ்ச நாளாவே இந்திய கிரிக்கெட் டீம் மாதிரி தொட்டதெல்லாம் தோல்வியா இருந்திச்சி இல்லை? இன்னமே சரியாயிடும் பாருங்க. குடும்பத்துல இருந்த ஊடலெல்லாம் போயி, சுமுகமா மாறிடும். பணப் பிரச்னை இந்த வாரம் இருக்காது. வீடு கீடு வாங்கறாப்பல யோசனை இருந்திச்சின்னா, கொஞ்சம் ஆளைப் பார்த்து, ஆழம் பார்த்து இறங்குங்க. மத்தபடி இந்த வாரம் கொஞ்சம் நல்லாவே இருக்கும் பாருங்க.

**கடகம் :**

யாருக்கும் கடன் குடுக்காதீங்க. ஜாமீன் கையெழுத்துப் போடாதீங்க. அதிகம் பேசாதீங்க. இந்த மூணு விஷயத்துல கவனமா இருந்து பாருங்க. இந்த வீக் சூப்பரா ஓடிடும். குரு பார்வை நல்லா இருக்குது. நல்ல கௌரவமா, மெதப்பா இருக்கலாம். வில்லனுங்க உங்களைக் கவிழ்க்க ட்ரை பண்ணிட்டே இருந்தாலும் ஒண்ணும் போணி ஆவாது. சுப்ரமணியசாமி ஸ்டேட்மெண்டு மாதிரி புஸ்ஸுனு பூடும். ஸோ, டோண்ட் ஒர்ரி!

**சிம்மம் :**

இந்த நட்டு, போல்ட்டு, லேத்து, ட்ரில்லரு இந்த மாதிரி சமாசாரங்களோட தொடர்புடைய தொழில் செய்யறவங்களுக்கு ரொம்ப அனுகூலமான வாரம் இது. மத்தவங்களுக்கும் பிரமாதமான பிரச்னை ஒண்ணும் இல்லைன்னாலும் ஷேர்ல பணம் போடற வழக்கம் உள்ளவங்க கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும். கவுத்துவுட சான்ஸ் அதிகம். சொந்தக்காரங்க யாராச்சும் ரொம்ப ஆசையா ஹெல்ப் பண்ண வருவாங்க. மறுக்காதீங்க. வீட்டுல நல்ல காரியம் எதாவது நடக்கும். கல்யாணம், குழந்தை பொறக்கறது, மாமியார் ஊருக்குப் போறது, இந்த மாதிரி.

**கன்னி :**

அடடே, என்ன சார் திடீர்னு ஞான மார்க்

கத்துல கவனம் திரும்புது? கோவில், பக்திப் பிரசங்கம்னு பழமா போறீங்க? நல்லதுதான்! ஆனாலும் வீட்டையும் கொஞ்சம் கவனிச்சிக்கங்க சார்! எடுக்கு முடக்கா காரியங்கள் செஞ்சி ஒய்ஃப் கிட்ட வாங்கிக் கட்டிக் கிட்டா நல்லாவா இருக்குது? புதுசா வண்டி வாங்கப் போறீங்க. சம்சாரத்தை ஏத்திகிட்டு ஜாலியா ரவுண்ட் அடிங்க. ஃப்ரிக்ஷனுக்கு ரிலீஸ் போட்டாப்பல ஆயிடும்!

### துலாம் :

ஃபாரின் போக பாஸ்போர்ட்டுக்கு அப்ளை பண்ணியிருந்தீங்களா? நல்லபடியா வந்து சேர்ந்துடும். விறு விறுன்னு மூட்டை கட்ட ஆரம்பிங்க. (பிளான் இருக்கறவங்கதான்!) ஆனா ஒண்ணு. உங்க லக்னத்துல உலவற கிரகத்தோட டென்ஷன், அலைக்கழிப்பு இருக்கும். உணர்ச்சிவசப்படாம, உடம்பைப் பார்த்துக்கங்க. குறிப்பா அரசியல்வாதிகள் எறுக்குமாறா அறிக்கை விட்டு மாட்டிக்காதீங்க. கூடப் பொறந்தவங்களால சின்ன மனக்கஷ்டம் வரலாம். சரியாப் போயிடும்தான். ஆனாலும் வார்த்தை தடிக்காம பார்த்துக்க வேண்டியது உங்க பொறுப்பு.

### விருச்சிகம் :

செலவு, செலவு, செலவு... கையில பைசா தங்காதே? நேரம் அப்படி. போறாதகுறைக்கு வேலைப் பளு, மன உளைச்சல். பழைய டூவீலர் வெச்சிருந்தீங்கன்னா, மரியாதையா ஒரு தபா சர்வீஸ் பண்ணிடுங்க. இல்லாட்டா, நடுராத்திரி, ரோடுல மக்கர் பண்ணி பிராணனை வாங்கிடும். பசங்க கம்மா டி.வி. பார்த்துட்டு இருக்காம ஒழுங்கா படிக்கணும். இந்த வாரம் பிரச்னை அதிகம். பலன் குறைவுதான். வெயிட் பண்ணுங்க. சீக்கிரமே வெளிச்சம் வந்துடும்.

### தனுசு :

'தாந்தோனி'ன்னுவாங்க தெரியுமா? யார் சொல்லியும் கேக்க மாட்டாம, தான் பிடிச்ச முயலுக்கு மூணு கால்னு நிப்பீங்க. கிரக சஞ்சாரம் நல்லா இருக்கறதால தப்பிச்சீங்க. பண வரவு, செயல் வெற்றின்னு கொஞ்சம் தெம்பாவே இருப்பீங்க. ரொம்ப நாளா எதாச்சும் தெய்வ காரியங்கள் தள்ளிட்டே போயிட்டிருந்திச்சின்னா, இப்ப நடந்துடும்.

### மகரம் :

பையன் வேலை கிடைச்சி வெளியூர் போறானே, பிரியணுமேன்னு வருத்தப்பட்டா எப்படி? நல்ல காலம் அவனுக்கு வருதேன்னு சந்தோஷப்படுவீங்களா... தவிர நீங்க ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் விதமா பசங்க நடந்துக்கப் போறாங்க. ஜாலியா இருங்க சாமி! நிறைய பணம் வரப்போவுது. மகான்களை சந்திக்கப் போறீங்க. மனசு நிம்மதிக்கு காயில்லை? இந்த ராசிக்காரப் பையன்களுக்கு ரொம்ப சூப்பரா இருக்குது இந்த வாரம். படிப்பில நல்லா வருவாங்க. ஆல் தி பெஸ்ட்!

### கும்பம் :

சரியா இல்லீங்களே? பொறுமையா நடந்துக்கங்க இந்த வாரம். ஆத்திரப் பட்டு எதுக்கும் கத்தாதீங்க. டென்ஷன் ஆவாதீங்க. டென்ஷன்

## அக்னி சர்மா பக்கம்:

## செப்டம்பர் 3 முதல் 9 வரை :

ஆனா வீட்டுல அமைதி குறையும். உடம்பு நலம் கெடும். தவிர, பணப் பிரச்னை வேற வருது. இந்த வாரம். டிரான்ஸ்ஃபர், வீடு மாறல்னு அலைக்கழிப்பு வேற. புள்ளையாரைப் பிடிச்சிக்கங்க. அவர்தான் காப்பாத்தற ஒரே ஸோர்ஸ்.

### மீனம் :

புதுசா எதனா வாங்கற பிளான் இருந்தா செப்டம்பர் நாலு தேதிக்கு அப்பாலே வெச்சிக்கங்க. ஏன்னா வார ஆரம்பம் சரியா இல்லை. ஆனா பிற்பாடு பலன் சூப்பரா தெரியுது. பதவி உயர்வு ஜாலி ட்ரிப், தெய்வம் விட்டபாடுன்னு நல்லாவே போகுது. வயசானவங்க மட்டும் கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும். கால்ல அடிபடற வாய்ப்பு இருக்குது.













# குறைவ

திருமங்கையாழ்வார், திருச்சந்த விருத்தத்திலே ஏகமாய் கணக்குப் போடுகிறார்.

எட்டும் எட்டும் எட்டுமாய் - ஓர்
ஏழும் ஏழும் ஏழுமாய்
எட்டும் மூன்றும் ஒன்றுமாகி
நின்ற ஆதி தேவனே

'எல்லாமே அவனாக இருக்கிறான். ஆதி தேவன் அவன்! அவன் ஒருவனே 8-8-8 ஆக இருக்கிறான். - இதைத் தெரிந்து கொள்ளுங்கள்' என்கிறார்.

நாமோ, 'இதிலே நாம் என்ன தெரிந்து கொள்வது?' என்று யோசனை பண்ணுகிறோம்.

ஆனால் மகான்களான ஆசார்யர்கள் இந்த வாக்கியத்தில் புகுந்து புகுந்து கடைந்து, மந்த மதிகளுக்கும் நன்கு புரியும்படி காட்டுகிறார்கள். நமது ஆசார்யர்களெல்லாம் விளக்கம் சொல்லாதிருந்திருந்தால் பல மந்திரங்களை நாம் புரிந்து கொண்டிருக்க முடியுமா என்ன...? அவர்களுக்கு நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறோம்!

எட்டும் எட்டும் எட்டுமாய்... என்றால், நமக்கெல்லாம் எட்டும்படியாக இருக்கிறான், சுலபமாகக் கிடைப்பான் என்பது ஒரு பொருள்.

சுவாமி தேசிகன் பரமார்த்த ஸ்துதியில் முதல் சுலோகத்திலேயே இதை எடுத்துச் சொல்கிறார். ரொம்ப அழகான சுலோகம் அது.

திவ்யமான விஜயராகவ பெருமான், திருப்புட்குழியிலே நின்றுகொண்டிருக்கிறான். அவன் ஒரு கற்பக விருக்ஷம். அவனிடத்தில் எது வேண்டுமானாலும் நாம் பெறலாம். ஸ்தாவர பாரிஜாதன் அவன். ஸ்தாவர பாரிஜாதன் என்றால், அசையாமல் ஓரிடத்திலேயே நின்று கொண்டிருப்பவன். வைத்த மாநிதி என்று பெயர். அந்த இடத்தை விட்டுப் போகுமா அது...? அவனுக்கு என்ன எண்ணம் என்றால், 'தான் அந்த இடத்தை விட்டு நகரக்கூடாது. அவன் என்றைக்கு வருகிறானோ வரட்டும்...' என்று எண்ணம்.

'அவன்' என்றால் எவன்...? 'இந்த உலகிலே சஞ்சாரம் பண்ணிக் கொண்டிருக்கிறானே சாதரண மனிதன்... என்றைக்கு அவனுக்குப் புத்தி வந்து நம்மிடம் வந்து சேர்கிறானோ அதுநாள் வரை காத்திருப்போம்' என்றிருக்கிறான் பெருமான். என்றைக்கு அவன் திருப்புட்குழி போகிறானோ அன்றைக்கு பரமாத்மா அவனைக் கடாக்ஷிக்கிறான்.

'இத்தனை நாளாய் வாராதிருந்தாயே...!' என்று கடிந்து கொள்வதில்லை. 'எப்போ வருவான்? எப்போ வருவான்?' என்று நம்மைப் போன்றவர்களுக்காக நின்று



காத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு நம் மேல் அவ்வளவு காருண்யம்!

யாதகிரிகுண்டா என்றொரு க்ஷேத்ரம் - ஹைதராபாத் பக்கத்தில் இருக்கிறது. அங்கே லக்ஷ்மி நரசிம்ஹன் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறான். சற்று சாய்ந்து அவன் நிற்பதைப் பார்த்தால், அந்த வாசல்படியருகே நாம் போகும்போது, நம்மையறியாமல் இரண்டடி வேகமாக எடுத்து வைப்போம். ஏனென்றால், அவன் சாய்ந்து நிற்கும் திருக் கோலம் இருக்கிறதே, அது நம்மை 'வாருங்கள் வாருங்கள்' என்று கூப்பிடுகிற மாதிரி இருக் கிறது!

எதை வேண்டினாலும் உடனே கொடுக் கும்படியான அந்தக் கையினால், நம்மை அப்படியே கட்டி அணைத்துக் கொள்வான் போலிருக்கிறது! அந்த திவ்ய மங்கள ரூபத்தை நாம் அனுபவித்தல் வேண்டும். ஆழ்வார்க ளெல்லாம் அப்படித்தான் அனுபவித்து அனு பவித்து மகிழ்ந்தார்கள்.

அடுத்தபடியாக ஸ்ரீரங்கத்துக்குப் போவோம்... எல்லோரும் அவரவர் வீட்டிலே யுள்ள ரங்கநாதர் படத்தை நன்கு கவனித்துப் பார்க்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன் - அந்த உத்ஸவ மூர்த்தியை - நின்ற திருக் கோலத்தைச் சொல்கிறேன் - அந்தக் கோலத் தில் இருக்கிற ரங்கநாதர் படத்தை நன்றாகப் பாருங்கள்.

ஸ்வாமிதேசிகன் இந்த உத்ஸவ ரங்க நாதனின் அழகை எடுத்துச் சொல்லும்போது, அந்தத் திருக்கரத்தை வர்ணிக்கிறார்.

அபய ஹஸ்தமாக இருக்கின்ற திருக்கரம் தான் அது. ஆனால் நேராக இல்லாமல் கொஞ்சம் திரும்பியிருக்கிறது. ஏன் திரும்பி யிருக்கிறதாம்...?

அவனிடத்தில் சரணாகதி பண்ண வரு கிறவர்களைப் பார்த்து, 'போதும் போதும்' என்று சொல்கிற பாவனையில்தான் அந்தத் திருக்கரம் அப்படித் திரும்பியிருக்கிறதோ!... என்கிறார் ஸ்வாமி தேசிகன்.

சரணாகதி என்பதை ஒரு தடவைதான் பண்ண வேண்டும். பல தடவை பண்ணினால் அது சரணாகதி ஆகாது! அதனால், பக்தனைப் பார்த்து, ஒரு தடவை பண்ணினால் போதும் என்று சொல்கிற மாதிரியிருக்கிறதாம் ரங்க நாதனின் நின்ற திருக்கோலம்.

இலையிலே பிரசாதத்தைப் போடும்போது, நாம் 'போதும் போதும்' என்கிறோமே... அப்போது நம் கை திரும்புகிற மாதிரி, ரங்க நாதன் கரமும் திரும்பியிருக்கிறது!

நம்மாழ்வார் அந்தத் திருவேங்கடமுடை யனிடம் ஈடுபட்டு அவனிடம் சரணாகதி பண்ணினார். அந்தத் திருவேங்கடமுடை யானின் ஹஸ்தத்தைப் பாருங்களேன்... அவன் திருக்கரத்தை அபய முத்திரையாகவும் தான முத்திரையாகவும் வைத்திருக்கிறான். நாம் அவனைப் போய் சேவிக்கும் போது முதல் திருக்கரத்தைப் பார்க்கிறோம். அந்தத் திருக் கரமோ 'என்னைப் பார்க்காதே, இதைப் பாரு' என்று வேறு இடத்தைக் காட்டுகிறது. எந்த இடத்தை அது காட்டுகிறதாம்...? திருவேங்கட முடையானின் திருவடியைக் காட்டுகிறதாம்.

ஆகையினால், 'திருவடியைப் பாரு; என்னைப் பார்க்காதே, என் முகத்தைப் பார்க்காதே..' என்பது அர்த்தம். அவனுடைய கரமே அவன் திருவடியைக் காட்டுகிறது என்றால் நம்மால் அதை விட முடியுமா?

இங்கே இன்னுமொரு விசேஷத்தை மகான் கள் சொல்கிறார்கள்... யாதகிரிகுண்டா பெரு மான் நம்மை அணைத்துக் கொள்ள வருகிற மாதிரி, இந்த திருவேங்கடமுடையானும் நம்மை ஒரு கேள்வி கேட்கிறானாம் - 'கீழே சேவித்து விட்டு வந்தீர்களா...?' என்று கேட்கிறானாம்!

கீழே என்றால் எங்கே...?

திருச்சானூர் போய் விட்டு வந்தீர்களா என்று அர்த்தம்! 'லக்ஷ்மியைப் பார்த்து விட்டீர்களா?'

ஆகவே நாம் முதலில் அவளை சேவித்து விட்டோமானால், அவள் அவனைக் கூப்பிட் டுச் சொல்லி விடுவாள். 'கொஞ்சம் நீங்கள் பார்த்து அனுக்கிரஹம் பண்ணுங்கள்..' என்று.

அவளைப் பார்க்காமல் நாம் தனியாகப் போனோமானால் நம்மை அவன் பார்க்க மாட்டான்!

ஆகையினால் திருவேங்கட யாத்திரை எப்படி பண்ணவேண்டுமென்பதற்கு அவன் திருக்கரமே சாட்சியாக நிற்கிறது! 'முதலில் அவளைப் பாருங்கள்; அப்புறம் என் திருவடி யைப் பாருங்கள்; அப்புறம் திருமுகத்தைப் பாருங்கள்... அப்போதுதான் என் முகத்தில் இருக்கிற அழகு உங்களுக்குத் தெரியும்.... அவளைப் பார்த்து, என் திருவடியைப் பார்த் தால் உங்களைப் பார்த்து நான் சிரிப்பேன்; விசேஷமாக அனுக்கிரஹம் பண்ணுவேன்...' என்கிறான்.

இந்த மாதிரி ஒவ்வொரு திவ்ய க்ஷேத் திரத்திலேயும் ஒவ்வொரு சிறப்பு! அதை மகான்கள் அனுபவித்து அனுபவித்துச் சொல் லும் அழகைச் சொல்லி முடியாது.

அப்பைய தீக்ஷிதர் சொல்கிறார்: காஞ்சி புரத்துக்குப் போங்கள். அங்கே போனால், அந்த கர்பகிரஹத்திலே நுழையும்போதே அஸ்வமேத மஹா யக்ஞம் பண்ணும்போது

ஏற்படுகிற புகையின் வாசனையை நுகர முடிகிறதாம்!

பிரும்மா, அஸ்வமேத மஹா யக்ஞம் பண்ணுகிறார். அந்தச் சமயம் குதிரைக்கு வபாஹோமம் என்பதாக ஒன்று நடக்கும். அப்படி பிரும்மா வபா ஹோமம் பண்ணும் போது ஆவிர்பவித்தவன் தான் அத்திகிரி வரதன். அந்த அக்னி குண்டத்திலிருந்து ஆவிர்பவித்தான்.

அதனால்தான் இன்றைக்கு நாம் போய் சேவித்தாலும் அந்த கர்ப்பகிரஹத்திலே நுழையும்போதே, அஸ்வமேத யக்ஞத்திலே வபா ஹோமம் பண்ணினால் என்ன புகை வாசனை வருமோ, அந்த வாசனை வருகிறது என்கிறார் அப்பைய தீக்ஷிதர்.

'அந்த பகவானுடைய அதர பல்லவத்தில் வபா ஹோம வாசனை வருகிறதே... அது தெரிகிறதா உங்களுக்கெல்லாம்...?' என்று கேட்கிறார்!

இப்படி க்ஷேத்திரம் க்ஷேத்திரமாக அனுபவித்துப் பாடியிருக்கிறதை அனுபவித்து விளக்கம் சொல்ல நமக்கு ஆசார்யர்கள் இருந்திருக்கிறார்கள்....

இப்படியேதான் திருப்புட்குழி விஜயராகவ பெருமாளின் திவ்ய மங்கள ஸ்வரூபத்தையும் அனுபவிக்கிற பாக்கியம் நமக்கு. அந்தப் பெருமான் ஒரு பெரிய கற்பக விருக்ஷம். அவன் அப்படியே ஓர் ஓரமாக இருக்கிறான்.... அவனை நாடிப் போகிறவர்களுக்கெல்லாம் கொடுக்கிறான்.

சாதாரணமாக ஒரு மாமரம் இருக்கிறது. அந்த மரத்திலே காய் பறிக்க வேண்டும்... பழமாகப் பழுத்துத் தொங்குகிறது.

உயரமானவன் ஒருவன் அந்தத் தோட்டத்துக்குப் போனான் என்றால், அவன் கைக்குப் பழங்கள் அப்படியே எட்டுகின்றன... பறித்துக் கொள்கிறான். குள்ளமானவன் போனால் பழங்கள் அவனுக்கு எட்டாது. இது சகஜமாய் நாம் உலகத்தில் பார்க்கிற விஷயம்.

ஆனால் இந்த விஜயராகவன் என்கிற கற்பக விருக்ஷத்திலே மோக்ஷமாகிற பழம் பழுத்துத் தொங்குகிறது. இந்த மோக்ஷமாகிற பழம், உயரமானவன் என்பதாலேயே ஒருவனுக்கு எட்டிவிடும் என்று சொல்ல முடியாது; குள்ளமானவன் என்பதாலேயே ஒருவனுக்கு எட்டாமல் போகும் என்றும் சொல்லிவிட முடியாது! உயரமானவனுக்கு எட்டாமலும் போகலாம்; குள்ளமானவனுக்குக் கிட்டியும் நிற்கலாம்.

அப்போது உயரமானவன் என்றால் யார்...? எல்லாவகையிலும் மேம்பட்டவன் என்றே வைத்துக் கொள்வோம். விஜயராகவனிடம் போய் நிற்கிறார். தலையைக் கொஞ்சம் கூட சாய்க்காமல் நிற்கிறார். கையைத் தொங்கப் போட்டுக் கொண்டு நிற்கிறார்.

பெரியவர்களையும், ஆசார்யர்களையும் தெய்வத்தையும் பார்க்கப் போகும்போது வெறுங் கையோடு போகக் கூடாது என்கிறது சாஸ்திரம். பழம், புஷ்பம் என்று ஏதாவது எடுத்துப் போக வேண்டும் என்பது சாமான்ய அர்த்தம். அஞ்சலி பண்ணும் கையோடு போக வேண்டும் என்பது உள் அர்த்தம்!

ஏதுமின்றி, சாஸ்திர விரோதமாய் விஜயராகவன் முன்னிலையில், வணங்காமல் இவர் நிற்கிறார். மோக்ஷம் சித்திக்குமா...?

ஆனால், மிக சாமான்யனான ஒருவன்... அந்த எம்பெருமான் இருக்கிறான் என்று உணர்ந்து, பணிந்து, வணங்கி நிற்கிறான்... அவனிடத்திலே விசேஷ அனுக்கிரஹம் பண்ணுகிறான் எம்பெருமான்.

ஆகவே உயர்ந்தவனாயிருக்கட்டும் குறைந்தவனாயிருக்கட்டும்... இரண்டு பேரும் வணங்கினால் பலனை அடையலாம். எல்லாம் நமக்குக் கிட்டத்தில் வந்து எட்டும்.

நமக்காகக் காத்து நிற்கும் பகவானிடம் நாம் மட்டும் உணர்ந்து போவோமானால், அந்த கற்பக விருக்ஷத்திலிருந்து மோக்ஷமாகிற பலனை நாம் பெறலாம்.

(தொடரும்)

## அதிசய அரசியல் வாதி!



இந்த முன்னாள் பிரதமருக்கு வங்கிக் கணக்கோ, சொந்தமாக சொத்தோ, சேமிப்போ கிடையாது. இவருடைய வருவாய் தியாகி பென்ஷனும், பாராளுமன்ற உறுப்பினருக்கான பென்ஷனும்தான். அரசாங்கம் இவருடைய வைத்தியச் செலவுக்கு 'பணம் கொடுக்கிறேன்' என்று சொன்ன போது இவருடைய மகன் 'எங்கள் குடும்பம் அவரைப் பார்த்துக் கொள்ளும் அளவுக்கு சம்பாதிக்கிறது' என்று கூறி மறுத்துவிட்டார். இந்த முன்னாள் பிரதமர், தம் மகளின் திருமணத்தின்போது வாசலில் ஒருவரைப் போட்டு, 'பரிசுப் பொருட்கள்' எடுத்து வந்தவர்களை 'மரியாதையுடன்' திருப்பி எடுத்துச் செல்லுமாறு கூறினார். இவர்தான் முன்னாள் பிரதமர் ஜி.எல். நந்தா.

**ஆதாரம்: ஹிந்து**
**தகவல்: புழுதிவாக்கம் சீனு**

## முன்கதை

சிவராமன் தெருக்கடையில் அச்சகம் வைத்திருக்கிறான். ஒரு மாதிரி தனிச்சுற்றிதழ் (தலைசுற்றிதழ் அல்ல) இலக்கியம் என்று திரிகிற சிவராமன். அவனுக்கும், அவனது சகா மெடிக்கல் ஸ்டோர் பத்மநாபன், இன்னும் பலர் கொண்ட இளைஞரணிக்குத் தூக்கத்தை விரட்டியடித்த புண்ணியவதி தாரிணி.

பளபளப்பான எலுமிச்சை நிறம். எடுப்பான நாசி. ஒத்தைநாடி. காதில் டோலாக்கின் கும்மாளம். திருத்திய புருவம் சுருக்கி, இயல்பாகவே சிவந்த ஈர உதடுகளைச் சுழித்து ஆணவமாய், அலட்சியமாய்த்தான் அவள் பேசட்டுமே... அதுவும் ஓர் அழகுதான்.

சூப்பர் சேம்ப்பில் எத்தனை மணிக்கு தாரிணி அலுவலகம் கிளம்புவாள், எந்த வழி போவாள், அவள் அலுவலகம் எங்கிருக்கிறது– போன்ற விவரங்களை இளைஞரணி பரிமாற்றம் செய்து கொண்டது. 'இன்னிக்கு தாரிணி வரலடா... உடம்பு சரியில்லையோ என்னமோ...' என்று அது கவலைப்பட்டது. பிரதம மந்திரி செத்துப் போனாற் போல, அது நாடு தழுவிய துக்கமாய் இருந்தது.

வாகனப் பிராப்தி உள்ள மகானுபாவன்கள் பின் தொடர்ந்து, சிக்னலில் எங்காவது தற்செயலாக அவள் திரும்பி என்னைப் பார்க்க மாட்டாளா, ஜென்ம சாபல்யம் கிடைக்காதா, என்று ஏங்கி பரிதவித்து பரபரப்பாய் ஏமாந்தார்கள். யாரையும் நிமிர்ந்து பார்க்கவில்லை அவள். சட்டை பண்ணவில்லை.

அலுவலகத்திலும் வெளியிலும் நெருப்பு என்று அவள் பெயர் பெற்றிருந்தாள். கட்டும் விழிச்சுடர் அல்ல, சுடும் விழிச்சுடர்.

பிறந்த மூன்றில் இது நடுவள். நடுவள் கடுவன்பூனையாய்ப் போயிற்று. மத்த ரெண்டும் தத்தி. பத்துக் காசுக்குப் பிரயோஜனமில்லை. மூத்தது விஜயா. படிப்பில் அக்கறையே கிடையாது. சரி வீட்டு வேலையாவது பாந்தமாய்ச் செய்யக் கூடாதா... பெத்த வயிற்றில் பிரண்டையைத்தான் கட்டிக்கணும்.

சேகர்... ஆண்பிள்ளை என்று காணாததைக் கண்டாற்போல பெத்தவர்களே அவனைக் குட்டிச்சுவர் பண்ணியாயிற்று. படிப்பில் ஒரு மண்ணுமில்லை, என்றாலும் தினசரி அவன் உடுத்துகிற பந்தா என்ன, நடக்கிற தோரணை என்ன... சேர சோழ பாண்டியரின் உடைவாள் போல எப்போதும் அவனிடம் உடைச்சீப்பு. திடீர் திடீரென்று அதை எடுத்து கலையாத தலையை வாரிக் கொள்கிற ஜோர் என்ன... எந்த வேலைக்கு அனுப்பினாலும் நாலுநாள் தங்கறானில்லை. பெட்டிக்கடை வாசலில் நின்று எப்பப் பார்த்தாலும் ஸ்டைலாய் ஒரு சிகரெட். அப்பா வந்தால் சட்டென்று பின்னால் மறைத்துக் கொள்வான், பெத்ததற்கு மரியாதையாம். பின்னால பத்த வெச்சிக்கிறாதடா நாயே...

இந்தக் கதை விஜயா பற்றியோ, சேகர் பற்றியோ அல்ல.

தாரிணி படிப்பில் கட்டி. காரியப்புலி. ஆண் குழந்தை படிப்பைக் காரணம் காட்டி அப்பா அவள் படிப்பை முடக்கப் பார்த்தபோது, அழுது, முரண்டு பண்ணி சத்தியாக்கிரகப் போராட்டங்கள் பண்ணி, கல்லூரியில் சேர்ந்து, 'டி' வாங்கினாள். செய்தித்தாள் பார்த்து எழுதிப் போட்டு மாதம் ஐயாயிரம் வருகிறாற் போல நல்ல வேலையிலும் அமர்ந்து கொண்டாள்.

அந்த வீட்டின் அதிசயப் பிறவி அவள். யாரோடும் ஒட்டாதவள். வீட்டில் கலகலவென்று பேசிச் சிரித்து அவளை யாரும் பார்த்ததேயில்லை.

அலுவலகத்திலும் அப்படியே இருந்தாள் தாரிணி. நெருப்பு.

இந்தக் கதை தாரிணி பற்றியும் அல்ல.

## இனி கதை

மானேஜரே டூவீலரில் வருகிற போது பாஸ்கரன் காரில் வந்து போகிறான். குளிரூட்டப்பட்ட மணமூட்டப்பட்ட கார்.



எஸ். சங்கரநாராயணன்

சிங்கப்பூரில் அவனுக்குக் கடை இருக்கிறது. சென்னையில் ஓடும் ஒரு கப்பலில் பங்கு. குட்கா ஏஜென்சி எடுத்திருக்கிறான். ஆறு விரல்களில் மோதிரம், சிங்கப்பூர் செய்ன், தூய வெள்ளையில் உடைகள், தங்க பிரேமிட்ட கண்ணாடி.

பாஸ்கரனுக்குப் பெண் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நிறைய வரன்கள் வந்த வண்ணமிருந்தன. தன் கல்யாணம் பற்றி அதுவரை அவனிடம் யோசனை எதுவுமில்லாதிருந்தது. அதுவரை வியாபாரம், பணம் என்றே இருந்தது அவன் மனம். இப்போது இரண்டு வீட்டில் கல்யாணப் பேச்சுக்கள் ஆரம்பித்ததும், சட்டென்று பெண்ணாக அவன் மனதில் வந்தவள் தாரிணி.

யாரோடும் அநாவசியமாய்ப் பேச்சு வைத்துக் கொள்ளாத அவளை அவனுக்குப் பிடித்திருந்தது. மேட்சிங் சென்சுடன் பாங்காய் உடுத்துகிறாள். அத்தனை வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவளல்லதான், என்றாலும் அது தன்னைக் கறைப்படுத்திவிடாத கவனமும், எழுச்சியும், கனவும் அவளிடமிருந்தன. சுத்தமாய் எப்போதும் பளிச்சென்றிருக்கிறாள். அலுவலக வேலையிலும் கச்சிதம். ஒருவேளை அவளைக் கல்யாணம் செய்து கொண்டால் தனது வெளிச்சுற்று வேலைகளுக்கும் தாரிணி சிறந்த நிர்வாகியாய் இருப்பாள், என பாஸ்கரன் நினைத்தான்.

இதெல்லாம் தானறியாமல் தன்னைப் போல உள்ளே ஊறியிருக்கிறது, என நினைக்கவே ஆச்சரியமாய் இருந்தது.

இப்படியான விஷயங்களை யாருடனும் அவன் இது வரை மனம்விட்டுப் பேசியதில்லை. நண்பர்களின் திருமணப் பத்திரிகையைப் பிரிக்கிற போதுகூட அவனுக்குத் தன் கல்யாண நினைவும் இனைக்கவில்லை. சினிமாக்களில் தாலிகட்டிய அடுத்த ஷாட் முதலிரவைக் காட்டுவார்கள். அல்லது வாழ்க்கையில் தாலி கட்டியவுடன், நாதசுரத்தில், கல்யாணப் பெண்ணுக்கு முதலிரவு, வாசிப்பார்கள். அப்போதெல்லாம் அவன் கிளர்ந்தெழுந்ததில்லை... என்றாலும் கூட, தாரிணி அவனது குளத்தில் எப்படியோ கல்லெறிந்தாள்....

வீட்டில் தாரிணி பற்றிச் சொல்லுமுன், அவளிடம் ஒரு வார்த்தை கேட்டுவிடலாம் என்றிருந்தது. அவனைப் பற்றி பெரியவர்கள் அறிவார்கள். அவனது முடிவு சரியாகத்தான் இருக்கும், என்ற நம்பிக்கை உள்ளவர்கள்தான்.

ஆனால் அவளிடம் இதைப் பற்றி எப்படிப் பேச்செடுப்பது என்பதுதான் புரிபடவில்லை. தன் - கல்யாணம் பற்றி அவளுள் என்னென்ன யோசனைகள் இருக்கும் என்று யூகிக்க அவனால் முடியவில்லை. அவளுள்ளே புதைந்து கிடந்தன அநேக ரகசியங்கள். அதுவே அவளிடம் அவனுக்கு சுவாரஸ்யமாய் இருந்தது. அவற்றை அவள் தன்னோடு மாத்திரம் பகிர்ந்து கொள்ளவும், பரிமாறிக் கொள்ளவும், அவளைத்தான் நெகிழ்த்தவும் அவன் ஆவலுற்றான். பெண்ணாய், தான் அவளை அணுக, அவள் அனுமதி வேண்டி நின்றான். அவள் முன் அவன் தன் பெண்மையை நிறுவிக் கொள்ள விரும்பினான். அதற்கான சந்தர்ப்பத்துக்காகப் பொறுமையாய்க் காத்திருந்தான். காத்திருத்தல் வாழ்வின் சுவையைக் கூட்டுகிறது.. இந்தக் கதையின் நாயகன் பாஸ்கரன் அல்ல.

**மா**சக்கடைசி என்றால் கேவலம் பஸ்சுக்குக் கூட சில்லறை இல்லாமல் போகிறது. பத்து தேதிக்குள் கஜானா காலி. என்ன வாழ்க்கை, என்று அப்பாவுக்கு சலிப்பாய் இருந்தது. வெயில் படுபோடு போடுகிறது. பாடாவதிக் கடையொன்றில் கடனுக்கு வாங்கிய பல சரக்குகளுடன், தோளிழுக்கும் பாரமும் வயோதிகத்தின் மூச்சிரைப்புமாய் அப்பா நடந்து வந்தார். கதையின் கதாநாயகன்.

முன்வழுக்கையில் மலையருவியாய் வியர்வை. தோள்த்துண்டால் துடைத்தபடி கர்ர்ரென்று ஓரம் பார்த்து மூக்குச் சிந்தினார். வரவர நாய் ஒண்ணுக்கடிக்க இடம் தேடுவது மாதிரி நான் மூக்குச் சிந்த வசம் பார்க்கிறேன், சே!

மெடிக்கல் ஸ்டோரிலிருந்து பத்மநாபன் எட்டிப் பார்த்தான். பயமாய் இருந்தது. அவரிடம் மருந்துக்குப் பணம் பாக்கி தர வேண்டியிருந்தது. ஏதோ ஞாபகத்தில் இந்தவழி வந்து விட்டார். யாரிடமாவது கடன் வாங்க வாங்க, அவர் வீடுதிரும்பும் வழி மாறிக் கொண்டே இருக்கும்.

"அடேடே" என்றான் பத்மநாபன். 'உள்ள வாங்க சார்' என்று கடையின் சிறுகதவைத் திறந்து உள்ளே கூப்பிட்டான். அவருக்குத்



''சுதந்தர தினத்தன்று ஒளிபரப்பான நிகழ்ச்சி பற்றி டீ.வி. எதிரொலிக்கு என்ன கடிதம் எழுதி பரிசு வாங்கினாய்?''

''ரம்பாவும் நக்மாவும் தங்கள் சுதந்தர போராட்ட கால அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டதைப் பற்றி பாராட்டி எழுதித்தான்!''

– நாஞ்சில் சு. நாகராஜன்



தடங்கிடுது. பின், வெயில் தானாததில் உள்ளே போனார். அழுக்கு வேட்டியும் சட்டையுமாய் அப்போது அவரை அவருக்கே பிடிக்க வில்லை.

தன்மையான பையன். சேகரை இவனிடம் இழுத்து விட்டுவிட நினைத்திருந்தார். ரெண்டு நாள் போனான். ஏனோ நின்றுவிட்டான். படிச்ச படிப்புக்கு, காப்பி வாங்கி வரமட்டேன், வீட்டுவேலைக்கெல்லாம் போக மாட்டேன்னு கௌரவம் பார்த்தா எப்படி? கௌரவம் கூட அல்ல, உடல்வளைச்சி வேலை செய்ய வலிக்கிறது. அதுக்கு ஏதாவது காரணம்.

கோகோகோலா உடைத்து நீட்டினான் பத்மநாபன். 'இதெல்லாம் எதுக்குப்பா' என்றவர், 'கூலா இருக்கா...' என்று கேட்டபடி கட கடவென்று குடித்தார். மனசுக்குள் பாக்கி கேட்டுவிடுவானோ என்று படபடப்பாய் இருந்தது. நல்லவேளை.

தெருவில் இறங்கி நடந்தார். அந்த அச்சகத்துப் பையன், அவன் பேரென்ன, சிவராமன். இவரைப் பார்த்ததும் பிரியமாய் வண்டியில் ஏற்றிக் கொண்டு வீடுவரை கொண்டு விடுவான். இந்தக் காலப் பிள்ளைகள் பரவாயில்லை. பெரியவர்களிடம் மட்டுமரியாதை இருக்கிறது, என் பிள்ளையிடம் தவிர.

அருகில் கார் ஒன்று வந்து நின்றது. சாவு கிராக்கி, என்ற ரீதியாய் உள்ளேயிருந்து வசை வருமோ, என்று பதறி தள்ளிப் போய்த் திரும்பிப் பார்த்தார். வெளேர் உடையும் பளிச்சென்ற சிரிப்புமாய், பிரேஸ்லெட் வாச் இணைந்து இரு கை அவரைப் பார்த்துக் கூப்பியது. "வணக்கம் சார்."

"சார்வாள் யார்ன்னு... தெரியலியே..."

"எம்பேர் பாஸ்கரன். உங்க பொண்ணு தாரிணிகூட வேலை பார்க்கிறேன்."

''அடேடே'' என்று காரில் அவன் சொல்லாமலே உள்ளே உட்கார்ந்து கொண்டார். "நம்மள வீட்ல விட்ருங்க" என்று புன்னகைத்தவர், "உங்களப் பத்தி தாரிணி சொல்லிருக்கா" என்றார்.

அவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. தாரிணி தன் பேரை வீட்டில் குறிப்பிட்டிருக்கிறாள் என்ற நினைவே இகட்டியது. நல்ல சகுனமாய் உணர்ந்தான். மகிழ்ச்சியாய் இருந்தது. யப்பா, இந்தப் பெண்கள்தான் எத்தனை சூட்சுமமாய் இயங்குகிறார்கள்.

நல்லவேளை இவரைப் பார்த்ததும் சட்டென்று அடையாளந் தெரிந்து கொண்டு காரை நிறுத்தினேன், என நினைத்துக் கொண்டான். ஓரிருமுறை தாரிணியைத் தேடி அவர் வந்திருக்கிறார். அவரை வந்த ஜோரில் வெளியேற்றுவதில் மும்முரமாய் இருப்பான் அவன்.

"எங்க நீங்க இந்தப் பக்கமா..." என்றார் அப்பா.

''குட்கா... சரக்கெல்லாம் வந்திருக்கு. குடோன் போறேன். சரி பாக்கணும். அப்படியே நேத்து வசூல் லாம் பாத்து பேங்க்ல கட்டணும். ஞாயித்துக் கிழமைன்னாலும் என் ரொடீன் இருக்கு. அதும் பேங்க் பத்தரை வரை தான்."

"ஆமாமா'' என்றார் அப்பா. "ஊர்ல இப்ப இந்த மாணிக் சந்த், குட்காவ்லாம் படுபோடு போடுது— எல்லா இளைஞர்கள் கையிலயும் இது தான்..."

தாரிணி என்னைப் பத்தி என்ன சொன்னா, என்று கேட்கத் துடிப்பாய் இருந்தது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள சிரமப்பட்டான். அவனை அவர் கவனித்தார். பிறகு தன் காரே போல வசதியாய்ச் சாய்ந்து கொண்டார். காரின் இதமான மணமும் குளுமையும், எங்கிருந்தோபோலக் கேட்ட, மேற்கத்திய இசையில், கிருஷ்ணா நீ பேகனே பாரோ... பாடலும் பிடித்திருந்தன. விட்டால் அங்கேயே படுத்துத் தூங்கி விடுவார் போலிருந்தது.

''சாருக்கு எத்தனை குழந்தைங்க?"

"எனக்கா?' என்று சிரித்தான் அவன். "எனக்கு இன்னும் கல்யாணமே ஆவல" என்று சொல்லும்போது கிளர்ச்சியடைந்தான். அவர் அவனையே பார்த்தார்.

''அந்த இன்சூரன்ஸ்– ஏஜெண்ட் ஏன் தலை தெறிக்க ஓடறார்...?''



''உங்ககிட்டே டேக்–இட்–ஈஸி– பாலிசி திட்டம் இருக்கிறதா'ன்னு கேட்டேன் அவ்வளவுதான்...!''

– பெ. கலாசாமி

"எனக்கு மூணு." என்றார் அவர். அவன் தலையாட்டினான். "நடுப்பெண் தாரிணி. அவளை உங்களுக்குத் தெரியும். பி.காம். 'டி' வாங்கி பாஸ் பண்ணினவ." அவளைப் பற்றிப் பேசுகையில் அவன் ஆர்வப்பட்டதை கவனித்தார். "அவதான் பி.காம்... பட் ஷீஸ் நெவர் காம்...." என்று சொல்லிவிட்டு உரக்கச் சிரித்தார்.

"பெரியவ இருக்காளே, விஜயா. அவ எம்.காம்" என்று அவனைப் பார்த்தார். அவன் தலையாட்டினான். "கோல்டு மெடலிஸ்ட்." அதற்கும் 'ஆஹாங்' என சத்தம் கொடுத்து அங்கீகரித்தான். "ஆனா பாத்தா தெரியாது. அத்தனை அடக்கம். சிம்ப்பிள்."

"டிரைவருக்கு வழி சொல்லுங்க" என்றான் பாஸ்கரன்.

"இடதுபக்கம் ஓடிப்பா." என்றவர் "மூணும் மூணு ஜெம்ஸ் எனக்கு" என்றார். "வீட்ல தாரிணி வெச்சது தான் சட்டம்..."

அவன் புன்னகைத்தபடி ஒரு குட்கா பொட்டலத்தை உடைத்து வாயில் போட்டுக் கொண்டான். "அருமையான பொண்ணு... சம்பளம் வாங்கி அப்பிடியே வீட்ல குடுத்துருவா" என்றவர் நிறுத்தி, "வீட்டு நிர்வாகம்லாம் மூத்தவதான்" என்றபடி கால்மேல் கால் போட்டுக் கொண்டார்.

அவன் பக்கத்தில் ஓர் ஆங்கில நாவல் கிடந்தது. ஜெஃப்ரி ஆர்ச்சர். "அருமையான ரைட்டராச்சே" என்றார் அவர். அவன் ஆச்சரியமாய்த் திரும்பிப் பார்த்தான். "என் பையன் சொல்லுவான்..." என்று புன்னகை செய்தார்.

அவன் தலையாட்டினான். "அவர் என்ன பண்றார் இப்ப?"

"ச்" என்றார் அவர். "அருமையான பையன்... ஆனா என்ன, அடிக்கடி உடம்புக்கு வந்துருது. சின்ன மழை தண்ணிக்கும் அவனுக்குப் படுத்திருது. பரீட்சை எழுதறப்பல்லாம்... ஐம் சாரி, உங்களை நான் சங்கடப்படுத்தறேனா?... எங்க பிரச்னை எங்களோட" என்றார்.

"அதெல்லாம் ஒண்ணுமில்ல..."

"அதான்... நான் சொல்லிட்டேன். பரவால்லடா, சுவரை வெச்சித்தான் சித்திரம் எழுதணும். வெறும் மார்க்கை வெச்சி ஒருத்தனை எடைபோடறது தப்பு, நீ உன்னால எவ்வளவு முடியுதோ, ஒவ்வொரு பேப்பராக்கூட எழுதிப் பாஸ் பண்ணு, போதும்னிட்டேன்."

"ம்" என்றான் பாஸ்கரன். "அவன்ட்ட கேட்டு, கேன் அண்ட் ஏபல், கிடைச்சா வாங்கிட்டு வாங்க."

"என்னது?"

"ஜெஃப்ரி ஆர்ச்சரோட நாவல். படிக்கணும். கிடைக்கல."

"அவன் படிச்சிருப்பான்" என்றார் அவர். "கேட்டு வாங்கித் தர்றேன்."

பெரியவர் பரவாயில்லை, என்று நினைத்துக் கொண்டான் அவன். பெரியவளை எம்.காம் வரை படிக்க வைத்திருக்கிறார். கோல்டு மெடலிஸ்ட். அடுத்தவள் தாரிணியை அவனுக்கே தெரியும். ஒரு பானை சோத்துக்கு ஒரு சோறு பதம், என்பது சரிதான். அடுத்தவனும் ஆங்கிலத்தில் வாசிப்பு ருசியுள்ளவன்.

"சின்னவனை நினைச்சாதான் எனக்கு ஒரு இது. பாவம் உடம்பு..."

"அதுனாலென்னங்க.." என்றான் பாஸ்கரன். "இப்ப அவர் என்ன பண்றாப்ல?"

"எங்க அவனுக்கேத்தா மாதிரி வேலை கிடைக்கும்னு பாத்திட்டிருக்கேன்..." என்றார் அவர். "உடம்பு படுத்தி திடீர் திடீர்னு லீவு போட்டா எங்க தாக்குப்பிடிக்க முடியும் சொல்லுங்க? அத்தோட சம்பளம்னு ஒரு மூவாயிரமாவது வந்தாத்தான் வேலைன்னு ஒரு கௌரவம். இல்லியானா வேலைக்கே போவேணாம்னிட் டேன். என்ன சொல்றீங்க?"

"அதுசரி" என்றான் அவன்.

"தாரிணியைக் கூட எனக்கு வேலைக்

"காசிக்குப் போய் பொய் சொல்றதை விட்டுட்டு வந்தேன்னு என் மாமியார் எல்லார்கிட்டேயும் பொய் சொல்லிட்டு இருக்காங்க!"



"அப்ப, பொய்யை விடலியா!"

"காசிக்கே போகல!"

— பர்வத வர்த்தினி

னுப்ப இஷ்டமே கிடையாது. 'பெண் குழந்தைங்க வேலைக்குப் போயி அதுங்க நம்மளைக் காப்பாத்தறதா'ன்னு ஒரு இதுதான். பெரியவ விஜயாவை அதான் நான் வேலைக்கு அனுப்பல..."

அவன் தலையாட்டினான்.

"தாரிணிதான், இது நல்ல வேலைப்பா.. நான் வீட்ல சும்மாதானே இருக்கேன். கல்யாணம் ஆறவரை வேலைக்குப் போயிட்டிருக் கேன்னா..." கல்யாணம் என்ற வார்த்தையை அழுத்தமாய்ச் சொன்னார். "கல்யாணம்னு ஆயிருச்சின்னா, அப்புறம் அவ வேலைக்குப் போறதும், போகாததும் அவபாடு, அவளைக் கட்டிக்கப் போறவன் பாடு. என்ன சொல்றீங்க?" என்று அவன் முகத்துக்கு நேரே பார்த்தார்.

அவன் வெட்கத்துடன் தலையாட்டினான். திடீரென்று அவரைப் பார்க்க அவனுக்குக் கூச்சமாய் இருந்தது. "ஆனா இவளைவிடப் பெரியவ, அது தங்கம்னாத் தங்கம். படிப்புக்குப் படிப்பு, அடக்கத்துக்கு அடக்கம். ஒரு ஆம்பளையத் தலை நிமிர்ந்து பார்ப்பாளா? ரெண்டு பேரையுமே நான் அப்படி வளக்கலை. ரைட்ல போப்பா..." என்றார் காரோட்டியிடம்.

வீடுவரை அவனைக் கூட்டிப் போக யோசனையாய் இருந்தது. வீட்டில் நிலைமை எப்படியிருக்குமோ தெரிய வில்லை. அவரது தெருவுக்குள் நுழைய முடியாதபடி தெரு வெங்கும் மாடுகள் படுத்திருக்கும். வீட்டைத் திறந்து போட் டுக் கொண்டு பாதிநாள் விஜயாவே படுத்திருப்பாள். தவி ரவும் இன்றைக்கு இது போதும், என்று திடீரென்று தோன்றியது. முதல் அம்பிலேயே வீழ்த்திவிடும் பேராசை அவருக்குக் கிடையாது.

"நான் இங்கயே இறங்கிக்கறேன் தம்பி, வண்டிய அப்டி ஓரமா நிறுத்துப்பா" என்றார் அவர்.

"ஏன்..." என்று திரும்பிப் பார்த்தான் பாஸ்கரன். அவர் வீட்டுக்குப் போய் இறங்கி திடீரென்று தாரிணியைச் சந்திக்கவும், அவளோடு ரெண்டு வார்த்தை பேசவும் நினைத்திருந்தான். ஏமாற்றமாய் இருந்தது. "சாவகாசமா ஒருநா வீட்டுக்கு வா தம்பி" என்று இறங்கிக் கொண்டார். அவரை மீறி அவர் வீடுவரை அவனால் எப்படிச் செல்ல முடியும்?

"கேன் அண்ட் ஏபல் - மறந்துறாதீங்க..."

"கிடைக்கும் கிடைக்கும், தாரிணிட்ட குடுத்து விடறேன்."

கதவுக்கு வெளியே எட்டி அவன் சொன்னான். "ஏன், உங்க பையன்ட்டியே குடுத்து விடுங்களேன்? இதோ என் அட்ரஸ்..." என்று விசிட்டிங் கார்டைக் கொடுத்தான். "உங்க ளுக்கு ஆட்சேபம் இல்லன்னா, அவன் என்ட்ட... சூபர் வைசரா வேலை செய்யட்டுமே..."

"ச், உடம்புதான்..."

"அது பாத்துக்கலாம்" என்று புன்னகைத்தான் பாஸ்கரன். "நான் வரேன், பாத்துப் போங்க."

கார் போவதையே பார்த்துக் கொண்டிருந்தார் அப்பா.

### பின்கதை

நம்ப முடியாத விஷயம் ஒன்று நடந்தது. அடுத்த ஒரு மாதத்தில் பாஸ்கரனுக்கும் விஜயாவுக்கும் திருமணம் நிச்சயமானது. கல்யாணப் பத்திரிகையை சிவராமன் இலவசமாய் ஒரு வேளை அச்சடித்துத் தரக்கூடும்.

## சென்டிமென்ட் புரோகிதர்!

டைரக்டர் பி.வாசுவுக்குப் பக்கத்திலுள்ளவரை அடையாளம் தெரிகிறதா? சினிமாவில் வரும் கல்யாணங்களை நடத்தி வைக்கிற புரோகிதர் இவர்தான். பெயர் ராமகிருஷ்ணன். வடபழனி கோயிலில் அர்ச்சகராக இருந்தவர், ஆசையால் சினிமாவுக்கு வந்து விட்டார். 'இவரை வைத்து பூஜை போட்டால் படம் வெற்றி பெறும்' என்கிற சென்டிமென்டும் உண்டு.



அப்படியானால் நிறைய வருமானம் கிடைக்க வேண்டுமே!

"அதெல்லாம் ஒன்றுமில்லை. லட்சக்கணக்கில் செலவு செய்து பூஜை போட்டாலும் எனக்குக் கொடுக்க யோசிப்பார்கள். அழுத்திக் கேட்டால் அடுத்த பட சான்ஸ் போய்விடும் என்பதால் கறாராகக் கேட்கவும் முடிவதில்லை!" என்கிறார் இவர்.

— கீதா மோஹன்

# ரசிகர்களுக்குள் சிண்டு முடியும் சீசனா?

✉ இவ்வாரத் தலையங்கம் மிகவும் அருமை. கையாலாகாத்தன மாக ஆட்சி நடத்தும் குஜ்ரால் அரசால் ஏற்படும் பாதகங்களை அழகாக விளக்கிவிட்டீர்கள். தேர்தல் வருவதன் அவசியத்தையும், காங்கிரஸின் சூழ்ச்சிக் கணக்கை முறியடிப்பதன் முக்கியத்துவத்தையும் அனைவரும் உணர வேண்டும். அப்போதுதான் இந்தியப் பொருளாதாரம் பாதிக்கப்படாமல் காப்பாற்றப்படும். இதை ஜனாதிபதியும், ஐமுயும் உணர்ந்து செயல்பட வேண்டும்.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'சிங்காரச் சென்னை' எனும் சொற்றொடரில் மிளிரும் அழகும், நேர்த்தியும், சென்னை நகரில் பெரும்பாலான இடங்களில் இல்லை என்பது மட்டுமின்றி, சேரிக் காட்சிகளும் ஆங்காங்கே உள்ளன என்பதை முதல் கார்ட்டூன் 'பளிச்' செனக் காட்டியது.
கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

✉ ஆகஸ்ட்-15, 1947 சுதந்தர தினத்தன்று பிறந்தவர்களுக்கு வெள்ளிப்பதக்கம் கொடுத்து வாழ்த்திய கல்கியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.
நாகூர், நிலா காதலன்.

✉ வெள்ளிப் பதக்கம் வென்றவர்களில் சிலர் சுதந்தர தினத்தின் நினைவாக (சுதந்திரா ராமச்சந்தின், ஸ்வதந்திர குமார், ஸ்வதந்தரலட்சுமி, சுதந்திரா தேவி...) தங்களின் பெயரை வைத்திருப்பது மன நெகிழ்வை உண்டாக்கியது.
நெய்வேலி - 3,ப. உத்தண்டராமன்.

✉ ஆழ்வார்கள் அனைவருமே மானிடராய் வாழ்ந்து, ஆண்டவனிடம் அதீத பக்தி கொண்டு தொழுது ஆழ்வாரானவர்களே! அந்த வகையில் மகாகவிக்கும் இந்த மகத்தான மரியாதை பொருந்தும்!"
பொன்மலை, ஆர். பிரகாஷ்

✉ உடும்பு சிறுகதை படித்தேன். ஆஹா, இந்த மாதிரி ஒரு கனமான கதையை ஜிலுஜிலுப்பான நடையில் படித்து எத்தனை நாட்கள் ஆகிவிட்டன. சிலிர்க்க வைத்த எழுத்து!
ஸ்ரீரங்கம், ஆர். ஸ்ரீநிவாசன்.

✉ சினிமா ஸ்டிரைக், அது இது என்று ஆயிரம் பிரச்னைகளை மீறிவந்த 'காதல் பள்ளி'க்கு விமர்சனம் சரிதான். ஆனால் அந்தக் கடைசி பத்தி...! ரொம்ப 'லொள்ளு' தான் போங்க!
காவேரிப்பட்டணம், கே. சோமசேகர்.

✉ இந்திய கிரிக்கெட் அணிக்கு இப்போதைய தேவை சிறந்த பௌலர்கள்தான். அது இல்லாத போது எத்தனை போலோ மெஷின் வந்தாலும் இந்தியா வெற்றி பெறுவது கடினம்!
லால்குடி, எம். ராஜேந்திரன்.

✉ கல்கி, 'நாளிதழாய்' மாறப் போகிறதா, என்ன? ஒவ்வொரு பகுதிக்கும் தடாலடியான தலைப்பைப் பார்த்தபொழுது, அப்படித்தான் தோன்றியது!
திருப்பூர், ப. சங்கர்.

✉ பிரபலங்களுக்குள் சிண்டு முடிவது போய் பிரபலங்களின் ரசிகர்களுக்குள் சிண்டு முடியும் சீசன் வந்து விட்டதா! வைரமுத்து, பழனிபாரதி ரசிகர்களின் காரசாரமான விவாதம் படு சுவாரஸ்யம்.
விருத்தாசலம்-1, இராம. ரமேஷ்பாபு.

✉ மழை வெப்பமும், மன ஈரமும் என்ற தமிழன்பன் கவிதை மனதினில் நீங்கா இடம் பிடித்து விட்டது!
பு.புளியம்பட்டி, அ. கிருஷ்ணகுமார்.

✉ "வார்த்தைச்சித்தர் வலம்புரிஜானின் 'வெளிச்சத்தின் விலாசம்' கல்கி வாசகர்களின் நெஞ்சங்களில் நீக்கமற நிறைந்து நின்றிடும்!
பெங்களூர் - 21, ப. மூர்த்தி.

✉ வலம்புரி ஜான் அவர்களின் 'வெளிச்சத்தின் விலாசம்' 20 வாரங்கள் போனதே தெரியவில்லை! தெளிந்த நீரோடை போன்ற அவரது நடை, படிக்கப் படிக்க உள்ளத்தில் அன்பும், அமைதியும் பெருகுகிறது!
சேலம் - 3, ப. முரளி தேன்மொழி.

# தீபாவளிப் பரிசு

## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும்

## மகத்தான முதலீட்டுத் திட்டம்!





**ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள்**
**5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு)**
**பெற்றுக் கொள்ளுங்கள்**

அத்துடன்

4 இலக்கியப் பொக்கிஷங்களை
அன்பளிப்பாகப் பெறுங்கள்

1. **'கல்கி'** வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி
2. **'கல்கி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக்
3. பொன்விழாக் காணும் **'அமுதசுரபி'** இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி
4. **'அமுதசுரபி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக்

ரூ. 10,000 (ரூ பத்தாயிரம்) **'ஸ்ரீராம் டிரஸ்ட்'** பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய

**'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,**
**சென்னை – 600 102. தொலைபேசி எண் : 628 6869 628 7879**

---

1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி ..............................

   முகவரி : ..............................

   ..............................

   ..............................

2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :

   முழுப்பெயர் : ..............................

3. வாரிசுதாரர் : ..............................

4. **'கல்கி' 'அமுதசுரபி'** இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி : ..............................

   ..............................

CHEQUE / D.D. No. .............................. DT .............................. ON ..............................

அன்புள்ள

இடம் ..............................

தேதி .............................. முதலீட்டாளர் கையொப்பம்

## 10

**கா**லை ஆறு மணிக்கே குளித்து நர்மதா உடை மாற்றினாள். தலை வாரிச் சின்னதாகப் பின்னி ரப்பர் பாண்ட் மாட்டினாள்.

முகத்துக்கு லேசாகப் பவுடர் போட்டு நெற்றியில் ஒரு ஸ்டிக்கர் பொட்டை ஒட்டும் போது வெளியே ஒரு ஜீப் வந்து நிற்கும் ஓசை கேட்டது.

அனந்தாச்சாரி காலை வாக்கிங்குப் போயி ருந்தார். கிருஷ்ணமாச்சாரி கோவிலுக்குப் போய் விட்டார்.

மஹாலக்ஷ்மியும் வீட்டில் இல்லை. கோடி வீட்டுப் பெண் விடிகாலையில் வயசுக்கு வந்து விட்டுப் பயந்து போய் ஓவென்று அழுது கொண்டிருக்கிறதாம்.

அவளைச் சமாதானப்படுத்திக் கோடி வீட்டு மாமிக்கு ஆக வேண்டியதைச் செய்ய ஆலோசனை வழங்கப் போயிருந்தாள்.

இந்த நேரத்தில் வருவது யார்?

வெளியே வந்தாள்.

பத்ரிநாராயணன்

# கன்னியராகி நிலவினில் ஆடி...



ஜீப்பை விட்டுத் தலை குனிந்தவாறே இறங்கிப் படியேறினான்.

நிமிரும்போதுதான் நர்மதாவைக் கவனித்தான்.

"குட்மார்னிங்..."

அவன் புன்முறுவலை ஏற்றுத் திருப்பித் தர அவளால் இயலவில்லை.

"ஸாரி... ஐ கெனாட் ரிப்ளை."

பத்ரிக்குப் புரியவில்லை.

"என்ன சொல்றீங்க!"

"இன்னிக்கு ஒங்களுக்கு குட்மார்னிங்கா இருக்கப் போறதில்லே..."

தர்ணா? அவன் புரிந்து கொண்டான். சிரித்தான்.

"லெட் இட் பி. ஆக உறுதிப்படுத்திட்டேன்?"

"கேள்விப்பட்டேளா?"

"நிச்சயம் பண்ணிக்கத்தான் வந்தேன். நேத்திக்கும்."

அவன் வருத்தமாகப் புன்னகை செய்தான். பின் சொன்னான்.

"தாத்தா வாக்கிங் போயிருக்கார்."

"இன்னிக்கு 'வீட்' பண்ணப் போறது பேத்தியோன்னா!"

"கரெக்ட்."

அவன் நிதானித்தான்.

"நன்னா யோசிக்க தீர்மானிச்சேளா?"

என்ன விநோதமான கேள்வி என்பது போல் அவன் புருவம் உயர்த்தினான். அவன் தொடர்ந்தான்.

"வெறும்ன ஒரு தர்ணாவாலே கவர்ன்மெண்ட் ப்ராஜக்ட் ஒன்னு நின்னுடாது. ப்ளீஸ் நான் மெரட்டறதா நெனச்சுடாதேங்கோ."

அவன் குரலிலோ, முகத்திலோ அச்சுறுத்தல் இல்லை. நினைத்ததைச் சாதிப்பேன் என்ற பிரகடனம் இல்லை.

இவன் எதற்கு வந்திருக்கிறான்?



இவன் எதிரியா?

இல்லை எதிர் முகாம். உத்தியோக நிர்ப்பந்தம். அன்று சாலையில் நான் சுட்டிக்காட்டிய இயற்கையில் என்னென்ன நஷ்டப்படும் என்று சொன்னபோது, இவன் அலட்சியப்படுத்தவில்லை. அது இவன் மனத்தில் பதிந்தது.

இவன் சிந்திப்பவன்.

சிந்திக்கிற எவன்தான் மண்ணும், காற்றும், நீரும் வாழ்க்கையும் மாசுபட்டுச் சீரழிவதை ஏற்றுக் கொள்வான்?

"நின்னுண்டே பேசறேன்... ப்ளீஸ் கம் இன்."

"பரவால்லே... கன்ஸ்ட்ரக்ஷன் போது சைட்ல நின்னு நின்னு பழகிடுத்து."

அவன் முறுவலித்தான்.

"வில் யூ ப்ளீஸ் ரீ கன்ஸிடர்?"

அவனது வேண்டுகோளில் ஓர் இங்கிதமான நயம் தொனித்தது.

நர்மதா அவனை ஆழ்ந்து கவனித்தாள்.

இருவர் விழிகளும் சந்தித்தன.

அந்த முக்கியமான நொடியில் ஒரு நுட்பமான மாற்றம் நேர்ந்தது. கடற்கரையில் அலையின் நுரைக்குமிழ் சில்லென்று ஒரு குளுமையை உடலெங்கும் பரிமாறிய விளைவு. ஒரு காமிராவின் ஷட்டர் திறந்து நுணுக்கமான ஒரு ஜீவ ஒளியை உள்வாங்கிய பதிவு.

பத்ரியும் அப்படித்தான் உணர்ந்தான். அவன் முகத்திலும் அந்த மருட்சி!

'என்னது இது... நான் என்னவாய்க் கொண்டிருக்கிறேன்? அதுவும் எந்த நேரத்தில்?'

அந்தத் தருணத்தின் வசீகரமான பிடியிலிருந்து நர்மதா விடுபட முயன்றாள்.

"காலையிலே எழுந்ததும் சத்தம் போட்டு பேப்பர் படிக்காதீங்கன்னு சொன்னா கேக்கறீங்களா?"



"ஏன் என்னாச்சு?"

"எல்லோரும் நம்ம வீட்டு வாசல்ல நின்னு ஓசில நியூஸ் கேக்கறாங்க பாருங்க!"

- சக்தி. சரவணன்

அவனும் அதே முயற்சியைத்தான் செய்தான். அவன் இமைகள் படபடத்தன.

சிறிது நேரம் இருவரும் பேசவில்லை.

தன்னைச் சமாளித்துக் கொண்டு அவன் வாய் திறந்தான்.

"ஸோ... நோ ஹோப்?"

அவன் குரல் கரகரத்தது. செருமினான். எனினும் சில நொடிகளுக்கு முன்பிருந்த நான் இல்லை. இது வேறு பத்ரி.

அவள் பார்வை தாழ்ந்திருந்தது. உயர்ந்தது. அவன் கண்களைத் தவிர்த்தவாறே அவள் பேசினாள்.

"நீங்க கேட்டதையே நானும் ரிபீட் பண்ணலாமோ?" என்றாள்.

"என்னது?"

"நீங்க ரீ கன்ஸிடர் பண்ண மாட்டேளா?"

"யூ மீன்?"

"தொழிற்சாலை கட்டறதைத்தான் சொல்றேன்."

"அது என் கையிலயா இருக்கு?"

"ஒய் நாட்?"

"நீங்க ஓவரா என்னை மதிக்கறேள்! ஆஃப்டர் ஆல், நான் ஒரு எம்ப்ளாயி. வெறும் கருவி."

பளிச்சென்று அவள் பார்வை அவன் மீது பாய்ந்தது.

"தர்ம விரோதமான, ஆத்ம விரோதமான காரியத்துக்கு நீங்க ஏன் எம்ப்ளாயியா இருக்கேள்? அப்படி என்ன கட்டாயம்?"

அந்தக் கேள்வியின் நேர்மைக்கு முன் அவன் கை சோர்ந்து, அவனது மொத்த வாழ்வும் எடுக்கப்பட்ட பிரமிப்புடன் நின்றான்.

நர்மதாவுக்கு மீனாட்சி வீட்டின் எதிரில் இருந்த உலைக்கூடம் நினைவு வந்தது.

கனல்கின்ற இரும்புத் துண்டின் மீது விழும் சம்மட்டி அடிகள் ஞாபகம் வந்தன. ஒன்றின் உருவாக்கத்திற்கு அவ்வளவு வன்முறை அவசியமா? என்னென்ன வளர்ச்சியெல்லாமோ வந்து விட்ட யுகத்தில்?

சம்பந்தமின்றி ஒரு சிந்தனை வந்து போயிற்று.

"ஐ யாம் ஸாரி."

நர்மதாவை நிமிர்ந்து பார்த்துவிட்டு விடைபெற்றான்.

அது பதிலா விடைபெறுதலா அல்லது இரண்டுமா?

அவன் திரும்பி ஜீப்பில் ஏறி தலையசைக்கும் போது ஒரு வருத்தம் தெரிந்தது.

ஒன்பது மணிக்கு இருக்கூடல் ஆற்று மேட்டில் பாலாறும் செண்பகனிய நதியும் கூடுகிற முக்கிற்கு ஒரு லாரி வந்தது.

கட்டாந்தரையாகியிருந்த மணல்மே~ நோக்கி அது திரும்பிற்று

லாரி டிரைவர் சக்கரம் புதையாத மூலை யாகப் பார்த்து வண்டியை நிறுத்தினான்.

லாரியிலிருந்து ஏழெட்டுப் பேர் கீழே குதித் தனர். ஒருவன் மட்டும் லாரி பாடியில் நின் றான்.

நீளக் கைப்பிடியுள்ள மணல் லாரிகளை யும், மணல் தட்டுக்களையும் கீழே இரண் டிரண்டாகத் தூக்கிப் போட்டான்.

"ஒயரத் தூக்கிப் போடாதடா முண்ட கலப்பை! புடி பேந்துடப் போவுது" கீழே நின்ற வரில் ஒருவன் கத்தினான்.

"இவுருதான் காண்ட்ரைட்டு, வந்துட்டாரு சொல்லிக் குடுக்க... நீ வந்து ஏறேன். எறங்கிட் டானுங்க மைசூரு மகராஜாவுங்க."

டிரைவர் ஸீட் கதவைத் திறந்து கீழே குதித் தான்.

"ஆமாங்கடா காலங்கார்த்தாலே ஆரம்பிச் சுடுங்க, வாக்குவாதத்தை! வந்தமா வாயப் பொத்திக்கினு வேலயைப் பார்த்தமான்னு நிக்க மாட்டீங்களே... ஏரியாவிலே ட்ரபிள் வரும்னு சொல்லி அனுப்பிச்சிருக்காங்க'' என்று கடுகடுப்பாக எச்சரித்தான் டிரைவர்.

எஞ்சின் ஓரம் நகர்ந்து ஒரு சக்கரத்தில் பின் கால் ஊன்றி ஆசுவாசமாக அவன் சிகரெட் பாக்கெட் எடுத்து ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

அதற்குள் லாரியில் நிற்பவன் நிமிர்ந்து பார்த்துவிட்டு, ''அண்ணாத்தே, ஊர்வலம் வர்ற மாதிரி ஒரு கூட்டம் வருதே... தோ 'லெப்டு'க்கா பாருங்க'' என்றான்.

டிரைவர் திரும்பினான்.

நர்மதா முன்னே வர பின்னால் மூன்று வரிசையாக முப்பது பேர் ஊர்வல அணி வகுப்பு போல் ஆற்றங்கரையிலிருந்து லாரியை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

உபாதை கழிக்க மறைவிடம் நோக்கிப் போய்க் கொண்டிருந்த கிளீனரைக் கூப்பிட் டான். "ரகுபதி... லாரியிலே ஏறி சாமானுங் களைத் தூக்கிப் போடு. ட்ரபுள் ஆரம்பிக் கறதுக்கு மின்னாடி வேலையைத் தொடங் கிடணும்."

**ஊ**ர்வல அணிவகுப்பு இரண்டாக இணைந்தது. பின்பு இரண்டு தனிக்குழுவாகப் பிரிந்தது.

மணல் வாருகிறவர்களைச் சுற்றி ஒரு வட்டமாகப் பதினைந்து பேர் நின்றார்கள். மற்றொரு வட்டம் லாரியைச் சுற்றி நின்றது.

டிரைவரின் பக்கத்து ஸீட்டில் லாரியை விட்டு இறங்காமல் உட்கார்ந்திருந்த இன் பண் ணிய நீலச்சட்டைக்காரன் கீழே குதித்தான்.

அவனை நர்மதா நெருங்கினாள்.

"மணல் லோடு கெமிகல் தொழிற் சாலைக்கா?"

"ஆமாம்."

"நீங்க யாரு?"

"சூபர்வைசர்."

''இங்கே மணல் வாரக் கூடாது''

"கலெக்டர் பர்மிட் வச் சிருக்கோம்.'' அவன் சட் டைப் பையிலிருந்து நான் காக மடித்த காகிதத்தை எடுத்து நீட்டினான்.

அவள் வாங்கவில்லை.

''பர்மிட இருக்கலாம்! ஆனா நாங்க மணல் வார அனுமதிக்க மாட்டோம்'' என்றாள்.

அவள் சொல்லி முடித்ததும் இரண்டு வட்டமாக நின்றவர்கள் ஒரே சமயத்தில் கோஷம் போடத் தொடங்கினர்.

"வாராதே வாராதே ஆத்து மணலை வாராதே!"

''கட்டாதே கட் டாதே தொழிற்சாலை கட்டாதே!"

"கெடுக்காதே கெடுக் காதே குடிநீரைக் கெடுக் காதே!"

காலை ஆறரைக்குத் தொடங்கி இரண்டு மணி நேரம் நர்மதா கொடுத்த பயிற்சி திருப்தி கரமாயிருந்தது.

தொண்டர்கள் கட் டுப்பாடாக நின்று ஒழுங் காக ஒத்துழைத்தனர்.

இடைவெளி விட்டு விட்டு கோஷம் ஐந்து முறை உயர்ந்து ஓய்ந்தது.

சூபர்வைசர் அதை எதிர்பார்க்கவில்லை. அவர் முகத்தில் திகைப்பு.

''மேடம், இது கவர்ன் மெண்ட் விவகாரம்! இதிலே தலையிடறது சரியில்லே."

நர்மதா அவரை மரியாதை யோடு பார்த்தாள்.

"இந்த கவர்மெண்டுக்கு நாங்க தான் வோட்டு போட்டிருக்கிறோம். இது தப்புச் செஞ்சா கேக்கற உரிமை

''நீங்க கான்ஸ்டபிளா இருக்கலாம். அதுக்காக உங்க பசங்களுக்கு தொப்பைராஜ், மாமூல்குமார்னு



பேர் வெச்சிருக்கறது கொஞ்சம் கூட நல்லாயில்லே!''

– கொங்கணாபுரம் வே. செந்தில்

எங்களுக்கு இருக்கு."

அவன் பதில் சொல்லி முடித்ததும் தொண்டர் வளையங்களில் இருந்து அடுத்த கோஷம் புறப்பட்டது. வேறு ராகம்.

''குடிக்கிற தண்ணி பாழாச்சு."

''உழுகிற நிலமும் வீணாச்சு."

''மீனும் பறவையும் செத்தாச்சு."

''சோதனை வருவதை மறந்தாச்சு."

ஐந்தைந்து முறை சந்த லயம் தவறாமல், பிசிறடிக்காமல் ஒரே குரலாக கோஷம் உயர்ந்து ஓய்ந்தது.

சூபர்வைசர் டிரைவரைப் பார்த்தார். டிரைவர் இனி னரைப் பார்த்தான்.

"டேய் ரகுபதி, நீ போய் எட் ஆபீஸ¬க்குப் போன் போட்டு சமாசாரம் பலான ரூட்லே போவுது. ஜல்தி வரணும்னு சொல்ட்டு வா!" என்றான்.

அசமஞ்சம் போல் அந்தச் சமயம் பார்த்து, ''போன் நம்பரு இன்னா அண்ணாத்தே?'' என்று கேட்டு வைத்தான்.

"டேய் ஒலக்கைத் தடி...'' என்று லாரி டிரைவர் அவனைத் திட்டுகிற சுவாரஸ்யத்தில் மூழ்கப் போனான்.

சூபர்வைசர் குறுக்கி, "இருங்க... நான் போய் பண்ணிட்டு வர்றேன்!'' என்று இடைமறித்தார்.

''ஜல்தி வாங்க சார்! இன்னிக்கு 'கோட்டா'ப்படி நாலு ட்ரிப் அடிக்கணும். இந்த மாதிரி எடக்கு மொடக்கு வரும்னு தெரிஞ்சிருந்தா நாங்க இந்த காண்ட்ராக்டையே வாங்கியிருக்க மாட்டோம்."

சூபர்வைசருக்குத் தான் மேல்கை என்று நிரூபிக்கக் கிடைக்கிற வாய்ப்பை டிரைவர் இழப்பானா?

"தோ வந்துடறேன்."

சூபர்வைசர் தன் கான்வாஸ் ஷூவால் ஆற்று மணல் நறநறக்க வேகமாக நடந்தார்.

முன் வெய்யில் பனிச்சென்று காய்ந்தது.

மணல்வெளியில் நின்றிருந்த தொண்டர்கள் இரண்டு வட்டமாகச் சுற்றி உட்கார்ந்தனர்.

அவர்களது அடுத்த கோஷம் தொடங்கிற்று.

"காத்தும் வானமும் கடவுள் சொத்து!"

"மண்ணும் தண்ணியும் ஊரின் சொத்து!"

"தொழிற்சாலை கட்டிச் சுரண்டாதே!"

"ஆத்தை அழிக்கப் பாக்காதே"

திருக்கூடலின் ஆற்று மணல் வெளி வழியாக அறுபது எழுபது வருடங்களுக்கு முன் பாதயாத்திரையாக நாட்டு விடுதலைக்குக் கோஷம் கொடுத்தவாறே தொண்டர்கள் போயிருக்கிறார்கள். மாதர்கள் போயிருக்கிறார்கள். கொடி பிடித்த ஊர்வலங்கள் போயிருக்கின்றன.

அப்புறம் கூட பல்வேறு பிரச்னைகளை வலியுறுத்திப் பல ஊர்வலங்கள் போயிருக்கின்றன.

ஆனால் அந்த ஆற்று மணல் வெளியின் வரலாற்றில் அதன் தூய்மையைக் காப்பாற்ற, அதன் பெருமையை மீட்க எழுந்த முதல் குரல் அதுதான்.

பதினோரு மணிக்கு போலீஸ் வேன் ஆற்றங்கரை ஓரம் நின்றபோது வியர்வை வழிந்தாலும் உற்சாகம் இழக்காமல் தொண்டர்கள் ஆற்றுமேட்டில் கோஷம் போட்டுக் கொண்டிருந்தனர்.

திருவிழா வேடிக்கை போலக் கரையோரத்திலும் தாம்போகிப் பாலத்திலும் கூட்டம் நின்றது. ஒரு புத்திசாலி ஐஸ் வண்டிக்காரன் ப்பாயிங்... ப்பாயிங் என்று கை ஹாரன் அழுத்தி ஐஸ் விற்பனைக்கு முயற்சி செய்தான்.

ஆற்றுமேட்டுக்கு ரைஃபிள் ஏந்திய நான்கு காவலர்கள் பின்தொடர போலீஸ் வேனிலிருந்து இறங்கிய இன்ஸ்பெக்டர் நர்மதாவை நோக்கி நடந்து வந்தார்.

"யூ ஆர் அண்டர் அரெஸ்ட்!" என்று நர்மதாவைப் பார்த்துச் சொல்லிவிட்டு, "ஸிக்ஸ்டீன் எய்ட்டி ஃபோர் எல்லாரையும் கூட்டிட்டுப் போ. வண்டியிலே ஏத்து!" என்றார்.

தனக்குள் பயத்தை மீறிய ஓர் உத்வேகம் பொங்கியதை நர்மதா அனுபவித்தாள். ஒரு கூட்டிலிருந்து புறப்பட்ட விடுதலை உணர்வு அது!

(தொடரும்)



"என்ன சார் இண்டர்வியூவில குஷ்பு, நக்மா, ரம்பா... பற்றிய கேள்வியா கேட்கறீங்க?"

"வேலைதான் கொடுக்கப் போறதில்லே... கேள்வியையாவது ஜிலுஜிலுன்னு கேட்போமேன்னு தான்!"

— உ. ராஜாஜி



# பாரதி இருந்த வீடு

சுதந்தரப் பொன்விழா சமயத்தில், வழக்கமான வீட்டுப் பிரச்னையொன்றுக்கு, ட்விஸ்ட் கொடுக்க, சுஜாதா, பாரதியாரைப் பயன்படுத்தியிருப்பது பாராட்டுக்குரிய சமயோசிதம்.

கவர்ன்மென்ட் உத்தியோகத்திலிருந்து ரிடையர் ஆகி, சொற்ப பென்ஷன் பெற்று வாழும் சுப்ரமணிய ஐயர்தான் பிரதான பாத்திரம். அவருடைய பிள்ளைகளில் ஒருத்தன் சென்னையில்; இன்னொருத்தன் டில்லியில்.

சென்னை வீட்டில் கதை நிகழ்கிறது. மருமகளுக்கும், மாமனாருக்கும் எட்டாம் பொருத்தம். மனைவியை மீறாத பிள்ளையாண்டான். தாத்தாவுக்கும் பேரன், பேத்திக்கும் அபார ஒட்டுதல்.

தாத்தாவை, டில்லி பிள்ளையிடம் அனுப்பி வைக்க முயற்சி நடக்கிறது. ஆனால் அங்கே போக துளியும் அவருக்கு இஷ்டமில்லை. ஒரு கட்டத்தில், நண்பர் மணி மூலம் திருவல்லிக்கேணியில் ஒரு ரூம் பார்த்துக் கொண்டு தனியே போய்விட முடிவெடுக்கும் முதியவரை (உள்ளுக்குள்) சந்தோஷமாய் வழியனுப்பும் படலம்.

அப்போது ஏற்படுகிறது திருப்பம். மத்திய சர்க்காரிடமிருந்து, உங்களுக்குச் சொந்தமான திருவல்லிக்கேணி வீட்டில் மகாகவி பாரதியார் இருந்ததாக அறிகிறோம். தேசிய சின்னமாக்கும் நோக்கத்தில் அந்த வீட்டை அரசு வாங்க உத்தேசித்துள்ளது. வீட்டின் மதிப்பு முப்பத்தேழு லட்சம் என்று ஒரு கடிதம் வருகிறது.

அப்புறம் காட்சிகள் தலைகீழாய் மாறுகின்றன. வீட்டின் பேரில் உள்ள நாற்பதாயிரம் கடனை அடைத்துவிட்டு, பத்திரங்களை எடுத்து வருகிறான் முதல் பையன். டில்லியிலிருந்து, அப்பாவுக்கு ஃப்ளைட் டிக்கட் சகிதம் நேரே வருகிறான் இரண்டாம்பிள்ளை.

பார்க்கில் பேசிக் கொண்டிருக்கும் போது, முதியவரிடம், நண்பர் மணி, "ஓய்! உமக்குச் சொந்தமான வீட்டில் பாரதியார் வசித்ததும், அதை தேசிய நினைவுச் சின்னமாக்க வேண்டும்' என்று அரசாங்கத்துக்கு நான் எழுதிப் போட்டதும் நிஜம். ஆனால், கவர்ன்மென்டில் முப்பது, முப்பத்தஞ்சாயிரம்தான் கொடுப்பார்கள். முப்பத்தேழு லட்சம் என்பதெல்லாம் என் செட் அப்!" என்று குண்டைப் போடுகிறார்.

பதறிப்போகிறார் பெரியவர். "என்னை எல்லாரும் 'பொய்யன்' என்று தூற்றும்படி செய்து விட்டாயே!" என்று கோபிக்கிறார்.

"உம்மை 'இல்-டிரீட்' பண்றதை என்னால தாங்கிக்க முடியலை. அதான் இப்படிப் பண்ணிட்டேன்!" என்று விளக்கம் தருகிறார் மணி.

வீட்டுக்கு வந்ததும், தன் பேரனையும், பேத்தியையும் அழைத்து உண்மையை உடைக்கிறார் தாத்தா. பேரன்; "பொய் என்பது ரொம்ப சகஜமான விஷயம். யூ டோன்ட் ஒர்ரி. விஷயத்தை வெளியில் சொல்லாதே!" என்கிறான். அடுத்து, பேரனும், பேத்தியும் தாத்தாவை "உண்மையை இப்போதைக்குச் சொல்லாதீர்கள்" என்று கெஞ்ச, தாத்தா கண்ணீர் மல்க, அவர்களை அணைத்தபடி, வாயை மூடிக் கொண்டு விடுகிறார்!

முதல் பாதியில் வழக்கமான நாடகம் போல இருக்கிறதே என்ற எண்ணம் எழுந்தாலும், மறுபாதியில் சுஜாதா நாடகம் என்பது நிரூபணமாகிறது.

முதியவர் கேரக்டரில் பூர்ணம் விஸ்வநாதன் எப்படி ஒன்றிப்போகிறார் என்கிற வியப்பு பார்க்கிற ஒவ்வொருவருக்கும் நிச்சயம் ஏற்படும்.

தாத்தாவுக்கு அடுத்தபடி நடிப்பில் முன்நிற்பது பேத்தியும், பேரனும்தான். சபாஷ்!

இது நாடகமல்ல; ஜன்னல் வழியே அடுத்த வீட்டில் நடப்பதைப் பார்க்கிற மாதிரி இருப்பதாகச் சொல்லுவது கூட சரியில்லை. சுஜாதா, ஜன்னல் வழியே நம் வீட்டுக்குள் பார்த்துவிட்டு எழுதின மாதிரியான பிரமை ஏற்படுகிறது.

தமிழ் நாடக உலகில் புதிய சிகரத்தைத் தொடுகிறது 'பாரதி இருந்த வீடு!'

— மௌலி

## நீங்கள் கேட்டவை – தராசு

● மல்லிகை மன்னன், மதுரை – 14

*? 'ஊழல் செய்வதில் பத்தாவது இடத்தில் இந்தியா இருப்பது குறித்து வெட்கப்படு கிறேன்' என மனம் நொந்து போயிருக் கிறாரே குஜ்ரால்!*

! வெட்கப்படுவதை விடுத்து செயலில் இறங்கினால் முன்னேற்றம் காணலாம். முதலில் லல்லு கட்சி அமைச்சர்களை வெளியே அனுப்பட்டும். அப்புறம் லோக்பால் மசோதாவை தாக்கல் செய்து நிறைவேற் றட்டும். அடுத்து, ஸி.பி.ஐ. சுதந்தரமாக இயங்க வழி வகுக்கட்டும். பிறகு ஒவ்வொன்றாக மற்ற காரியங்களைச் செய்யலாம். எதையுமே செய்யாமல் காலத்தை ஓட்டுவதைவிட, கால் கடுதாசு கொடுத்துவிட்டுப் போய்ச் சேருவது நலம்.

● கே. எம். ஸ்வீட் முருகன், கன்னிக்கோட்டை.

*? பிரேமானந்தா சாமியாருக்குத் தந்துள்ள தண்டனை சரியானதா?*

! ரொம்ப சரி! அதைக் கண்டு வீரப்பனே பயந்து சரணடையத் தயங்கியிருக்கிறானே! தண்டனை ஒருபுறமிருக்க, நீதிபதியின் தீர்ப்பு வாசகங்கள் இதுபோன்ற கற்பழிப்புக் குற்றங்களுக்கெதிரான ஓர் அழுத்தம் திருத்த மான மரண அடி!

# கனிமொழியின் திருமணம் பற்றி..?



● ப. இராம் முருகன், சிவகங்கை.

*? கூட்டணி அமைக்காமல் தனித்துப் போட் டிவிடக் கூடிய கட்சி ஏதாவது உள்ளதா?*

! பி.ஜே.பி. இருக்கிறதே... அந்தத் தகுதியை இன்னும் சிறப்பாக வளர்த்துக் கொள் ளாமல் தடுமாறியதன் பயனாகத்தான் உ.பி.யில் இன்று அவதிப்படுகிறார்கள். வியூகம் வகுப்பதில் இன்னும் கொஞ் சம் விவேகம் தேவை.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

*? 'கருணாநிதியை நல்லவர் என்று சொல்லும் ஒரே மனிதன் சந்தன வீரப்பன்தான்' என்று சேடப்பட்டி முத்தையா கூறியுள்ளாரே...?*

! அவன்கூட தங்களை நல்லவர்கள் என்று புகழவில்லையே என்கிற ஆதங் கம் சேடப்பட்டிக்கு இருப்பது நியா யம்தானே!

● ச.ஆ. கேசவன், இனாம் மணியாட்சி.

*? பத்திரிகைத் தொழில் என்பது கம்பிக் கயிற்றின்மேல் நடப்பதைப் போல.. எனப்படுவது உண்மையா?*

! நல்ல பத்திரிகைகளைப் பொருத்த மட்டில் நீங்கள் கூறுவது உண்மைதான். அச்சுப்பிழை, கருத்துப்பிழை வராமல் கவனம் காப்பது ஒரு பக்கமென்றால், சதா காலமும் வாசகர் கவனத்தை

• முடிவெடுக்க உதவலாம்...

❒ ரூ. 50 பரிசு பெறுபவர்:
ஜெ. கண்ணன்,
246, பதினோராவது தெரு,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை – 600 101.

இழுத்துப் பிடிக்க சாகசம் செய்து கொண்டேயிருக்க வேண்டும்.

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர் அஞ்சல்.

*? சுதந்தரம் அடைந்து ஐம்பதாண்டுகள் ஆகியும் இந்தியாவில் ஏழைமை ஒழியவில்லையே...?*

! ஏழைமைகூட பழகிவிடும்; அதை அனுபவிக்கப் பழகிக் கொண்டு காலத்தை ஓட்டிவிடலாம். ஆனால், கெட்ட குடியே கெடும் என்பது போல, ஏழைகளின் குடிசைகளுக்கு அடுத்தடுத்தும் அடிக்கடியும் தீ விபத்து ஏற்படுவதுதான் அதைவிடக் கொடுமை. திட்டமிட்ட சதியாக இருக்கலாம் என்று யூகித்தால் மட்டும் போதாது. சதியை அம்பலப்படுத்த காவல்துறை முயற்சி செய்ய வேண்டும். ஆஸ்பெஸ்டாஸ் ஓடு கொடுக்கலாம் என்ற யோசனை நல்லதுதான். அதைவிட மண் ஓடு நல்லது. கிராமங்களிலிருந்து நகரங்களுக்குக் குடிபெயரும் போக்கு அதிகரித்திருப்பதே அடிப்படை பிரச்னை. இதைக் கட்டுப்படுத்த கிராமப்புற பொருளாதார மேம்பாடு வேண்டும்.

● பா. ரவிச்சந்திரன் , அரூர்.

*? சந்திரலேகா முகத்தை மீண்டும் பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொண்டாராமே...?*

! அதில் அதிசயமில்லை; மனத்தை எப்படி பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொண்டார் என்பதுதான் வியப்போ வியப்பு!

● வி.சிவா, அரசரடி.

*? கனிமொழியின் திருமணம் பற்றி...?*

! திருமணம் மட்டுமல்ல; மறுமணம். முதல்வரின் மகள் இப்படி மறுமணம் செய்து கொள்வதால், 'நாம் செய்யலாமா வேண்டாமா?' என்று தயங்கி, குழம்பிக் கொண்டிருக்கும் பெண்கள் தெளிவடைந்து நல்ல முடிவை எடுக்கக் கூடும். நமது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

• வீரப்பனின் பயம்!

• 'நியாய'மான ஆதங்கம்!





• விட்டுக் கொடுக்கலாமா!

● எல். பாபு, திருவண்ணாமலை – 4.

*? கவர்ச்சி, ஆபாசம்– இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன...?*

! கலையுணர்வு என்கிற வண்ணத்தில், கண்ணியம் என்கிற தூரிகையைக் கொண்டு இழுக்கப்படும் ஒரு கோடுதான் இரண்டையும் பிரிக்கிறது.

● ஜெ. கண்ணன், சென்னை – 101. ❒

*? ஜாலியன் வாலாபாக் படுகொலைக்கு இங்கிலாந்து மகாராணி மன்னிப்பு கேட்க வேண்டும் என்று சொல்லும் பா.ஜ.க. தலைவர்கள், பாபர் மசூதி இடிபட்டதற்கு முஸ்லிம்களிடம் மன்னிப்பு கேட்பார்களா?*

! சபாஷ்! சரியான கேள்வி. இதை அவர்களிடம் கேட்டால், 'முதலில் அங்கிருந்த கோயிலை இடித்தார்களே!' என்பார்கள். சரித்திரமாகிவிட்ட நிகழ்வுகளை இப்படியே தோண்டிக் கொண்டேயிருந்தால் விரோதம் பாராட்டத்தான் பொழுது சரியாயிருக்கும்.

● கி. ரமேஷ் பாபு, சேலம்–1.

*? அன்பினால் எவற்றையெல்லாம் வெல்ல முடியும்?*

! துன்ப நினைவுகளும் சோர்வும் பயமுமெல்லாம்
அன்பில் அழியுமடி–
கிளியே
அன்புக் கழிவில்லை
காண்!
– பாரதியார்.

• அன்பின் வெற்றி!

● வீ. முத்துக்குமரன், திருமானூர்.

*? கொள்கை மாற்றம் எப்போது, எந்த சூழ்நிலையில் வரவேண்டும்...?*

! காலமும் அனுபவமும் நமது கொள்கைகள் தவறானவை என்று நிரூபிக்கும்போது, அவற்றை மாற்றிக் கொள்ளத் தயங்கக் கூடாது. எனினும், ஆதாரக் கொள்கைகளான வாய்மை சகோதரத்துவம் போன்றவை சாகவதமானவை.

● பஞ்சவர்ணம், கருப்பம்புலம்.

*? அரசு ஊழியர்களைப் போல வங்கிப் பணியாளர்கள் செயல்படக் கூடாது என்று நிதியமைச்சர் சொல்கிறாரே... அப்படியென்றால் என்ன அர்த்தம்?*

! அர்த்தம் தெரியாதாக்கும்! ஆனாலும் இப்படித் தம் துறையினரை அமைச்சர் விட்டுக்கொடுத்துப் பேசியிருக்க வேண்டாம்.

# பலஹீனமானவர்கள்

"தன் மேல் நம்பிக்கையிருக்கவங்க யாரும், இந்த மாதிரி சாமியார் பின்னால போக மாட்டாங்கடா. பலஹீனமான மனிதர்கள்தான் இந்த மாதிரியான சாமியார்களின் பலம். நீயும் இந்த கூட்டங்களோட சேர்ந்துட்டியே!" என்றான் கேசவன்.

"மத்த சாமியார்கள் மாதிரி எங்க சாமி கிடையாது. அவங்கள்ளாம் போலி" என்றான் மணி.

"இது ஒண்ணுலதான் எல்லா சாமி பக்தர்களும் ஒண்ணு. எங்க சாமி நல்லவரு. மத்த சாமியார்களெல்லாம் போலின்னு சொல்வாங்க. ஆனால் எல்லாச் சாமியார் பின்னாலயும் கூட்டமிருக்கு. ஒண்ணு மட்டும் உண்மை. நாளைக்கு நான் கூட கேசவானந்தான்னு போட்டுட்டு உட்கார்ந்தால், பின்னால நாலு பேர் வருவான். நாட்டுல பெஸ்ட் பிஸினஸ் சாமியார் பிஸினஸ்தான்" என்றான் கேசவன்.

"இப்ப உன் லெக்சரையெல்லாம் கேட்கப் பொறுமை இல்லை. எனக்கு ஏகப்பட்ட பிரச்னையிருக்கு. எங்க சாமியைப் பார்க்கணும். நீ கூட வா" என்றான் மணி.

"அப்பா! ஆளைவிடு. இந்த குறி சொல்ற கோஷ்டிகளிடம் நான் வரலை."

"நீ வந்துதான் ஆக வேண்டும். என்னோட வண்டி ரிப்பேர். நீதான் என்னைக் கூட்டிக் கொண்டு போக வேண்டும்."

"போச்சடா! கூட வந்தால் சரவணபவன்ல மாங்கோ லஸ்ஸி வாங்கித் தருவியா?"

"கண்டிப்பாக!" என்றபடி மணி ஹீரோ ஹோண்டாவில் ஏறி உட்கார்ந்தான். கேசவன் வண்டியைக் கிளப்பினான்.

கேசவனுக்கும், மணிக்கும் பலநாள் பழக்கம். ஒரே ஆபீஸில் வேலை பார்க்கிறார்கள். இருவருக்கும் புரசைவாக்கத்திலேயே வீடு. பல விஷயங்களில் ஒத்துப் போகக்கூடியவர்கள். சினிமாவிலிருந்து டென்னிஸ் வரை ஒரே ரசனை. ஒரே பேச்சு. இருவருக்கும் கடவுள் பக்தி உண்டு. ஆனால் மணிக்கு சூளைமேட்டில் ஒரு சாமியார் மீது அபார நம்பிக்கை. அந்த சாமியாரிடம் கேட்டுக் கொண்டுதான் எந்தக் காரியமும் செய்வான். கேசவனுக்கு இந்த விஷயம் சுத்தமாகப் பிடிக்காது. ஏனெனில் அவன் சிறு வயது அனுபவம் அப்படி.

அப்போது கேசவன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அப்பாவிற்கு வேறு வேலையிருந்தாலும், பூர்வீக நிலங்களில் விவசாயம் செய்து கொண்டிருந்தார். திருநெல்வேலிக்கு அருகே வல்லநாட்டிற்கு அருகே நிலம் இருந்தது. வல்லநாடு ஸ்டாப்பில் இறங்கி மூன்று கிலோ மீட்டர் நடக்க வேண்டும். அப்பா போக முடியாத நாட்களில் கேசவன் போவான். ஒரு பாக்கெட் டிரான்ஸிஸ்டர், படிக்க ஒரு புத்தகம், சாப்பாடு எடுத்துக் கொண்டு,

'கடவுள் என்னும் முதலாளி
கண்டெடுத்த ஏமாளி விவசாயி'

என்று பாடிக்கொண்டே போவான். ஏனெனில் இவர்களுக்கு விவசாயத்தில் லாபமில்லை. ஏதோ பூர்வீக நிலமென்று பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் கேசவன் வயற்காட்டிற்குப் போன போது பயங்கர அதிர்ச்சி. வாய்க்காலிலிருந்து தண்ணீர் இறைக்கும் மோட்டார் களவு போயிருந்தது. ரூமை உடைத்து மோட்டாரைத் தூக்கிக் கொண்டு போயிருந்தார்கள். கேசவன் திரும்பி வந்து அப்பாவிடம் சொன்னான். இருவரும் முறப்பநாடு போலீஸ் ஸ்டேஷனில் கம்ப்ளெய்ன்ட் கொடுத்துவிட்டு, பேசாமல் வீட்டுக்கு வந்து விட்டார்கள்.

மறுநாள் வயற்காட்டில் வேலை செய்யும் சுப்பையா வீட்டிற்கு வந்தான்.

"ஐயா! போலீசுல சொல்லியெல்லாம் மோட்டாரைக் கண்டுபிடிக்க முடியாது!"

"பின்னே! என்ன செய்யறது?"

"முக்கூடல்ல நமக்குத் தெரிஞ்ச ஒரு சாமி குறி சொல்லுவாரு. போய்க் கேட்டால், மோட்டார் இருக்கற இடம், களவாண்ட பய விவரம் அம்புட்டும் சொல்லிப்புடுவாரு."

கேசவனுக்கு சிரிப்பு வந்தது. முதலில் நம்பிக்கையில்லையென்றாலும், எப்படியாவது மோட்டார் கிடைத்து விடாதா? என்ற நப்பாசையில் கேசவன் சாமியாரிடம் குறி கேட்கப் போனான்.

ஒரு ஸ்டூலில் சாமியார் உட்கார்ந்திருந்தார். சுற்றி நிறைய படங்கள் இருந்தன. கேசவனும் வயற்காட்டில் வேலை செய்யும் சுப்பையாவும்



போய் உட்கார்ந்தார்கள். அவர் இவர்களைக் கவனித்தாரா என்று தெரியவில்லை. சத்தமாக ஏதோ பாடினார். ஏதோ பேசினார். அரைமணி நேரம் கழித்து கண் திறந்தார்.

"என்ன விஷயம்?" என்றார்.

"சாமி! வயற்காட்டில் ஒரு பொருளைக் காணோம்" என்றான் சுப்பையா.

"அது விவசாயத்திற்கு பயன்படக் கூடியதுதானே!"

"ஆமா சாமி!"

"அது நான்பட்டால் கெட்டுப் போகக்கூடிய பொருளல்ல."

"ஆமா சாமி. நான் சொன்னேம்லா! சாமி எம்புட்டு கரெக்டா சொல்லுது. சாமி, எங்க இருக்கு சாமி?" என்று சுப்பையா உணர்ச்சிவசப்பட்டான்.

கேசவன் அவனைக் கோபமாகப் பார்த்தான்.

"நாளை வா!" என்று சொல்லிவிட்டு சாமி மீண்டும் கண்ணை மூடிவிட்டார்.

சுப்பையா, கேசவனிடம் 'எழுந்திரிங்க' என்று சைகை காட்டினான்.

"சாமி! காணிக்கை" என்றான். அவர் கண்ணைத் திறக்காமலே, கையைக் காட்டினார். அந்த இடத்தில் ஒரு தட்டு இருந்தது. அதில் நூற்றியொரு ரூபாய் வைத்துவிட்டு நகர்ந்தார்கள்.

"எப்படி சரியாக அடிக்காரு பாத்திகளா? நாளக்கி இருக்க இடத்தைச் சொல்லிப்புடுவாரு."

சுப்பையா நம்பிக்கையோடு நடந்தான். கேசவன் அமைதியாகப் பின்தொடர்ந்தான்.

**பிருதிவிராஜ்**

மறுநாள் போன போது, அதே போல் கண்ணை மூடிக் கொண்டு பாடிக் கொண்டிருந்தார். அதே போல் அரைமணி நேரம் கழித்துக் கண் திறந்தார்.

"ஊருக்கு அருகில் ஆற்றுக்கு மேல் பாலம் உள்ளதா?" என்றார்.

"ஆமா சாமி!" என்றான் சுப்பையா. மெதுவாக கேசவனிடம் 'முறப்ப நாட்டு பாலத்தைச் சொல்றாக' என்றான்.

"அதன் கிழக்கே வாழைத் தோட்டம் தாண்டி, புளிய மரத்தினடியில் உன் பொருள் இருக்கிறது. எடுத்துக் கொள்" என்று சொல்லிவிட்டு, மீண்டும் பாட ஆரம்பித்து விட்டார். மீண்டும் சுப்பையா நூற்றியொரு ரூபாய் வைக்கச் சொன்னான். சுப்பையா சந்தோசமாக

நடந்தான்.

''ரொம்ப சரியாகச் சொல்லிப் புட்டாருலா. முறப்பநாடு பாலம், கிழக்கே வாழைத் தோப்பு, அதற்கப்புறம் புளியமரம்... அப்படியே இருக்குது."

''அதெல்லாம் இருக்குது. ஆனால் மோட்டார் அங்க இருக்குமா?"

கேசவனுக்கு சந்தேகம். மண் தோண்டுவதற்கு ஆட்கள், மண்வெட்டி, கடப்பாரை சகிதம் அந்த இடத்திற்குப் போய்த் தேடினார்கள். ஒன்றும் அகப்படவில்லை. மோட்டார் போன நஷ்டம் மட்டுமில்லாமல், சாமி காணிக்கை, ஆட்கள் கூலி, அலைச்சல், முக்கூடலில் குடித்த சர்பத் எல்லாம் சேர்த்தால் செலவு ஆயிரத்தைத் தாண்டியிருந்தது. கேசவனிற்கு அன்றிலிருந்து சாமியார்கள் என்றாலே அலர்ஜி. அது மட்டுமல்லாமல் சாமியார்களை நம்புபவர்களை வாதத்திற்கு இழுத்து, விவாதிப்பதில் ரொம்ப மகிழ்ச்சி. பேசிப் பேசி சாமியார் நம்பிக்கைகளைப் போக்க வேண்டும் என்று ஒரு ஆசை. அதைத்தான் மணியிடமும் பண்ணிக் கொண்டிருந்தான்.

மணியுடன், அந்த சாமியார் வீட்டிற்குக் கேசவன் போய் இறங்கினான். மணியிடம் அப்படியொரு பயபக்தி எப்படி வந்தது என்று தெரியவில்லை. அப்படியொரு பயபக்தியுடன் வீட்டிற்குள் போனான். ஒரு சின்ன மறைப்பிற்குள், மெல்லிய வெளிச்சத்தில் ஒரு சாமியார் உட்கார்ந்திருந்தார். கண்ணை மூடிக் கொண்டு ஏதோ ஜெபித்துக் கொண்டிருந்தார். மணி தன்னுடைய பிரச்னைகளைச் சொல்ல ஆரம்பித்தான். தங்கைக்கு சரியான மாப்பிள்ளை கிடைக்கவில்லை. பொருளாதாரப் பிரச்னைகள். மூன்றாம் கிளாஸ் படிக்கும் பையன் சரியாகப் படிப்பதில்லை. என்னென்னவோ சொன்னான். சாமியார் எல்லாவற்றையும் பொறுமையாக கேட்டுக் கொண்டிருந்தார். கண்ணை மூடிக் கொண்டார். "உடலை வருத்தி ஒரு பரிகாரம் செய். எல்லாம் சரியாகிவிடும்."

"என்ன செய்ய வேண்டும் சாமி?"

"உன் மனைவியை மூக்கு குத்தச் சொல். இடது மூக்கு குத்தச் சொல். உடல் பரிகாரமாய் போய் விடும்" என்றார். மணி பயபக்தியுடன் எழுந்து நூற்றியொரு ரூபாய் தட்சணை வைத்துவிட்டு நடந்தான். வெளியே வந்ததும் கேசவன் பிடித்துக் கொண்டான்.

"உனக்கு ஏதாவது யோசனையிருக்கா? உன் தங்கைக்கு வரன் வேணும்னா, நல்லா தேடு. பேப்பர்ல போடு. மூன்றாம் கிளாஸ் பையனுக்கு என்ன பெரிய படிப்பு? தலையில ரெண்டு போட்டால் ஒழுங்காகப் படிப்பான்."

"நீ கம்மாயிருடா!"

"அதைவிட வேடிக்கை இடது மூக்குத்தி குத்தணுமாம். அதான் பரிகாரமாம். ஏன் வலது மூக்குத்தி குத்தினால் வலிக்காதா? ஆனால் ஒண்ணு. நல்லா காது குத்தறாரு!"

''உனக்கு ஏண்டா சாமியார்களைப் பிடிக்கவில்லை?"

''எனக்கு சாமியார்கள் மேல வெறுப்பே கிடையாது. சேவை பண்ற சாமியார்கள், அழகாக லெக்சர் கொடுக்கற சாமியார்கள் மேல எனக்கு ரொம்ப மரியாதை, ஆனால் குறி சொல்லி, பரிகாரம் சொல்லி மனுஷங்களோட தன்னம்பிக்கையைக் குலைக்கற இந்த மாதிரி சாமியார்களைத்தான் நான் வெறுக்கறேன். நான் என்ன சொல்றேன்னா...".

"அத நாளைக்கு சொல்லு. வீடு வந்துட்டுது. வண்டியை நிறுத்து."

மணி வண்டியை விட்டு இறங்கி மறைந்தே போனான். 'திருந்தவே மாட்டிங்கடா' என்று சொல்லிவிட்டு, வண்



## படேலும் பல்டி அடித்து விட்டார்!

**கர்நாடக முதல்வர் ஜே.எச்.பட்டேல், புதிய ஏழு மாவட்டங்களில் ஒன்றான 'சாம்ராஜ் நகர்' துவக்க விழாவை அங்கு செல்லாமலேயே அந்த மாவட்டத்தில் இணையும் கொள்ளேகால் தாலுக்காவில் உள்ள மலே மகாதேஸ்வரா கோவிலில் வைத்து நடத்தி முடித்து விட்டார்.**

**''சாம்ராஜ் நகர் சென்று வந்தால் பதவி போய்விடுமென்று சொல்கிறார்களே, அதனால்தான் தாங்களும் அங்கு செல்வதை தவிர்த்து விட்டீர்களா?'' என்று நிருபர்கள் கேட்ட போது, ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. சாம்ராஜ் நகர் மாவட்டம் முழுமையாக வளர்ச்சியடைந்த பிறகு நான் கண்டிப்பாக அங்கு சென்று வருவேன்'' என்று கூறி சமாளித்திருக்கிறார் ஜே.எச். பட்டேல்.**

**– அ. குமார்**

டியை ஓட்டிக் கொண்டு போனான் கேசவன்.

**ம**றுநாள் கேசவன் ஆபீஸ் போன போது ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. மணியின் பையனுக்கு ஏதோ விபத்து. ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். கேசவன் ஆஸ்பத்திரிக்கு ஓடினான். மணியின் பையன் கட்டிலில் கிடந்தான். 'பிழைத்ததே பெரிய விஷயம் போலிருந்தது. எல்லாம் சரியாக எவ்வளவு நாளாகுமோ! மணியின் மனைவி இடிந்து போய் உட்கார்ந்திருந்தாள். மணி அதைவிட மோசமான நிலையில் இருந்தான். கேசவன்தான் அனைத்து வேலைகளையும் இழுத்துப் போட்டுச் செய்தான். பையன் மீண்டும் எழுந்து நடக்க இரண்டு மூன்று மாதம் ஆகும் என்றார்கள். அதைவிட மணியைத் தேற்றுவது மிகக் கஷ்டமாக இருந்தது. எப்போதும் எங்கோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"டேய்! நீயே இடிந்து போய் உட்கார்ந்தால், யார் வீட்டம்மாவிற்கு ஆறுதல் சொல்லுவாங்க!"

"ஏண்டா! இப்ப என்ன ஆயிட்டுது. ஆண்டவன் புண்ணியத்துல பொழைச்சுட்டான். எல்லாம் சரியாகிவிடும்."

''உன் குடும்பத்திற்கு மட்டுமா கஷ்டம் வருது. எல்லாருக்கும் ஒவ்வொருவிதமாகக் கஷ்டம்'' என்று எவ்வளவோ பேசிப் பார்த்தான். மணியிடம் மலர்ச்சியே இல்லை. ஏதோ ஆபீஸ் வருவான். ஆஸ்பத்திரி போவான். வீட்டிற்குப் போவான். கேசவனால் மணியைக் காணச் சகிக்கவில்லை. அவனிடம், நடவடிக்கையில் நம்பிக்கையின்மையும், விரக்தியும் தெரிந்தது.

''எனக்கு மட்டும் ஏண்டா இவ்வளவு கஷ்டம்?'' என்று மணி கேட்டபோது, கேசவன் ஆடிப் போனான். ஏதாவது செய்ய வேண்டும் என்று தோன்றியது. ஒரே வழிதான் தெரிந்தது. மணி நம்பும் சாமியாரிடம் போனான். விஷயத்தைச் சொன்னான். சகலமும் அமைதியாகக் கேட்டார்.

"மணி வீட்டிற்கு நான் வருகிறேன்" என்று கிளம்பினார்.

கேசவன் அவரைக் கூட்டிக் கொண்டு வந்தான். மணி அவரைப் பார்த்தவுடன் எழுந்து நமஸ்கரித்தான். சாமியார் கண்ணை மூடிக் கொண்டு பிரார்த்தனை செய்தார்.

"கவலைப்படாதே! உன் கஷ்டங்கள் விலகும்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

மணியிடம் ஒரு பெரிய மலர்ச்சி வந்தது. கேசவனுக்குதான் தர்க்கரீதியாக பேசிக் கொண்டு வர முடியாத மாற்றத்தை, சாமியாரின் ஒரு வார்த்தை கொண்டு வந்து விட்டதை உணர்ந்தான்.

இப்போதெல்லாம் கேசவன் சாமியார்கள் பற்றி யாரிடமும் விவாதிப்பது இல்லை.

# 14 வருடங்களாக லீவே எடுக்காத ஊழியர்!

**ப**தினாலு ஆண்டுகளாக, எந்தவிதமான விடுப்பும் எடுக்காத ஒரு ஊழியர் இருக்கிறார் என்றால் அது வியப்பிற்குரிய செய்தி அல்லவா?

கர்நாடக மாநிலம், ஹூப்ளி நகரில் உள்ள விஜயா பாங்கில், ரிகார்டு கிளார்க்காக, பணி புரிந்து வருகிறார் முப்பத்தெட்டு வயதான அசோக்பாபர். லீவு போடுவதில்லை என்ற கொள்கையை தமது சர்வீஸ் முடியும்வரை கடைப் பிடிக்கப் போவதாகக் கூறுகிறார். ஒரு நாள், விபத்து ஏற்பட்டு காலில் அடிபட்டது. கட்டுப் போட்டுக் கொண்டு வேலைக்கு வந்து விட்டார். கல்யாணம் நிச்சயம் ஆயிற்று. திருமணத்தை ஞாயிறு அன்று வைத்துக் கொண்டார். வருடத்திற்கு இவர் 72 நாள்கள் லீவு எடுக்கலாம். 14 வருட காலத்தில் 1008 நாள்கள் விடுப்பு எடுத்திருக்கலாம்! மூ[illegible]! கடமைதான் பெரிது என்று பணிபுரிந்து வருகிறார். பயணச் சலுகை லீவு(LTC), கூட, இவர் எடுக்கவில்லை. தாய் உடல் நலம் குன்றி சீரியசாக இருந்தபோது கூட, வங்கி அலுவல் முடிந்தபின்தான், சென்று பார்த்தார். இவரது கடமை உணர்வினை அதிகாரிகள் பாராட்டி, விசேஷ இங்க்ரிமென்ட் கொடுத்தனர். தமது சாதனை கின்னஸ் புத்தகத்தில் வர வேண்டும் என்று விரும்புகிறார் இவர்! சுதந்தரத்தின் பொன்விழா ஆண்டில் இது போன்ற கடமை உணர்வைப் போற்ற வேண்டாமோ!



ஆதாரம்: 'டைம்ஸ் ஆப் இந்தியா'

தகவல்: **வி.எஸ். ராஜகோபால்**



**உங்கள் அன்பு மனைவிக்கு**

எத்தனையோ பரிசுகள் தந்திருக்கிறீர்கள்.

நகை, பூக்கள், புடவைகள்.

எல்லாவற்றிக்கும் மேலாக

உங்கள் அன்பு.

இப்போது உங்கள் மனைவிக்கு

எய்ட்ஸ் என்னும் உயிர்க்கொல்லி

நோயைத் தரப் போகிறீர்களா?

**யோசித்துப் பாருங்கள்.**

இன்பமான வாழ்க்கைக்கு இல்லறமே நல்லறம்.



தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாடு அமைப்பு,
417, பாந்தியன் ரோடு, எழும்பூர், சென்னை - 600 008.
போன் : 8255467 / 8255261 / 8254917
மேலும் எங்களை அணுக: 24 மணிநேர ஹாட்லைன்
தொலைபேசி எண்: 8256882 / 8256864

TNSACS/2001/97/ET

# “நான் ரஜினி ரசிகை!”

**— நடிகை பத்மினி பேட்டி**

**அமெரிக்காவில் செட்டில் ஆகிவிட்ட நடிகை பத்மினி, அண்மையில் சென்னை வந்திருந்தார். திரையில் லட்சக் கணக்கான தமிழ், தெலுங்கு, மலையாள, இந்தி ரசிகர்கள் கண்டு மகிழ்ந்த நாட்டியப் பேரொளியா இவர் என்று எண்ணத் தக்க அளவில் உடல் இளைத்துக் காணப்பட்டார். ‘உடல் நலக் குறைவு, பை பாஸ் சர்ஜரி’ என்று காரணம் கூறினார். பேசிய போது....**

***“பழைய சினிமா நாட்களை நினைத்துப் பார்க்கிற போது எப்படி உணர்கிறீர்கள்?”***

“அவை இனிய நினைவுகள்; மறக்க முடியாதவை. அதே சமயம், நான் நடித்த படங்களில், என் நடிப்பை இப்போது பார்க்கிற போது, ஒரு டெப்த் இல்லையோ என்று தோன்றுகிறது. இன்னும் நன்றாக நடித்திருக்கலாமே என்ற எண்ணம் ஏற்படுகிறது. இன்றைக்கு எனக்கு நடிப்பில் கிடைத்திருக்கிற எக்ஸ்பீரியன்ஸ், அப்போது இல்லாததுதான் இதற்குக் காரணம் என்று நினைக்கிறேன்.”

***“இப்போதும் தொடர்ந்து தமிழ்ப் படங்களில் நடிக்க வேண்டும் என்ற ஆசை உங்களுக்கு இருக்கிறதா?”***

“நான் அமெரிக்காவில் இருப்பதால், நம் சினிமாக்காரர்கள், அங்கே வந்து படம் எடுக்கும் போது, என்னை நடிக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். நானும் இங்கே கொஞ்சகாலம் தங்கும்படி வரும் போது, நடித்துத் தரும்படி கேட்டால், ஓ.கே. சொல்லுகிறேன். ஆனாலும் கூட நான் நடிக்கிற கதை, அதில் என்னுடைய கேரக்டர் எனக்குப் பிடித்திருக்க வேண்டும் என்பது முக்கியம்.

“முத்து படத்தில் கூட ரஜினிகாந்தின் அம்மாவாக நடிக்க வேண்டும் என்று என்னைக் கேட்டார்கள். நானும் ஒப்புக் கொண்டேன். ஆனால், மிகக் கடுமையான கோடை





யாக இருந்த சமயம் இங்கே ஷூட்டிங் இருந்தது. அந்த அளவு சூடு எனக்கு ஒத்துக் கொள்ளாது. எனவே எனக்கு உள்ளூர வர ஆசை இருந்தாலும் கூட, என் மகன் கண்டிப்பாய் போகக் கூடாது; அப்புறம் உடம்புக்கு வந்து கஷ்டப்பட நேரிடும் என்று சொல்லி என்னைத் தடுத்து விட்டான். நான் ரஜினி காந்த் ரசிகை. அவர் படங்களை ரசித்துப் பார்ப்பேன். இந்த நிலையில் அவர் படத்தில் நடிக்க வாய்ப்பு வந்தும், நான் நடிக்க முடியாது போனதில் எனக்கு ரொம்ப வருத்தம்தான்!"

***"அமெரிக்க லைஃப் எப்படி இருக்கிறது?"***

"தமிழில், அன்னை வேளாங்கண்ணிதான் நான் நடிச்ச கடைசி படம். இந்தியில் மேரா நாம் ஜோக்கர். அதன் பின் அமெரிக்கா போய் இருபத்தியேழு வருடங்கள் ஓடிவிட்டன. அங்கே போய், 'பத்மினி இன்ஸ்டிட்யூட் ஆஃப் பைன் ஆர்ட்ஸ்' ஆரம்பித்து, இப்போது ரொம்ப பிஸி. தமிழ், தெலுங்கு, இந்தி, குஜராத்தி என்று பல மொழி பேசும் இந்திய குடும்பத்துக் குழந்தைகளும் என்னிடம் டான்ஸ் பயிலுகிறார்கள்."

***"அங்கே ஆர்வம் காரணமாக நடனம் கற்றுக் கொண்டு, அரங்கேற்றம் செய்து விட்டாலும், அமெரிக்காவின் அவசரகதி வாழ்க்கையில், டான்ஸுக்கு எல்லாம் இடம் இருக்கிறதா என்ன?"***

"எழுபத்தைந்து பேருக்கு மேல் அரங்கேற்றம் செய்து வைத்திருக்கிறேன். தீபாவளி, பைசாகி, பொங்கல், யுகாதி என்று பல்வேறு பண்டிகைகளின் போதும் நடன நிகழ்ச்சிகள் நடக்கும். திருமண ரிசப்ஷன்களில், நடன நிகழ்ச்சிகள் நடக்கும்."

***"உங்கள் மகன் என்ன செய்கிறார்?"***

"என் மகன் பிரேமானந்த் டைம்ஸ் பத்திரிகையில் வேலை பார்த்தான்; இப்போது ஸ்போர்ட்ஸ் இல்லஸ்டிரேடட் என்ற பத்திரிகையில் போட்டோ ரிசர்ச்சராய் இருக்கிறான். அவன் டாகுமெண்டரி படங்கள் எடுப்பதிலும் கெட்டிக்காரன். வார இறுதி நாட்களில் கேமராவை எடுத்துக் கொண்டு கிளம்பி விடுவான். இந்தியா வந்திருந்தபோது, அவிகள், கேரள தற்காப்புக் கலைகள் என்று சில டாகுமெண்டரிகள் எடுத்திருக்கிறான். பிரமாதமான தயாரிப்புகள் அவை. என் மருமகள் ஒரு டாக்டர். ஆறு வயதில் ஒரு பேரன். பெயர் நவீன் சிவா ஆனந்த்.

***"லலிதா, பத்மினி, ராகினி ஆகிய உங்கள் மூவரில் மற்ற இருவரைவிட நீங்கள் பேரும் புகழும் அதிகமாகப் பெற முடிந்தது எப்படி?"***

"எனக்கு, மக்கள் மனத்தில் அழுத்தமாகப் பதியும்படியான கேரக்டர்கள் அமைந்ததுதான் அதற்குக் காரணம், சினிமா உலகில் நாங்கள் நடித்த கேரக்டர்கள், பாபுலாரிடி இவற்றில் பேதம் இருந்தாலும், எந்த கட்டத்திலும் நாங்கள் மூவரும் மிக நெருக்கமாகவே இருந்தோம். சகோதரிகளாக இல்லாமல் மிக நெருங்கிய தோழிகள் போல வாழ்ந்தோம் என்பதே உண்மை. லலிதாவுக்கு 'வாம்ப்' கேரக்டர்கள் அமைந்தன. ராகினி பேசிக்காக ஒரு கட்டிப் பெண். ஆனால் எனக்கு அமைந்ததெல்லாம் ஒரு டிபிகல் குடும் பத்தலைவி, சகோதரி ரோல்கள்தான். அந்த மாதிரி ரோல்களா? பத்மினியைக் கூப்பிடு என்பார்கள். நான் நடிக்கிறேன் என்பதற்காக, கேரக்டரை அந்த பாணியில் உருவாக்கியதும் உண்டு."

***"இன்றைய தமிழ் சினிமா உலகம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"***

"நாங்கள் அந்தக் காலத்தில் ஸ்டுடியோவுக்குப் போவதை, கோவிலுக்குப் போவதைப் போல, ரொம்ப புனிதமான விஷயமாகக் கருதினோம். இன்று அதுபோன்ற மனோபாவம் இல்லையோ என்று நினைக்கிறேன். அன்று, நேரடியாக வசனமும் பதிவாகி விடும். இன்று டப்பிங். நடிக்கிறபோது, என்ன உணர்ச்சி அவசியமோ, அதையே மறுபடியும் உருவாக்கிக் கொண்டு, டப்பிங் பேசுகிற வேலை ரொம்ப சிரமமாய் இருக்கிறது.

***"இன்றைய இளம் நடிகர், நடிகையர் உங்கள் தலைமுறையினரைப் போல, நீண்ட காலம் சினிமாவில் நிலைக்க முடியாமல் போவதற்கு என்ன காரணம்?"***

"இன்றைக்கும் ரேவதி, ராதிகா, ஊர்வசி, ரோகிணி என்று இருக்கத்தான் இருக்கிறார்கள். ஆனால் வருகிற புதுமுகங்கள் பலர் தன் தனித்திறமை இது என்று காட்டி, மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது இல்லை. அது அவர்களால் இயலவில்லை என்றால் கூட தப்பில்லை. புதுமுகங்கள் எல்லாம் ஒன்று போலவே இருக்கிறார்கள்; ஒரே மாதிரியே நடிக்கிறார்கள். அதுதான் வந்த வேகத்திலேயே மறைந்து விடுகிறார்கள்."

***"திரைப்பட வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை இரண்டுமே வெற்றிகரமாய் அமையப் பெற்ற பெண்கள் வெகு சிலர்தான். உங்களது இரு தரப்பு வெற்றிக்கான ரகசியம் என்ன?"***

"அதற்கு முதற் காரணம் எங்களது கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறை என்று சொல்லலாம். குழந்தை, அம்மாவின் அன்புக்கு ஏங்காத அளவுக்கு கவனித்துக் கொள்ள வீட்டில் நிறையப் பேர் இருந்தனர். அடுத்தது விட்டுக் கொடுத்து, அனுசரித்துப் போகும் போக்கும் ஒரு காரணம்."

சந்திப்பு : **மௌலஷ்மி**
வண்ணப்படங்கள் : **யோகா**

# பாலம்

●● 'ஓ.ஹென்றி' எழுதிய சிறுகதைகள் தொகுப்பு, ஆங்கிலத்திலோ தமிழ் மொழி பெயர்ப்பிலோ தேவைப்படுகிறது. விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்.

– அரிச்சந்திரன்,
20/160, C.P.W.D. Quarters,
இந்திரா நகர், சென்னை – 600 020.

●● வாதூல மகரிஷியைப் பற்றி எந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை. அறிந்தவர்கள் இதுபற்றி எழுதினால் என் ஆராய்ச்சிக்கு உதவும்.

– டாக்டர். ஆர். வேங்கடராமன்,
அ-ஆ. சுகாதார நிலையம்,
நத்தக்காடையூர் – 638 108.

●● ஐ.ஐ.டி.யில் இன்ஜினியரிங் படித்து முடித்த என்னுடைய மெகானிகல் இன்ஜினியரிங் புத்தகங்கள் விலைக்கு உள்ளன.

– எஸ். ஆர். சௌந்தரராமன்,
P.G.T. Qr. 7, Kendriya Vidyalaya,
MEG & Center,
Bangalore - 560 042.

●● எம்.எஸ்.ஜி. வாசித்துள்ள நளினகாந்தி, சுபபந்துவராளி இசைத்தட்டுக்கள் வைத்திருப்போர் ஒலிநாடாவில் பிரதி எடுத்துக் கொள்ள உதவினால், செலவுகளை ஏற்கிறேன்.

– ஆர். ராமாமிருதம்,
52, அகத்தியர் தெரு,
ராமாபுரம், அம்பத்தூர்,
சென்னை – 600 053.

●● ஆன்றோர் பொன் மொழிகள், தன் நம்பிக்கை நூல்கள் ஹிந்தியில் கிடைக்குமிடம் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்.

– ஆர். ரங்கராஜன்,
டி.வி.எஸ். அண்டு சன்ஸ்,
211, தெற்கு வெளிவீதி, மதுரை – 625 001.

●● சுயமாக கைவினைக் கலையை ஒரு மாதத்தில் கற்றுக் கொண்டு, வீட்டிலிருந்தபடியே மாதம் ரூ 1000க்கு மேல் சம்பாதிக்கலாம். ரூ. 2 ஸ்டாம்புடன் எழுதவும்.

– பிட்டூரார் மணி,
25, கம்பர் நகர்; 2 வது தெரு, 10 வது செக்டர், கலைஞர் நகர், சென்னை – 78.



●● SIV Worker's Seek CM's intervention என்ற தலைப்பிட்டு, 23.5.97-ல் பிஸினஸ் லைன் பத்திரிகையில் வெளியான செய்தியின் ஜெராக்ஸ் அனுப்பி வைத்தால் நன்றி.

– ஜி. கதிரேசன்,
பார்வதி நிலையம்,
லெனின் வீதி, சிறுமுகை – 641 302.

●● 1961 – 62ல் சென்னை வேதகிரி முதலியாரிடம் நான் குத்துச்சண்டை பயின்றபோது, என்னுடன் பழகிய பங்காரு என்ற மாணவரை மீண்டும் சந்திக்க ஆசை.

– இரா. கல்யாணசுந்தரம்,
7, நடுத்தெரு, அனுப்பானடி,
மதுரை – 625 009.

●● 'ஸ்ரீமதி கண்டக்டர்' என்ற நகைச்சுவைக் கட்டுரைகள் அடங்கிய நூல் – பழசு அல்லது புதுசு – கிடைக்குமா?

– த. செங்கதிர்,
83, முதல் தெருக் கிளை,
அறிவியலார் குடியிருப்பு,
கல்பாக்கம் – 603 102.

●● ஆட்டோ ரிக்ஷா வைத்து தொழில் செய்ய விரும்புவோருக்கு இலவச ஆலோசனை தரத் தயாராக உள்ளேன். தபால் உறையுடன் எழுதவும்.

– கே. அவிநாசியப்பன்,
14, கட்டேரித் தேவர் தெரு,
சூலூர் – 641 402.

●● என் தகப்பனார் ஆரல்வாய் மொழி கதர் கடை சண்முகப்பிள்ளை, ஒரு சுதந்தரப் போராட்டத் தியாகி, அவருடன் அந் நாளில் சிறையில் இருந்தவர்கள், அல்லது அவரைப் பற்றி நன்கு தெரிந்தவர்கள், உடனே தொடர்பு கொள்ளவும். என் வயதான தாயாருக்கு தியாகி மனைவிக்கான உதவித் தொகை பெற உதவும். நான் பார்வையற்றவன்; எனவே அலைய முடியாது.

– எஸ். கோமதி நாதன்,
மே/பா. ஜி. ராமானுஜம்,
D-107 F, சங்கீதா காலனி,
அண்ணா மெயின் ரோடு,
கே. கே. நகர், சென்னை – 78.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது – ஆர்.)

*விட்டுக் கொடுப்பதில் முதலில் நில். பிறகு உன்னை யாரும் விட்டுக் கொடுக்க மாட்டார்கள்!*

# ஒன்றுக்கொன்று

எஸ். ஐ. ஆ

ஒத்துவராத இரண்டு பெரிய யூனியன்கள் ஒன்றாக இயங்கும் நிறுவனத்தில் ஒரு செக்ஷன் சூபரின்டென்டென்ட்டாக வேலை பார்ப்பதுதான் வாழ்க்கையில் மிகப் பெரிய சோகம் என்ற முடிவுக்கு வந்தான் ரங்கராஜன். அதுவும் ஒரு யூனியன் தலைவன் அவனது செக்ஷனிலேயே குப்பை கொட்டுகிற சோகம். எடுத்ததற்கெல்லாம் எதிர்ப் பேச்சு. தொட்டதற்கெல்லாம் கோபம். முணுக்கென்றால் வாக்-அவுட். கடல் மாதிரி பெரிய நிறுவனம். மேலே இருக்கிற 'ஆண்டவர்'களுக்கு இதெல்லாம் ஒரு பொருட்டே அல்ல. வேலை, வேலை நடந்தாக வேண்டும். பிரச்னைகள், வருவதற்குத்தான் இருக்கின்றன. சமாளிப்பதற்குத்தானே உனக்குச் சம்பளம் தருகிறோம்? போ. போய் மோது. வெல், அல்லது மடி. முடியலையா? கால் கடுதாசி எழுதிக் கொடுத்து விட்டுப் போ என்பார்கள்.

இன்றைக்கு வந்திருக்கும் பிரச்னை சாதாரணமானதல்ல என்று ரங்கராஜனுக்குத் தோன்றியது. ஏதோ ஒன்று விபரீதமாக நடக்கப் போகிறது என்று உள்ளுணர்வு சொன்னது.

அது ஒரு பன்னாட்டு கார் தயாரிக்கும் நிறுவனம். ரங்கராஜன் அதில் அசெம்ப்ளி பிரிவின் பொறுப்பாளன். ஒரு நாளைக்குப் பதினைந்து கார்கள் - அசெம்பிள் ஆக வேண்டும். டயராகவும் இன்ஜினாகவும், பாடியாகவும், சீட்டாகவும், டாப்பாகவும் தனித்தனியே குவிந்து கிடக்கிற பொருட்கள் இணைந்து உயிர் பெறுவதற்கு சராசரியாக நாற்பது பேர் வியர்வை வேண்டியிருக்கிறது.

இன்றைக்கு அது நடக்காது. உன்னால் ஆனதைப் பார் என்கிறான் யூனியன் லீடர் பலராமன். அடடே இதோ ஒரு வம்பு - பொழுது போக்கு என்று எதிர் யூனியன் வேடிக்கை பார்க்கிறது. அவர்களை மட்டும் வைத்து வேலையைத் தொடங்கலாம்தான். ஆனால் பிரச்னை, பூதமாகிவிட அது ஒன்று போதும். மேலும் இது எக்ஸ்போர்ட் ஆர்டர், ஒரு சிறு பிரச்னையால், சின்ன ஒரு தவறு வந்து விட்டாலும் பிடித்துக் கிழித்து விடுவார்கள்.

செக்ஷனில் நடக்கிற சில்லறைப் பிரச்னையை மேலே கொண்டு வராதே என்கிறது நிர்வாகம். அது சின்ன பிரச்னை? போனஸ், இங்கிரிமென்ட் கேட்டு ஊழியர்கள் போராடினால்தான் பெரிய பிரச்னையா? மூன்று நாளாக ஒருவர் தினசரி ஒருமணி நேரம் லேட்டாக வந்ததற்காக அரை நாள் லீவ் மார்க் செய்தது தப்பா? அதற்காக இன்று வேலை நடக்காது என்று ஊழியர்கள் மக்கர் செய்தால் அது சின்ன பிரச்னையா? மாலை, அசெம்பிளான கார்களின் எண்ணிக்கை கேட்டீர்களே? அப்போது திருதிருவென விழித்தால் யாரைச் சாபமிடப் போகிறீர்கள்? ரங்கராஜன் பரிதவித்தான்.

யூனியன் லீடர் பலராமனைக் கூப்பிட்டுப் பேசினான்.

"இத பாருங்க சார்! மூணு நாள் அவன் ஒன் அவர் லேட்டா வந்தது எப்படி நியாயம்ங்கறீங்க?"

"அவன் குழந்தைக்கு உடம்பு சரியில்லை சார்! டெய்லி ஆஸ்பத்திரி போக வேண்டி இருந்தது. அங்க லேட் ஆனா இவன் என்ன செய்வான்? கொஞ்சம் மனுஷத்தன்மையோட பேசுங்க."

"இதை அனுமதிச்சா, நாளை தினம் தினம் ஒருத்தன் ஒரு காரணம் சொல்வானே?"

"அது பற்றி எனக்குத் தெரியாது. இவனைப் பழி வாங்கினா எங்க யூனியன் சும்மா இருக்காது."

'பழி வாங்குவது' தவிர வேறு வழியில்லாததால் இன்று வேலை தொடங்கவில்லை - கம்பெனி திறந்து ஒரு மணி நேரம் ஆகிவிட்ட பிறகும்!

"மிஸ்டர் பலராமன்! விஷயம் மேலிடம் போச்சுன்னா விபரீதம் நடக்கலாம். ப்ளீஸ், ட்ரை டு அண்டர்ஸ்டாண்ட் தி சிச்சுவேஷன்."

"போகட்டுமே! என்னதான் ஆகும்னு பார்த்துடறேன்."

"நீங்க இல்லாட்டா வேலை நடக்காதுன்னு நினைக்கறீங்களா?"

"நடத்துங்க பார்க்கலாம்!"

அப்பட்டமான மிரட்டல்! ரங்கராஜன் யோசித்தான். மேலிடத்தில் புகார் சொல்வதாலோ, வேறு ஆட்கள் கொண்டு வேலை நடத்துவதாலோ பிரச்னை அதிகமாகுமே தவிர தீராது! இப்படியே விட்டாலும் நேரம்தான் ஓடும். அவனவன் டீ குடித்துக் கொண்டு அரட்டைக்கு ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறான். இன்னும் விஷயம் வெளியே போகவில்லை. இன்னும் அரைமணியில் தொழிற்சாலை முழுவதும் பரவிவிடும் அபாயம் இருக்கிறது. பிறகு விஷயம் எல்லை மீறி விடும்.

திடீரென்று எம்.டி. வந்து கொண்டிருப்பதைப் பார்த்தான் ரங்கராஜன். அவன் பதற்றம் அதிகரித்தது. லைனில் இன்னும் முதல் கார் கூட வந்து நிற்கவில்லை. பலராமனைப் பார்த்தான். அவனும் சற்றே பரபரப்பு அடைந்தவனாக இருப்பது போல்தான் தெரிந்தது. அவனது வாதத்தில் நியாயமில்லை என்று அவனுக்குத் தெரிந்திருந்தது. ஆனாலும் யூனியன் லீடரல்லவா? இறங்கி வருதல் எப்படி சாத்தியம்?

"என்ன ரங்கராஜன், வேலை தொடங்கலை? நாளை நைட்டு கப்பல்ல ஏறணும் தெரியுமில்லை?"

அவன் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவனாக, "ஸாரி சார்! என்னால்தான் லேட். வர தாமதமாயிட்டது. அதான், இன்ஸ்ட்ரக்ஷன் தர ஆளில்லாமல் வொர்க்கர்ஸ் வெயிட் பண்ணிட்டிருக்காங்க."

அடுத்த சில நிமிடங்கள் அங்கே ஆயிரம் வாலா வெடித்தது.

"உனக்குப் பொறுப்பில்லை? அறிவில்லை? கம்பெனியின் வேகம் என்ன தெரியுமா? நேரத்தின் முக்கியம் பற்றித் தெரியுமா? ஒன் அவர் லேட் என்றால் பாதிப்பு என்ன என்று தெரியுமா? யூஸ்லெஸ் ஃபெலோ. இடியட், இர்ரெஸ்பான்ஸிபிள் இடியட். நீயே இப்படி இருந்தால் வொர்க்கர்ஸ் எப்படி இருப்பார்கள்? உனக்கு மெமோ வருகிறது பார்!"

உரக்கக் கத்திவிட்டு எம்.டி. திரும்பிப் போனார். அவன் முகத்தைத் துடைத்துக் கொண்டு திரும்பிய போது பலராமன் எதிரே நின்று கொண்டிருந்தான். அவன் முகம் இளகியிருந்தது. ஏதேதோ பேச வேண்டும் போலத் தவித்திருந்தான் போலும்! எதுவும் பேசாமல் "ஸாரி சார்!" என்றான் தாழ்ந்த குரலில்.

அவன் திரும்பிப் பார்ப்பதற்காகவே காத்திருந்தாற் போல வேகமாக வேலையில் இறங்கினார்கள் அவனது யூனியன் ஆட்கள்!

ரங்கராஜனுக்கு இப்போது வரப் போகிற மெமோ பெரிய கவலை அளிக்கவில்லை! மாறாக தன் செக்ஷனில் இனி எப்போதுமே பிரச்னை வராது என்பது புரிந்து போயிற்று!

## அரசால் வந்த பிரச்னை!

***ச***மஸ்கிருதத்திலுள்ள தொன்மையான ஓலைச் சுவடிகள், அச்சுப் பிரதிகள் ஆகியவற்றைப் பார்க்க வேண்டுமா? யக்ஞங்களுக்குரிய வழிமுறைகளைக் கூறும் 'மீமாம்சம்' பாதுகாக்கப்பட்டு வரும் உலகிலேயே ஒரே இடம் எது தெரியுமா? சென்னையிலுள்ள 'குப்புசாமி சாஸ்திரி ஆராய்ச்சி நிலையம்'தான்!

1944–ல் ஆரம்பிக்கப்பட்ட இது, ஏ.எல். லக்ஷ்மணசாமி முதலியார் போன்ற பல கல்வியாளர்களால் பேணிப் பாதுகாக்கப்பட்டு வந்தது. பிறகு 1984–ல் மத்திய அரசின் மனித வள மேம்பாட்டுத் துறையின் கீழ் கொண்டு வரப்பட்டது. மெல்ல மெல்லப் பிடித்தது சனியன் என்கிற மாதிரி ஆகிவிட்டது.




"அரசாங்கம் நிதியுதவி செய்ய ஆரம்பித்ததால் நிர்வாகத்தில் அதன் தலையீடும் ஆரம்பித்தது. சமஸ்கிருதத்துக்குச் சம்பந்தமேயில்லாத ஒருவரை நிர்வாகக் குழு தலைவராக்கியது அரசு. விளைவு? எல்லாவற்றிலும் நிர்வாகக் குழுவுக்கும் நிலைய இயக்குனருக்கும் ஒத்துப் போகாத நிலை. வேறு வழியின்றி அரசிடமிருந்து விலகிக் கொள்ள வேண்டிய நிலை. சுதந்தரம் கிடைத்து விட்டாலும் நிலையத்தை நடத்திச் செல்ல நிதி வேண்டாமா? அதற்குத்தான் பொது மக்களிடமிருந்து சுமார் 30,00,000 ரூபாயை நிலையம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது!" என்கிறார்கள் நிலையத்திலுள்ளவர்கள்.

– சீதா மோகன்

# அனாதை வருமானத்தை உருவாக்க வேண்டாம்!

இந்த வாரம், வாசகர்களுக்கு ஒரு 'அட்வைஸ்' கொடுக்க விரும்புகிறேன். உங்கள் பெயரில் வைத்துள்ள பங்குகளை கூடிய சீக்கிரத்தில் உங்கள் மனைவி/கணவன் அல்லது வேறு நபருடன் இணைத்து உரிமைப்படுத்திக் கொள்வது நல்லது. இனி வாங்கும் பங்குகளும் போடும் வைப்பு நிதிகளும் கூட 'ஜாயின்ட்' உரிமையாகவே இருக்கட்டும்.

நான் ஏதோ அபசகுனமாகப் பேசுவதாக நினைக்கக் கூடாது. நாட்டு நடப்பை ஆதாரமாகக் கொண்டு, நல்லெண்ணத்துடன்தான் சொல்கிறேன்.

பெரும்பாலான பங்குகளுக்கு ஒற்றை உரிமையாளர்களே உள்ளனர். இவர்கள் காலமாகி விட்டால், வாரிசுகள் அந்தப் பங்குகளைத் தங்கள் பெயருக்கு மாற்றிக் கொள்ளும் சிரமங்களையெல்லாம் மேற்கொள்ளுவதில்லை. டிவிடண்ட் தொகைக்கான காசோலை தொடர்ந்து, காலமான உரிமையாளரின் பெயருக்கே வழங்கப்பட, அதைக் காசாக்காமல் விட்டு விடுகிறார்கள் வாரிசுகள். இவ்வாறு காசாக்கப்படாத செக்குகளை, சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் ஏழு ஆண்டுகளுக்கு நிலுவையில் வைத்திருந்து பிறகு அரசாங்கத்திடம் தொகையைச் செலுத்தி விடும்!

இந்த முறையில், கோடிக்கணக்கான ரூபாய் அரசுக்கு ஆண்டுதோறும் கிடைக்கிறது!

அதனால்தான் சொல்கிறேன், பங்குகளை ஜாயின்ட் உரிமையாக வாங்குங்கள் என்று– உரிமையாளர்களுள் ஒருவர் துரதிர்ஷ்டவசமாகக் காலமாகி விட்டால் மீண்டும் அந்தப் பங்குகளை வேறொருவருடன் ஜாயின்ட் உரிமையாக்கிப் பதிவுசெய்து வைத்துக் கொள்வதே நல்லது.

இப்படிச் செய்யத் தவறினால் நமது குடும்பத்துக்கு வரவேண்டிய தொகை அநாதை வருமானமாகி அரசாங்கத்தைச் சென்று அடையும்.

சரி, அரசு அந்த 'அநாதை வருமானத்தை' என்ன செய்கிறது? ரொம்ப சிம்பிள்! செலவுக்கு எடுத்துக் கொள்கிறது!



சமீப காலமாகத்தான் ஒரு சிறந்த யோசனை பிறந்திருக்கிறது : இப்படிச் சேகரமாகும் 'அநாதை வருமானத்தை' பங்குகள் வாங்குவது குறித்து பொதுமக்களுக்கு விளக்கவும் பங்குதாரர்கள்/முதலீட்டாளர்களைப் பாதுகாக்கத் தேவையான நடவடிக்கைகளை எடுக்கவும் பயன்படுத்துவது என்று முடிவாகியுள்ளது.



## சூயிங்கத் துக்குத் தடை!

போலீசார் கடமையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது 'சூயிங்கம்' மென்று கொண்டிருக்கக் கூடாது என்று பிரிட்டன் உத்தரவிட்டுள்ளது. 'சூயிங்கம்' மென்று கொண்டிருந்தால் அவர்கள் கடமையாற்றும் போது சுறு சுறுப்பு குறைந்து போகும் என்று கருதப்படுவதே இதற்குக் காரணம்.

**– 'வியப்பூட்டும் செய்திகள்' நூலிலிருந்து : வயலூரர் ஆர். பார்த்திபன்**



● ரீபோ(க்) காலணி நிறுவனம், 1996-ம் ஆண்டு பெண்களுக்கென்று வடிவமைத்த 18,000 ஜோடி காலணிகளை விற்பனை நிலையங்களிலிருந்து மீட்டு தொழிற்சாலைக்குத் திரும்பக் கொண்டு போய்விட்டது. இதற்குக் காரணம், அந்தச் செருப்புக்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயர்தான்! 'இன்குபஸ்' (Incubus) என்ற பெயருக்கு என்ன அர்த்தம் என்று தயாரிப்பாளர்கள் தெரிந்து கொள்ளவில்லை. அந்த வார்த்தை ஒரு அசுரனுடைய பெயர். அவன் தூங்குகிறவர்களை ஆட்கொண்டு ஆட்டுவிப்பான் என்பது புராணக் கதை. துர் சொப்பனங்களுக்கு அதனால் அந்தப் பெயர் ஏற்பட்டது!

**நன்றி : பிசினஸ் இண்டியா**
**தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்**

Investor Education and Protection Fund என்றொரு நிதியைத் தொடங்கவுள்ளது.

இந்த நற்செய்தியை வரவேற்கிறோம்.

இன்னொரு சீர்திருத்தத்தையும் கொண்டு வர அரசு முனைப்பு காட்ட வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவூட்டுகிறேன் : கம்பெனிகளில் பங்குகள் வைத்துள்ளவர்களுக்கு, அந்தந்த நிறுவனங்களின் வருடாந்திர பொதுக் கூட்டங்களில் பங்கேற்கவும் அவற்றின் நிர்வாகம் தொடர்பான முக்கியமான தீர்மானங்களின் பேரில் வாக்களிக்கவும் உரிமை உண்டு.

இந்த உரிமையைப் பெரும்பாலான பங்குதாரர்கள் பயன்படுத்துவதில்லை. நாடு முழுவதிலும் சிதறிக் கிடக்கும் பங்குதாரர்கள் டெல்லி அல்லது பம்பாய், அல்லது கல்கத்தாவுக்குப் போய் வருடாந்திர பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்வதென்பது நடைமுறை சாத்தியமல்ல. தங்கள் சார்பில் வாக்களிக்க ஒரு பிரதிநிதியை அவர்கள் நியமிக்கவும் உரிமை உண்டு. ஆனால் இந்த உரிமையையும் பெரும்பாலான பங்குதாரர்கள் பயன்படுத்துவதில்லை. பெரிய நிறுவனங்களின் நிர்வாகம் குறித்த சூட்சுமங்களும் நடைமுறைகளும் சராசரி மக்களான அவர்களுக்குத் தெரியாமலிருப்பதும் ஒரு காரணம்.

பங்குதாரர்கள் விரும்பினால், இந்த வாக்களிக்கும் உரிமைக்குப் பதிலாக கூடுதல் டிவிடண்ட் பெற்றுக் கொள்ள வகை செய்யும் ஒரு சட்டத் திருத்தம் கொண்டு வர திட்டமிட்டார்கள். (Issue of Shares with non-voting Rights)

ஆனால், ஒரே கம்பெனியின் ஷேர்களுக்கு இருவிதமாக விலை நிர்ணயிக்கப்பட இது வழிவகுக்கும் என்று பங்கு மார்க்கெட் வட்டாரங்கள் இதை ஆட்சேபித்தன.

இந்த ஆட்சேபணையில் வலு கிடையாது என்பது சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் தெரியும்.

எனவே, விரைவில் கம்பெனி சட்டத்தைத் திருத்தி வாக்களிக்கும் உரிமைக்கு ஈடாக கூடுதல் டிவிடண்ட் தரப்பட வழிசெய்யலாம்.

**- வி. கோபாலன்**

COTTON, FANCY & POONAM SAREES COTTON, FANCY & POONAM SAREES COTTON, FANCY & POONAM SAREES

NIGHTIES & PETTICOATS NIGHTIES & PETTICOATS NIGHTIES & PETTICOATS

CHURIDHARS CHURIDHARS CHURIDHARS CHURIDHARS CHURIDHARS CHURIDHARS CHURIDHARS



## AALURI CELEBRATES
## GRAND 1ST YEAR
## ANNIVERSARY SALE

**10% Discount From Sept. 1st to Sept 10th.**

Shop open on Sundays also till Deepavali

## AALURI SAREES

Wholesale & Retail

*4/38, R.K.Mutt Road, Luz Bazaar,*
*Mylapore, Chennai - 600 004*
*Phone : 4935791*

READYMADE BLOUSES READYMADE BLOUSES READYMADE BLOUSES READYMADE BLOUSES READYMADE BLOUSES

# கேசவர்த்தினி ...
# நீண்ட அடர்த்தியான கூந்தலுக்கான பரம்பரை இரகசியம்



ஊட்டமளிக்கும் கேசவர்த்தினி கூந்தல் தைலம்.
நீங்கள் நாள்தோறும் உபயோகிக்கும் தேங்காய்
எண்ணெயில் சிறிதளவு கேசவர்த்தினியை கலந்து
தேய்த்தால், உங்கள் கூந்தல் நீண்டு, ஒளி கொண்டு
திகழுவதைக் காண்பீர்கள். மேலும் உங்கள் கூந்தல்
அடர்த்தியாகவும், கருமையாகவும் காணப்படும்.
இன்றே ஒரு பாட்டில் கேசவர்த்தினியை
வாங்குங்கள். ஆறே மாதங்களில் அழகு மிளிர்ந்த
கூந்தலை பெறுங்கள்.




# கேசவர்த்தினி

கூந்தல் தைலம்.

# எமக்கருள் நல்குவாயே!



பெண்ணொரு பாகம் கொண்ட
பிறைமுடிப் பெம்மான் என்னும்,
கண்ணுதற் கடவு ளீன்ற
கவினுறு ஞானச் செல்வன்.

கண்ணனின் மருக னான
கணபதி என்னும் பேரை
எண்ணியே செயல்கள் செய்வார்
எல்லாமே இனிதாய் முடிப்பர்.

செப்புமோர் தெய்வம் கோடி
செகத்திலே இருந்திட் டாலும்
ஒப்புமை காட்ட ஒண்ணா,
உருவமை தெய்வம் நீயே.

முப்புரம் எரித்தோன் தனக்கும்
முழுமுதற் தெய்வ மானாய்
இப்பொழு திங்கே வந்து
எமக்கருள் நல்கு வாயே!

— கவிஞர் இராம. வேம்பு

## படித்ததில் பிடித்தது!

# மலர்கள் மூன்று; மணம் ஒன்று!

சுதந்தரப் பொன்விழாவைக் கொடியேற்றி, ஆரஞ்சுமிட்டாய் சாப்பிட்டு, மா துஜே சலாம் கேட்டு, டீ.வியில் ரம்பா பேட்டி பார்த்துக் கொண்டாடியவர்கள், உடன் இன்னொன்றையும் சேர்த்துக் கொண்டிருக்க வேண்டும். பற்பசையோ, பிளேடோ இலவச இணைப்பாகத் தராமல் கனமாக (பக்கத்திலும் விஷயத்திலும்) வெளி வந்திருக்கும் தினமணி, ஜீவா முழக்கம், விஜயபாரதம் பொன்விழா மலர்கள். மூன்றில், தினமணி தவிர, பிற இரண்டும் முறையே கம்யூனிஸ, இந்துயிஸக் கட்சிப் பத்திரிகைகளின் தயாரிப்பு. விஜய பாரதம் மலரில் கொஞ்சம் மதவாசனை தூக்கலாக இருப்பினும் தேசியம் via இந்துயிஸம் என்கிற ரூட் படு தெளிவாக இருக்கிறது. 'இந்துத்துவா உணர்வைத் தட்டியெழுப்புங்கள்' என்று அறைகூவல் விடும் முரளி மனோகர் ஜோஷியின் பேட்டி, மலரில் முக்கியமானது. ராஜாஜி தொடங்கி, சுபாஷ் சந்திரபோஸ் வரைக்கும் சகலருக்கும் தேசிய முகத்தில் ஆன்மீக விபூதி பூசி அதையே ஹைலைட் பண்ணுகிறார் ஜோஷி. படிக்க சுவாரஸ்யமாக இருக்கிறது.

விஜயபாரத மலரில் பல கட்டுரைகள் பெரும்பாலும் முன்பே பழைய இதழ்களில், நூல்களில் பிரசுரமானவை. சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமாகத் தேர்ந்தெடுத்துத் தொகுத்திருப்பதை, ரசிக்க முடிகிறது. உதாரணமாக 'இந்தியா அடிமையானது ஏன்?' என்று சுதந்தர ஹிந்துஸ்தான் பத்திரிகை ஆசிரியருக்கு டால்ஸ்டாய் எழுதிய கடிதத்தை மறு பிரசுரித்திருப்பதைச் சொல்லலாம். ஆன்மீக விழிப்புணர்வு மங்கிப்போனதே காரணம் என்று படிப்படியாக உதாரணங்களுடன் டால்ஸ்டாய் தம் ஆராய்ச்சிக் கண்ணோட்டத்தை வளர்த்துக் கொண்டே போய் ஒரு தீர்மானத்துக்கு வருவது பிரமிப்பூட்டும் சுவாரஸ்யம்.

இந்த மலரின் முக்கியமான விசேஷம், பலரும் அறிந்திராத பல சு.போ. வீரர்களை அறிமுகப்படுத்தி அஞ்சலி செய்திருப்பது. ஒரே

குறை- சில கட்டுரைகள் முழுமையாகத் தகவல் தராதது. குறிப்பாக 1806 வேலூர் சிப்பாய்ப் புரட்சி சம்பவம் பற்றி. புரட்சிக் கனவு கண்ணீரில் முடிந்த சோகத்தைச் சொல்லும் போது, சிப்பாய்களின் பொன்னாசையைக் குறிப்பாகவேனும் உணர்த்தியிருக்க வேண்டும். அது சற்றே வெளிச்சம் குறைவான வரலாறு.




கம்யூனிஸ்ட் பத்திரிகை ஜீவா முழக்கம், தன் முழக்கத்தைக் குறைத்துக் கொண்டு தேசிய முழக்கத்துக்கு மேடை போட்டிருப்பது கவனிக்கப்பட வேண்டிய ஒன்று. நானூறு பக்க மலரில் நிறைய புதிய செய்திகள். விஷயமும் வீரியமும் மிக்க ஜெயகாந்தன் பேட்டியை எடுத்து யாராவது மறு பிரசுரம் செய்யலாம். வெகு உபயோகம்.

பகத்சிங் தப்பிக்க, அவரது மனைவியாக நடித்து உதவிய துர்காதேவி, கல்கத்தாவில் அவரை வரவேற்கும் பக்குவம் மிக்க அவரது கணவர் பகவதிசரண், பகத்சிங் சிறையில் பட்ட கஷ்டங்களைத் தாமும் அனுபவித்துப் பார்க்க ஆசைப்பட்டு, விலங்கிட்டுக் கொண்டு, ஆணியடித்த செருப்பை அணிந்து நடந்து பார்த்த பாலதண்டாயுதம் என்று பல உயர்மனிதர்களை எழுத்துச் சித்திரமாய் வரைந்திருக்கிறார்கள்.

ஜனரஞ்சகம் கருதி சேர்க்கப்பட்டுள்ள சில கவிதைகளில் பல மிக சாதாரணம். ஒரு சிறு கதை கூட இருக்கிறது. இருப்பினும் மலரின் பெருமை கட்டுரைகளால்தான் முழுமை பெறுகிறது.

தினமணி மலரைப் பொறுத்த வரைக்கும் அதன் மிகப்பெரிய பிளஸ் பாயின்ட், அதன் முன்னாள் ஆசிரியரும் சுதந்தரப் போராட்ட வீருமான ஏ.என். சிவராமன் எழுதியிருக்கும் மிக நீண்ட கட்டுரை. தொண்ணூறு வயதில் இத்தனை எளிமையும் துல்லியமும் தகவல் பிழை இல்லாமலும் இந்திய சுதந்தர வரலாற்றை- பல வால்யூம்களில் வரவேண்டிய சங்கதியை சுமார் ஐம்பது பக்கங்களில் அடக்கியிருக்கிற சாமர்த்தியம் வேறு யாருக்கேனும் சாத்தியமா, தெரியவில்லை. அப்படியே எடுத்து புக்லெட்டாகப் போட்டுப் பள்ளிக் குழந்தைகளுக்கு அரசாங்கம் இலவசமாக விநியோகித்தால் ரொம்ப உபயோகம்.

நேதாஜியின் ஐ.என்.ஏ.வில் பணியாற்றிய அமீர் ஹம்சாவின் மலரும் நினைவு, சதாசிவம், சிட்டியின் கட்டுரைகள், சத்தியமூர்த்தி பற்றி காமராஜ் எழுதிய பழைய கட்டுரை எல்லாம் தகவல் விரும்பிகளுக்குத் தணியாத சுவாரஸ்யம் தருபவை.







ஜீவா முழக்கம் மலர்– ரூ. 50/- (2, 50வது தெரு/அசோக் நகர்/சென்னை – 83.)

தினமணி மலர்– ரூ. 25/- (எக்ஸ்பிரஸ் எஸ்டேட்/ சென்னை – 2.)

விஜயபாரதம் மலர்– ரூ. 20/- (3, எம்.வி.தெரு/ பஞ்சவடி/சேத்துப்பட்டு/ சென்னை - 31.)

— பா. ராகவன்

# மோதல்:

**தமிழ்நாட்டில், 'தமிழ் மாநில காங்கிரஸ் கட்சி பொறுப்பான எதிர்க்கட்சியாகச் செயல்படவில்லை' என்று வாதிடுகிறார் தி.மு.க.வைச் சேர்ந்த பச்சையப்பன். 'பொறுப்புடன்தான் செயல்படுகிறது' என்று வாதிடுகிறார் த.மா.கா.வைச் சேர்ந்த சாந்தகுமார்....**

***பச்சையப்பன் (தி.மு.க.)*** : போன ஆட்சியில் எதிர்க்கட்சியான காங்கிரஸில், ஜெ. காங்கிரஸ் என்று அழைக்கப்படக்கூடிய அளவில் ஒரு சில எம்.எல்.ஏக்கள் ஆளுங்கட்சியை ஆதரித்தார்கள். அதைப் போல இருக்க வேண்டும் என்று இப்போதைய ஆளும் கட்சி எதிர்பார்க்கவில்லை. அதற்காக, கண்ணை மூடிக் கொண்டு, சகட்டுமேனிக்கு விமர்சனம் செய்வது கூடாதல்லவா?

***சாந்தகுமார் (த.மா.கா.)*** : தேர்தலில் கூட்டணியாகப் போட்டியிட்டது உண்மைதான் நீங்களே பெரும்பான்மை இடங்களைப் பெற்று ஆட்சி அமைத்தீர்கள். கூட்டணியாகப் போட்டியிட்டோம் என்பதால், அமைச்சரவையில் இடம் வேண்டும் என்றா ஆசைப்பட்டோம்? இல்லையே! எதிர்க்கட்சியாகவே அமர்ந்தோம். எதிர்க்கட்சிக்குரிய பணியைத்தான் நாங்கள் செய்து கொண்டிருக்கிறோம்.

***பச்சையப்பன்*** : எதிர்க்கட்சிக்குரிய பணி என்பது என்ன? இஷ்டப்படி விமர்சிப்பதுதானா? சட்டசபையின் எதிர்க்கட்சித் தலைவருக்கென்று ஒரு கௌரவம் இருக்கிறதல்லவா? அதைக் காப்பாற்றிக் கொள்ளும்படியாகவா எதிர்க்கட்சித் தலைவரான சோ. பாலகிருஷ்ணன் நடந்து கொள்ளுகிறார்?

***சாந்தகுமார்*** : ஏன்? இப்போது கூட தனது தொகுதியில் நிலவும் கடுமையான தண்ணீர் பஞ்சத்துக்காக, காந்திய வழியில், உண்ணாவிரதம் இருந்தாரே! அது பொறுப்பான அணுகுமுறையில்லையா?

***பச்சையப்பன்*** : தொகுதி முழுமைக்குமான - ஏன் - எல்லா தொகுதிகளிலுமே நிலவுகிற பிரச்னைதான் தண்ணீர் பிரச்னை. அதைப் பற்றி சட்ட சபையில் பேசி, புதிய குடிநீர்த் திட்டங்களைச் செயல்படுத்த நடவடிக்கை எடுக்கச் செய்வதுதானே சரியான அணுகுமுறையாக இருக்க முடியும். இதுபோல தடாலடியாய், திடீரென்று சாகும் வரை உண்ணாவிரதம் என்று இறங்கினால் என்ன அர்த்தம்?

***சாந்தகுமார்*** : தடாலடி நடவடிக்கை என்கிறீர்களே! அவரென்ன சாலை மறியல் செய்தாரா? பஸ்களை அடித்து நொறுக்கினாரா? உண்ணாவிரதம்தானே இருந்தார்?

***பச்சையப்பன்*** : இது



• சாந்தகுமார்

மட்டும்தான் என்று இல்லை. சுதந்தரப் போராட்டத் தியாகிகளை இந்த அரசு மதிக்கவில்லை என்று சொல்கிறார். டெல்லிக்குப் பெரிய தியாகிகள் குழுவையே அனுப்பி கௌரவித்தவரல்லவா கலைஞர்? டெல்லி சென்று வந்த தியாகிகள் கலைஞரை வாயாரப் புகழ்ந்திருக்கிறார்களே! பெரியவர் செங்கல்வராயன் கலைஞரைப் பாராட்டியிருப்பதை சோ. பாலகிருஷ்ணன் தவிர எல்லோருமே அறிவார்கள்.

***சாந்தகுமார்*** : இது சுதந்தரப் பொன் விழா ஆண்டு. அதனால்தான் இந்த திடீர் கரிசனம்.

***பச்சையப்பன்*** : த.மா.கா. வைச் சேர்ந்த சீனியர் எம்.எல்.ஏ வான பொன்னம்மாள்

**— தி.மு.க., த.மா.கா. தொண்டர்களின் சூடு பறக்கும் விவாதம்!**

• பச்சையப்பன்



என்னிடம் ஆதாரம் இருக்கிறது என்றார் செல்லக்குமார். இப்போது மானநஷ்ட வழக்கு போடப்பட்டிருக்கிறது. ஆதாரத்துடன் கோர்ட்டுக்குப் போய் பேச வேண்டியது தானே! அதை விட்டு விட்டு 'பொய் கேஸ் போடாதே' என்று கோஷம் ஏன்? மான நஷ்ட வழக்குப் போடக் காரணமே உங்களது பொய்யான குற்றச்சாட்டு தான். அப்புறம் அமைச்சர் போட்டது எப்படி பொய் கேஸ் ஆகும்?

**சாந்தகுமார் :** அவர் சட்டசபையில் சர்க்காரியா கமிஷனை பற்றிப் பேசி விட்டார் என்ற ஆத்திரம் தி.மு.க.வினருக்கு. அதுதான் அங்கே செல்லக்குமாரின் மீதான தாக்குதலுக்குக் காரணம் என்கிறேன் நான்.

**பச்சையப்பன் :** அதை ஏன், மீண்டும் கிளறுகிறீர்கள்? செல்லக்குமாரின் குற்றச் சாட்டுக்குத்தான், சட்டசபையிலேயே, அது சம்பந்தமாய் அப்போது அரசு வழக்கறிஞர் எம்.ஜி. ஆருக்கு எழுதிய கடிதத்தையே காட்டி, முதல்வர் பதிலடி கொடுத்து விட்டாரே!

**சாந்தகுமார் :** நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ஆளுங்கட்சி எது

# த.மா.கா. பொறுப்புள்ள எதிர்க்கட்சிதானா?

கேட்டுக் கொண்டதன் பேரில்தான், தியாகிகளின் வரலாற்றைத் தாம் எழுதப் போவதாக முதல்வர் அறிவித்தார். அது தெரியாமல், தியாகிகளின் வரலாற்றை எழுதுவதற்கு கருணாநிதி யார்? என்று கேட்டது உங்கள் எம்.எல்.ஏ. செல்லக்குமாரின் பொறுப்பற்ற செயலா, இல்லையா?

**சாந்தகுமார் :** அதனால்தான் ஜனநாயக நாட்டில், செல்லக்குமார் சேலம் வந்தபோது, பொறுப்புணர்ச்சியைக் காட்டினீர்களாக்கும்?

**பச்சையப்பன் :** ஏட்டளவிலேயே உள்ள ஒரு திட்டத்தில் கோடிக் கணக்கில் ஊழல் நடந்திருப்பதாகச் செல்லக்குமார் குற்றஞ் சாட்டிய போது, அதை அமைச்சர் மறுத்து, திட்டமே இன்னும் ஆரம்பிக்கப்பட வில்லையே! அப்புறம் எப்படி ஊழல் நடக்கும்? என்று விளக்கம் அளித்தார். அதற்குப் பின்பும், செய்தாலும் கண்டு கொள்ளாமல், அவ்வப்போது நற்சான்றிதழ் வழங்கிக் கொண்டே இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்களா? ஜனநாயகத்தில் அது சாத்தியமில்லை. ஆரம்ப நாட்களில் கலைஞர் நல்லாட்சி வழங்குகிறார் என்ற பொருள்பட தமிழகத்தில் காமராஜர் ஆட்சி நடப்பதாக, இதே பாலகிருஷ்ணன் சொல்லவில்லையா? இப்போது கலைஞர் நல்லாட்சி தொடர வேண்டுமென்று நினைத்தாலும், கீழ்மட்டத்தில் ஊழல் நடந்து கொண்டிருப்பது பரவலாய் மக்களுக்கே தெரிந்திருக்கிறது. அமைச்சர்கள் பலரும் திறம்படச் செயல்படவில்லை என்று முரசொலி மாறனே, கலைஞரை வைத்துக் கொண்டு சொன்னதும், மாறன், என் மனச்சாட்சியாய் பேசுகிறார் என்று கலைஞரே குறிப்பிட்டதும் போதுமே, இன்றைய நாட்டு நடப்பைப் படம் பிடித்துக்

காட்டுவதற்கு!

**பச்சையப்பன்** : ஒரு தடவை, த.மா.கா. எம்.எல்.ஏ.வான அழகிரி, காவிரிப் பிரச்னை பற்றிப் பேசும் போது கர்நாடக அரசிடமிருந்து நமக்குச் சாதகமான பதில் வராவிட்டால், ஐ.மு. அரசுக்கு அளித்து வரும் ஆதரவை வாபஸ் பெற வேண்டும் என்று பேசவில்லையா?

**சாந்தகுமார்** : ஆமாம்! அப்படிப் பேசினார்! ஆனால் தமிழ்நாட்டுக்கு காவிரித் தண்ணீர் கிடைக்க வேண்டும் என்பதற்காக, அப்படிப் பேசினார். ஆனால், தி.மு.க.வுக்கு, ஐக்கிய முன்னணி மற்றும் ஆதரவுக் கட்சிகள் விரும்பிய அளவு முக்கியத்துவம் கொடுக்க வில்லை என்பதற்காகத்தானே, ஐக்கிய முன் னணியிலிருந்து, தி.மு.க. விலகி, வெளியிலிருந்து ஆதரவு தெரிவிக்கும் என்று பூச்சாண்டி காட்டி னார்? அது மட்டும் ரொம்பப் பொறுப்பான 'மூவ்'வா? சொல்லுங்களேன்!

**பச்சையப்பன்** : நீங்கள் கூடத்தான், குஜ் ரால் பதவி ஏற்றவுடன், மந்திரிசபையில் பங் கேற்க மறுத்தீர்கள்.

**சாந்தகுமார்** : ஆமாம்! ஏன் அப்படிச் செய் தோம்? தலைவர் மூப்பனாருக்கு உரிய கௌரவம் அளிக்காமல் மறுக்கப்பட்டதற்காக! மூப்பனாரை இடது சாரிகள் ஏற்றுக் கொள்ள வில்லை என்று காரணம் காட்டி, அவருக்கு பிரதமர் பதவி மறுக்கப்பட்டபோது, வாய் மூடி இருந்தீர்கள்! ஆனால் லாலு பிரசாத் யாதவ் விஷயத்தில் மார்க்ஸிஸ்ட்டுகள் அவரது பதவி பறிக்கப்பட வேண்டும் என்று முனைப்புடன் இருந்தபோது, லாலுவுக்குச் சாதகமான நிலையை எடுத்தது ஏன்? நாளைக்கு, வை.கோ. வுக்கு மத்திய அரசில் மந்திரி பதவி தர மற்ற கட்சிகள் முடிவு செய்தால், அதனையும் ஏற்றுக் கொண்டு சம்மதம் தெரிவிப்பீர்களா?

**பச்சையப்பன்** : மத்திய அரசு பற்றி நாம் பேச வேண்டாம். மாநில அரசில், த.மா.கா. பொறுப்பான எதிர்க்கட்சியாகச் செயல்பட வில்லை என்பதுதான் என் குற்றச்சாட்டு. சோ. பாலகிருஷ்ணன், கலவரத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குப் போய் வந்த பின், தம்மை வந்து எந்த அதிகாரியும் சந்திக்கவில்லை என்று கூறி னாரே! அதற்குக் கலைஞர் என்ன பதில் சொன் னார்? 'நான் எத்தனையோ வருடம் எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.வாக இருந்திருக்கிறேன். என்னிடமும் எந்த அதிகாரியும் வந்து பேசினதில்லை' என்றார்.

**சாந்தகுமார்** : நீங்கள் எதிர்க்கட்சியை மதிக்கிற ஆளுங்கட்சியாக இருந்தால் என்ன செய்ய வேண்டும்? அமைதிப் பூங்காவாக இருந்த தமிழகத்தில் இன்று ஜாதிக்கலவரங்கள் தலைவிரித்தாடுகின்றன. இதுவரை வழக்க மில்லை என்றாலும், அப்பகுதிகளுக்குச் சுற்றுப் பயணம் சென்று வந்த எதிர்க்கட்சி தலைவரை முதலமைச்சரும், மற்ற அமைச்சர்களும், அதி காரிகளும் சந்தித்துப் பேசலாமா? கூடாதா?

**பச்சையப்பன்** : சட்டசபை பவள விழா வின் போது என்ன ஆயிற்று? சட்டசபையில் காமராஜர் பேசினார் என்று சோ. பால கிருஷ்ணன் எடுத்துக்கூறிய பேச்சு, காமராஜர் பேசியதே இல்லை. அப்போதைய அமைச்சர் சி. சுப்ரமணியம் பேசினதுதான் என்று விழா மேடையிலேயே போட்டு உடைத்தாரே! அப் புறமாவது த.மா.கா. வினருக்கு பொறுப்புணர்வு வர வேண்டாமா?

**சாந்தகுமார்** : இன்னிக்கு, தி.மு.க. ஆட்சி பற்றி நாங்கள் குறை சொல்வது பற்றி ஏன் வருத்தப்படுகிறீர்கள். நீங்கள் ஆட்சிப் பொறுப் பேற்றவுடனேயே எங்கள் தலைவர் மூப்பனார் என்ன சொன்னார்? நாங்கள் எதிரிக்கட்சி யாகச் செயல்பட மாட்டோமே தவிர, எதிர்க் கட்சியாகப் பணியாற்றுவோம்; தவறுகள் நடந்தால் சுட்டிக் காட்டத் தவறமாட்டோம்; தவறுகளுக்கு ஒரு போதும் உடந்தையாக இருக்க மாட்டோம் என்று ரொம்பத் தெளி வாகச் சொன்னாரா இல்லையா? இதுவரை, இரண்டாம் கட்டத் தலைவர்கள் எல்லாம்தான் ஆட்சியை விமர்சனம் செய்து கொண்டிருக் கிறார்கள். மூப்பனார் ஐயா, விமர்சனம் செய்து, குறைகூறவில்லை. இதிலிருந்தே அவர் எவ்வளவு பொறுப்பான தலைவராகச் செயல் படுகிறார் என்று புரியவில்லையா?

**பச்சையப்பன்** : வால்களை இஷ்டப்படி ஆடவிட்டுவிட்டு, தலை சும்மா இருப்பது பொறுப்பான பணியா? மூப்பனார் மௌன மாய் இருந்தால், கீழ்மட்டத் தலைவர்களின் விமர்சனம் சரிதான் என்றுதானே ஆகிறது?

**சாந்தகுமார்** : இதுவரை விமர்சனம் செய்யாவிட்டாலும், உரிய நேரம் வரும்போது, அவர் உங்களைத் தட்டிக் கேட்கத் தயங்க மாட்டார். ஞாபகமிருக்கட்டும்.

**பச்சையப்பன்** : அப்படி அவர் குறை களைச் சுட்டிக் காட்டுகிறபோது, அவை உண் மையாய் இருக்கும் பட்சத்தில், குறைகளை நிவர்த்திக்க உடனடி நடவடிக்கை எடுப்பார் கலைஞர். உண்மைக்குப் புறம்பாய் இருக்குமா னால் தக்க பதிலடி தரத் தயங்கமாட்டார் என் பதை நீங்களும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

**சாந்தகுமார்** : சந்தனக் கடத்தலில் திருப்பத் தூர் எம்.எல்.ஏ. சண்முகம் (தி.மு.க.) சம்பந்தப் பட்டிருப்பதாக 'ஹிந்து' எழுதியபோது நட வடிக்கையா எடுத்தீர்கள்? முதலில் மறுக்க வல்லவா செய்தீர்கள்!

**பச்சையப்பன்** : பிறகு முதல்வரே ஒப்புக் கொண்டு நடவடிக்கை எடுக்கச் சொன்னாரா இல்லையா? நிச்சயம் எடுப்பார்.

தொகுப்பு : **கௌதம்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

● ராவ் மாட்டிக்கொண்டிருக்கிற பல வழக்குகளில், ஜார்கண்ட் முக்தி மோர்ச்சா எம்பிக்களுக்கு லஞ்சம் கொடுத்த வழக்கும் ஒன்று. இதில் ராவின் வழக்குரைஞர்கள் புதிய வாதத்தை முன்வைத்துள்ளனர். அரசியலமைப்புச் சட்டத்தின் 105வது பிரிவின்படி, நாடாளுமன்றத்தில் உறுப்பினர் பேசியது குறித்தோ, வாக்களித்தது குறித்தோ எந்த நீதிமன்றத்திலும் விசாரணைக்கு உட்படுத்த முடியாது என்பதுதான் அந்த வாதம். நாட்டின் நலனை முன்னிட்டு நாடாளுமன்றத்தில் உறுப்பினர்கள் அச்சப்படாமல் தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கான சிறப்புரிமைதான் இந்த விதி. தன் நலனுக்கான நடவடிக்கைகளுக்கும் இந்த விதியைப் பயன்படுத்துவார்கள் என்று தெரிந்திருந்தால் அரசியலமைப்பில் இந்த விதியையே சேர்த்திருக்க மாட்டார்களோ என்னவோ!

● 'புலி வருது, புலி வருது' கதையாகத் தொடர்கிறது பெட்ரோலியப் பொருட்களின் விலை உயர்வு. எண்ணெய்த் தொகுப்பு நிதியில் 15,000கோடி ரூபாய் பற்றாக்குறை இருந்த போது ஆரம்பித்தது இன்று 19,000 கோடியை எட்டிய பிறகும் முடிவு கிடைக்கவில்லை. நன்றி: இடதுசாரிக் கட்சிகள், சமையல் எரிவாயு, டீசல், மண்ணெண்ணெய் ஆகிய பொருட்களுக்குத் தரப்படும் மானியம் தான் இந்தப் பற்றாக்குறைக்குக் காரணம். மானியம் கொஞ்சம் கொஞ்சமாக முற்றிலும் நிறுத்தப்படாதவரை இந்தியப் பொருளாதாரத்துக்கு தலைவலிதான். இது அனைவருக்கும் தெரியும். இருந்தாலும் விலை ஏற்ற முடியவில்லை. அடுத்த மாதத்தில் 'விலைஏற்ற எதிர்ப்புப் போராட்ட' நாடகம் அரங்கேறுவதை எதிர்ப்பார்க்கலாம்.

● இந்திய விடுதலையின் பொன்விழா வந்தாலும் வந்தது, பத்திரிகைகளுக்கு ஏகப்பட்ட விளம்பரங்கள். புதிய ரயில்களைத் துவக்கும் ரயில்வே அமைச்சகம் முதல், 'இந்தியர்களுக்கு மற்றொரு உரிமை கிடைத்துவிட்டது' என்று கூறும் சர்ஃப் வரை என ஏகப்பட்ட விளம்பரங்கள். ஏதேதோ சலுகைகள், தள்ளுபடிகள். போகிற போக்கைப் பார்த்தால், "பொன் விழாவை முன்னிட்டு 50 பைசா கூட பிச்சையாக ஏற்றுக் கொள்ளப்படும்" என்று பிச்சைக்காரர்கள் சார்பில் விளம்பரம் வந்தாலும் வியப்பதற்கில்லை.

● ஒரு சராசரி இந்தியனின் ஆண்டு வருமானம் ரூ. 8,237 என்றால் ஒரு தில்லிவாசியின் சராசரி வருமானம் ரூ. 17,068. அட அதற்குள் சென்னைவாசிகள் பொறாமைப்படாதீர்கள். இதோ இன்னும் சில புள்ளி விவரங்கள்: அனுமதியின்றி தண்ணீர் எடுக்கப்படுவதால் தில்லி குடிநீர் வாரியத்துக்கு 30% வருமானம் இழப்பு; மின்சாரத் திருட்டு போன்ற காரணங்களால் மின்வாரியம் 50% வருவாய் இழக்கிறது; 90% கட்டடங்கள் விதிகளுக்குப் புறம்பானவை; 80% காவலர்கள் கறை படிந்தவர்கள். இந்தியாவில் சுற்றுச்சூழல் மாசடைந்த நகரங்களில் முதன்மையானது தில்லி; இதனால் ஆறு பள்ளிக் குழந்தைகளில் ஒருவருக்கு ஆஸ்த்மா!

● ஜெயிலில் இருந்து கொண்டே தேர்தலில் போட்டியிட்டு வென்றதெல்லாம் பழைய கதை. ஜெயிலில் இருந்து கொண்டே ஆட்சி செய்வது தான் புதிய கதை. 'நான் ஜெயிலுக்குப் போனாலும் அங்கிருந்தே ஆட்சி நடத்துவேன்' என்று லாலு கூறியபோது யாருக்கும் புரியவில்லை. இப்போதுதான் புரிகிறது. அதுசரி... 'சொன்னதைச் செய்வேன்' மந்திரம் லாலுவுக்கு எப்படித் தெரிந்தது!

## லாலுவால் மகிழும் செல்போன்!



● முத்து மருத்துவமனையில் தேவையான வசதிகள் இல்லாததால்(!) லாலுவை தில்லியிலுள்ள எஸ்கார்ட் மருத்துவமனைக்கு மாற்றப்போகிறார்களாம் என்ற பேச்சு எழுந்ததுமே செல்லுலார்போன் கம்பெனிகள் தங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கப் போகிறது என்று மகிழ ஆரம்பித்து விட்டனவாம்!

புது தில்லியிலிருந்து:
**புதியவன்**

# ராமன் அப்துல்லா

இரு நண்பர்களின் ஆள்மாறாட்டக் கதை. ராமன், அப்துல்லாவாகப் பெயரையும் வேஷத்தையும் மாற்றிக் கொண்டு, அவன் சொன்னபடி, அவனுக்குக் கிடைத்த வேலையில் இவன் போய்ச் சேருவதும் அதன் தொடர்ச்சியாக ஏற்படும் வழக்கமான சினிமாச் சிக்கல்களும். சபாஷ் மீனா தொடங்கி, சமகால கிரேஸி மோகன் டிராமாக்கள் வரை சுமார் நூறு தடவை பார்த்தாகி விட்டது. மறுபடியும் தொட்டிருக்கிறார் 'படைப்பாளி' பாலுமகேந்திரா. (டைட்டில் கார்டிலேயே இதைத்தான் போடுகிறார்கள்.)

சரித்திரத்திலேயே முதல் முறையாகத் தம் படத்து ஹீரோயினை டம்மியாக உபயோகப்படுத்தியிருக்கிறார் பாலு. நடிக்க வாய்ப்பில்லை, பேச வசனமில்லை, ரசிக்க அவ்வப்போது க்ளோஸப் இல்லை. அட, காதலிலாவது கொஞ்சம் கருணை காட்டியிருக்கக் கூடாதோ? கனவுப் பாட்டில் கூட பைக்கில் பறந்து விடுகிறார்.



டைட்டாக ஒரு முத்தக்காட்சி வருகிறது. நாயகன், நாயகிக்குப் பல் சொத்தை ஏதும் இருக்கிறதா என்று ஆராய்கிறாரா என்று அனுமானிப்பதற்குள் அடுத்த ஷாட்டும் ஓடியே விடுகிறது!

கல்யாண வீட்டு சமையலறை மாதிரி எக்கச்சக்கப் பாத்திரங்கள். எதையும் விட்டுவிடாமல் துலங்கச் செய்திருப்பதுதான் இந்தப் படத்தில் பாலு மகேந்திராவின் குறிப்பிடும்படியான சோலி. சிவகுமாரோ, சார்லியோ ஜொலிப்பது பிரமாதமல்ல. வில்லனாகப் பார்த்துப் பழகிய கிட்டியும் டீவியில் உரக்க 'ஆட்டம்' போடும் பிருதிவி ராஜையும் மிகச்சில காட்சிகளில் மட்டுமே தலை நீட்டிப் போகும் அந்தக் கோவில் பூசாரியும் (யார்?) காட்சிக்குக் குறுக்கே ஓடும் நாய், காரையும் கூடக் கவிதையாக்கியிருக்கிறார். இந்த கவனத்தைக் கதையில் காட்டியிருக்கலாம். சற்றே திரைக்கதையிலும்.

முதல் பாதி வரைக்கும் தெரிந்த கதைதானென்றாலும் நாடகத்தனம்தானென்றாலும் நகைச்சுவை நூலால் இறுகக் கட்டி சலிப்பை மறைக்கச் செய்கிற இயக்குநர், பின்னால் அநாவசிய சண்டைகள், பம்பாய் வில்லன் கும்பல், கொடோன் கிளைமாக்ஸ் என்று தலைகுப்புற விழுந்திருக்க வேண்டாம்.

உக்கிரமாக சண்டை போட்டுக் கொண்டிருக்கிற மகாவில்லன்கள், சிவகுமார் வந்து ஒரு பார்வை பார்த்ததும் சண்டையை நிறுத்தி விட்டுத் திரும்பிப்போவது - தமாஷுக்காகவா? சகிக்கவில்லை.

அபூர்வமாக அத்தனை பாடல்களையும் இந்த... தேன், பால், பன்னீர், தென்றல் போன்ற வஸ்துக்களில் தடவித் தந்திருக்கிறார் இளையராஜா. படத்தில் மிகவும் ஆறுதலான அம்சம் அது ஒன்றுதான். ஆனால், சம்பந்தமில்லாமல் விக்னேஷும் கரணும் திடீர் திடீரென்று பாடல் டிராக்கை முன்னறிவிப்பின்றிப் பிடித்துக் கொள்வது கடுப்பு தருகிறது.

டைட்டில் தவிர, பட ஆரம்பத்தில் மத ஒற்றுமை பற்றி ஒரு நல்ல டைட்டில் ஸாங் வருகிறது. ஆனால் படத்தில் மத ஒற்றுமை சம்பந்தமாக விசேஷமாக ஒன்றுமில்லை. குப்புசாமி முனுசாமி என்று கூட டைட்டில் வைத்திருக்கலாம்.

— ஆர்.பி.ஆர்.

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621**
**Annual Subscription : India Rs. 208/-; Overseas Rs. 1200/- (Air Mail)**
**Half Yearly Subscription : India Rs. 104/-; Overseas Rs. 600/- (Air Mail)**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka